


சிவ.

பரப்பிரமணே நம:

# பிரபோதசந்திரோதய வசநம்

[அல்லது மெய்ஞ்ஞானவிளக்கம்]

இது

காஞ்சீபுரநிவாசி

வித்வ சிரேஷ்டராகிய

ஸ்ரீமாந் - இராமயோகிக் ளவர்களால்

வசனரூபமாக வியற்றப்பட்டு,



காலஞ்சென்ற சை-இரத்தினசெட்டியார் குமாரர்

சை. சிவசங்கரசெட்டியார், பி.ஏ.

அவர்களால் தமது

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1902-ஞு நவம்பர்மீ.



[விலை ரூபா 1.]

9-2

உ

கடவுள்துணை.

# முகவுரை.

புண்ணிய பூமியென்று புலவர்களால் புகழ்ந்து துதிக்கப்படுகின்ற பரதகண்டத்தின்கண் வைதிகமதங்களான மீமாம்சம், சாங்கியம், தர்க்கம், யோகம், சைவ முதலியவை வேதாந்த சித்தாந்தத்தைக் கைக்கொண்டொழுகி, துக்க நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியுமாகிய மோட்சத்தை மக்களடைவதற்கு முக்கிய சாதனங்களா யுள்ளனவென்றும், உலோகாயதம், புத்தம், சமணம் முதலிய அவைதிக மதங்கள் வேதாந்த சித்தாந்தத்தை யனுசரித்தொழுகுவதற்கு முக்கிய சாதனங்களல்லவென்றும் விளக்குமாறு கி. பி. 1200 - ம் ஆண்டில் விஜயநகரத்தின்கண் (?) பண்டித சிரோன்மணியாய் விளக்கமுற்றிருந்த கிருஷ்ண மிசிரரென்னும் அந்தணகுல திலகர் வேதாந்த சித்தாந்தத்தை யனுஷ்டானத்திற்கொண்டு வருதற்குப் பெருந்தடையாயுள்ள மனம், அகங்காரம், காமம், கோபம், மற்சரம், மதம், மானம், சங்கற்பம், சந்தேகமுதலியவற்றையும், அவ்வேதாந்த சித்தாந்தத்தை யனுஷ்டித்தற்குச் சாதனமாயுள்ள விவேகம், நிரூபகம், பொறுமை, சந்தோஷம், சமம், தமம், விராகம், சுசீலம், தவம், இயமாதிகள் முதலியவற்றையும் புருஷர்களாகவும் மனைவியர்களாகவும், புத்திரர்களாகவும் புத்திரிகளாகவும் தக்கவாறு உருவகப்படுத்தி, சுலபமாய் வேதாந்த சித்தாந்தத்தை யறிந்துகொள்ளுமாறு நாடகவடிவமாய்ப் பிரபோத சந்திரோதயமென்னு மோர் அரியநூலைச் சம்ஸ்கிருத பாஷையில் இயற்றி யருளினதை அப்பாஷாப்பியாசமில்லாத தமிழ்ப்பண்டிதரும் எளிதில் அறிந்து கொள்ளுமாறு, கி. பி. 1600-ம் ஆண்டு இலக்கணவிளக்கச் சிறப்புப்பாயிரத்தில் "மாதைய ரதிபன் வரகுண மேரு, கல்விக் கெல்லை கருணைக் காரகம், பெருமான் மெய்த் தவப் பேறெனத் தோன்றிய, திருமா லுலகஞ் செவ்

விதிற் புரக்கும், மேதகு புகழ்த்திரு வேங்கட நாதன், ஓதினனாக" என்றுள்ளபடி இலக்கண விளக்கமியற்றிய திருவாரூர் வைத்தியநாத தேசிகர் காலத்து விளங்கிய மாதைநகர்க் கரசான திருவேங்கடநாதனென்னும் திருவேங்கட சுவாமிகள் தமது ஞானகுருவான இராகவாநந்தரது கட்டளைப்படி காவிய இலக்கணமமையச் செய்யுள் வடிவமாக மெய்ஞ்ஞானவிளக்கமென்று பேரிட்டுச் சொன்னோக்கும், பொருணோக்கும், தொடைநோக்கும், நடைநோக்கும், வேறெந்நோக்கும் நன்றாகப் பொருந்த ஓர் நூலியற்றியருளினர்.

அவ்வாறியற்றியுள்ள பிரபோத சந்திரோதயமென்னும் இம்மெய்ஞ்ஞானவிளக்கம் இலக்கண இலக்கியவுணர்ச்சியுள்ளார்க்கன்றி யேனையோர்க்குப் பயன்படாதிருப்பது கருதி, இவ்வரிய பெரியநூலை வித்வ சிரேஷ்டராகிய காஞ்சிபுர நிவாசி ஸ்ரீமத் இராமயோகிகளவர்களைக்கொண்டு தெள்ளிய தமிழ் நடையில் வசன வடிவமாக வெழுதுவித் தச்சிட்டலாயிற்று.

இந்நூலை வாசிப்பதால் பிரமம், மாயை, மனம், பிரவிருத்தி, நிவிர்த்தி, மோகம், அகங்கார முதலியவைகளின் இலக்கணங்களும், காமக்குரோதாதிகளுண்டாயபோ துண்டாகும் மெய்ப்பாடுகளின் தன்மைகளும், இன்னின்ன குணங்களுக்கு இன்னின்னகுணங்கள் மாறுபட்டிருக்கின்றன வென்பதின் சொரூபமும், சுபுத்தியோடு கூடிய விவேகமுடையவர்களுக்கே உபநிடதமும் கீதையும் பயன்படுமென்பதும், உலோகாயத முதலிய மதங்களின் தன்மைகளும் அவற்றின் கண்டனங்களும், தர்க்கம் வேதாந்தசித்தாந்தத்தை யறிதற்கு அத்தியந்த சாதனமாமென்பதும், மீமாம்சம் முதலிய மதங்களின் சொரூபங்களும், அவற்றுள் வேதாந்தசித்தாந்தத்திற்கு விரோதமாயுள்ள விஷயங்கள் இன்னின்னவென்பதும், வேதாந்தத்தின் நிச்சயமின்னதென்பதும், வேறுபிறவு மறிந்துகொள்ளலாமென்க.

சுபமஸ்து.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# பிரபோதசந்திரோதய வசநச் சருக்க அட்டவணை.

ஆக சருக்கத்தொகை மொத்தம் ௪அ.

பிரபோதசந்திரோதய வசநச்

சருக்க அட்டவணை

முற்றிற்று.

---

உ

கணபதிதுணை.

# மோகனுதியர், விவேகனுதியர்

## வம்சபரம்பரை அட்டவணை.

பிரமத்தினோடு மாயை கலந்து
மானதன் பிறந்தனன்.
மானதனுக்குப் பிரவிர்த்தி, நிவிர்த்தியென
இரண்டு பெண்சாதிகள்:
அவர்களுள்

| பிரவிர்த்தியீன்ற மக்கள். ஆண். | பெண். | நிவிர்த்தியீன்ற மக்கள். ஆண். | பெண். |
|---|---|---|---|
| 1 மோகன் | 1 தீவினை | 1 விவேகன் | 1 மயித்திரி |
| 2 அசங்காரன் | 2 கட்டி | 2 நிரூபகன் | 2 கருணை |
| 3 காமன் | 3 அகீர்த்தி | 3 பொறை | 3 நீதி |
| 4 கோபன் | 4 அநீதி | 4 சந்தோடன் | 4 முதிதை |
| 5 மச்சரன் | | 5 சமன் | 5 உபேட்சை |
| 6 மதன் | | 6 தமன் | |
| 7 மானன் | | 7 விராகன் | |
| 8 இராசதன் | | 8 சுசீலன் | |
| 9 தாமதன் | | 9 தவன் | |
| 10 சங்கற்பன் | | 10 சத்துவன் | |
| 11 சந்தேகன் | | 11 இயமன் | |
| | | 12 நியமன் | |
| | | 13 ஆதனன் | |
| | | 14 பிராணுயாமன் | |
| | | 15 பிரத்தியாகாரன் | |
| | | 16 தாரணன் | |
| | | 17 தியானன் | |
| | | 18 சமாதி | |

மோகனுதியர், விவேகனுதியர்
வம்சபரம்பரை அட்டவணை
முற்றிற்று.

[தனித்தனி ஒவ்வொருவரின் குடும்ப வரலாறு.]

## மோகனுதியர்கள்.

| இலக்கம். | மோகனுதியரின் பெயர். | மனைவியர், பார்த்தாக்கள் பெயர். | பிள்ளைகளின் பெயர். | பிள்ளைகளின் மனைவியர்பெயர், பார்த்தா பெயர். | பவுத்ரர்பவுத்ரிகள் பெயர். | பவுத்ரர் மனைவியரும் பவுத்ரிகள் பார்த்தாக்களும். | பிரபவுத்ரர் பிரபவுத்ரிகள் பெயர். |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | மோகன் | துன்மதி | ,, | ,, | ,, | ,, | ,, |
| | | 1, பாஷண்டவிஞ்சை 2 | அஞ்ஞன் | ,, | ,, | ,, | ,, |
| | | | | ,, | ,, | ,, | ,, |
| 2 | அகங்காரன் | அகந்தை | பெண் மமதை, ஆண் லோபன் | இச்சை | இடம்பர் | வஞ்சனை | அசத்யன் |
| 3 | காமன் | இரதி | விடயானந்தன் | ,, | ,, | ,, | ,, |
| 4 | கோபன் | கொலை | கலகன் | ,, | ,, | | ,, |
| 5 | மச்சரன் | அசூயை | வயிரன் | அவமரியாதை | அக்ரமன் | ,, | ,, |
| 6 | மதன் | மறதி | அனத்தன் | கெடுதி | நாசன் | ,, | ,, |
| 7 | மானன் | வெகுமதி | உற்சாகன் | ,, | ,, | ,, | ,, |
| 8 | இராசதன் | முயற்சி | பெண் சிரத்தை, ஆண் காரியன் | ,, | ,, | ,, | ,, |
| 9 | தாமதன் | சோம்பல் | பெ-சிரத்தை, நித்திரை | ,, | ,, | ,, | ,, |
| 10 | சங்கற்பன் | கற்பனை | விகற்பன் | யோசனை | வெகுமுகர் | ,, | ,, |
| 11 | சந்தேகன் | அசித்தி | கலக்கன் | ,, | ,, | ,, | ,, |
| | பெண்கள் | | | | | | |
| 12 | தீவினை | அனுசாரன் | ,, | ,, | ,, | ,, | ,, |
| 13 | அகீர்த்தி | ,, | பெ-மிச்சாதிட்டி, ஆ-விடயசங்கன் | ,, | ,, | ,, | ,, |
| 14 | கபடி | கலியன் | சஞ்சலன் | அதோகதி | துக்கன் | ,, | ,, |
| 15 | அநீதி | ,, | அதன்மன் | ,, | ,, | ,, | ,, |

# விவேகனதியர்கள்.

| இலக்கம். | விவேகனதியர்கள் பெயர். | மனைவியர்கள், பர்த்தாக்கள் பெயர். | பிள்ளைகளின் பெயர். |
|---|---|---|---|
| 1 | விவேகன் | சுமதி, உபநிடதை | உபநிடதைவயிற்றில் பிரபோதன் |
| 2 | நிருபன் | யுத்தி | நிச்சயன் |
| 3 | பொறை | உறுதி | அடக்கன் |
| 4 | சந்தோடன் | மகிழ்ச்சி | அற்புதயன் |
| 5 | சமன் | சாந்தி | அகமுகன் |
| 6 | தமன் | தாந்தி | தனிவத்துநோக்குவான் |
| 7 | விராகன் | விரத்தி | சுகன் |
| 8 | சுசிலன் | கீர்த்தி | பிரசித்தி |
| 9 | தவன் | நல்விருத்தி | பரோபகாரன் |
| 10 | தத்துவன் | புனிதை | தருமன், பெ - சிரத்தை |
| 11 | இயமன் | அயிஞ்சை | இரவாமை |
| 12 | நியமன் | மனநிலை | சத்தியன் |
| 13 | ஆதனன் | திதி | தேயன் |
| 14 | பிராணயாமன் | பூர்த்தி | தீர்க்கவாயு |
| 15 | பிரத்தியாகாரன் | மீட்சி | நிருலேபன் |
| 16 | தியானன் | காட்சி | நிர்ச்சந்தேகன் |
| 17 | தாரணன் | திருதி | அப்பிரமன், ஆத்திகன் |
| 18 | சமாதி | தன்னிலை | நிருவிகற்பன், மோனன் |
| | பெண்கள் | | |
| 19 | மயித்திரி | சமாதானன் | ,, |
| 20 | கருணை | தருமன் | ,, |
| 21 | நீதி | நியாயன் | ,, |
| 22 | முதிதை | அவிரோதன் | ,, |
| 23 | உபேட்சை | பூரணன் | ,, |

மோகனதியர், விவேகனதியர் வம்ச பரம்பரை
அட்டவணை முற்றிற்று.

---

[தனித்தனி ஒவ்வொருவரின் குடும்ப வரலாறு.]

# மோகனுதியர்கள்.

| இலக்கம். | மோகனுதியரின் பெயர். | மனைவியர், பர்த்தாக்கள் பெயர். | பிள்ளைகளின் பெயர். | பிள்ளைகளின் மனைவியர்பெயர், பர்த்தா பெயர். | பவுத்ரர்பவுத்ரிகள் பெயர். | பவுத்ரர் மனைவியரும் பவுத்ரிகள் பர்த்தாக்களும். | பிரபவுத்ரர் பிரபவுத்ரிகள் பெயர். |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | மோகன் | துன்மதி | ,, | ,, | ,, | ,, | ,, |
| | | 1, பாஷண்டவி | அஞ்ஞன் | ,, | ,, | ,, | ,, |
| | | ஞ்சை 2 | | ,, | ,, | ,, | ,, |
| 2 | அகங்காரன் | அகந்தை | பெண் மமதை, ஆண் லோபன் | இச்சை | இடம்பர் | வஞ்சனை | அசத்யன் |
| 3 | காமன் | இரதி | விடயானந்தன் | ,, | ,, | ,, | ,, |
| 4 | கோபன் | கொலை | கலகன் | ,, | ,, | | ,, |
| 5 | மச்சரன் | அசூயை | வயிரன் | அவமரியாதை | அக்ரமன் | ,, | ,, |
| 6 | மதன் | மறதி | அனத்தன் | கெடுதி | நாசன் | ,, | ,, |
| 7 | மானன் | வெகுமதி | உற்சாகன் | ,, | ,, | ,, | ,, |
| 8 | இராசதன் | முயற்சி | பெண் சிரத்தை, ஆண் காரியன் | ,, | ,, | ,, | ,, |
| 9 | தாமதன் | சோம்பல் | பெ-சிரத்தை, நித்திரை | ,, | ,, | ,, | ,, |
| 10 | சங்கற்பன் | கற்பனை | விகற்பன் | யோசனை | வெகுமுகர் | ,, | ,, |
| 11 | சந்தேகன் | அசித்தி | கலக்கன் | ,, | ,, | ,, | ,, |
| | பெண்கள் | | | | | | |
| 12 | தீவினை | அனுசாரன் | ,, | ,, | ,, | ,, | ,, |
| 13 | அகீர்த்தி | ,, | பெ-மிச்சாதிட்டி, ஆ-விடயசங்கன் | ,, | ,, | ,, | ,, |
| 14 | கபடி | கலியன் | சஞ்சலன் | அதோகதி | துக்கன் | ,, | ,, |
| 15 | அநீதி | ,, | அதன்மன் | ,, | ,, | ,, | ,, |

## விவேகனுதியர்கள்.

| இலக்கம். | விவேகனுதியர்கள் பெயர். | மனைவியர்கள், பர்த்தாக்கள் பெயர். | பிள்ளைகளின் பெயர். |
|---|---|---|---|
| 1 | விவேகன் | சுமதி, உபநிடதை | உபநிடதைவயிற்றில் பிரபோதன் |
| 2 | நிரூபன் | யுத்தி | நிச்சயன் |
| 3 | பொறை | உறுதி | அடக்கன் |
| 4 | சந்தோடன் | மகிழ்ச்சி | அற்புதயன் |
| 5 | சமன் | சாந்தி | அகமுகன் |
| 6 | தமன் | தாந்தி | தனிவத்துநோக்குவான் |
| 7 | விராகன் | விரத்தி | சுகன் |
| 8 | சுசிலன் | கீர்த்தி | பிரசித்தி |
| 9 | தவன் | நல்விருத்தி | பரோபகாரன் |
| 10 | தத்துவன் | புனிதை | தருமன், பெ - சிரத்தை |
| 11 | இயமன் | அயிஞ்சை | இரவாமை |
| 12 | நியமன் | மனநிலை | சத்தியன் |
| 13 | ஆதனன் | திதி | தேயன் |
| 14 | பிராணயாமன் | பூர்த்தி | தீர்க்கவாயு |
| 15 | பிரத்தியாகாரன் | மீட்சி | நிருலேபன் |
| 16 | தியானன் | காட்சி | நிர்ச்சந்தேகன் |
| 17 | தாரணன் | திருதி | அப்பிரமன், ஆத்திகன் |
| 18 | சமாதி | தன்னிலை | நிருவிகற்பன், மோனன் |
| | பெண்கள் | | |
| 19 | மயித்திரி | சமாதானன் | ,, |
| 20 | கருணை | தருமன் | ,, |
| 21 | நீதி | நியாயன் | ,, |
| 22 | முதிதை | அவிரோதன் | ,, |
| 23 | உபேட்சை | பூரணன் | ,, |

மோகனுதியர், விவேகனுதியர் வம்ச பரம்பரை

அட்டவணை முற்றிற்று.



ஓம்

பரப்பிரமணேநமஃ

# பிரபோத சந்திரோதய வசநம்.



## கடவுள் வாழ்த்து.

திருமடந்தை தன் காதலன் சிவந்ததாண் மலருங்
கருணையந் தடங் கண்களு நாபியங்கமலத்
தோருதுழந்தையு முடுத்த பொன்னுடையுந் தொடுத்த
மருமலிந்த டைந்துளவு மென்மனத்துள் வாழியவே.

---

## பாயிரம்.



பெருமை பொருந்திய காவிரி நதியானது பக்கங்களிற் பரவிப் பெருகுதலால், புதுமையாகிய அழகிய இளவாழைகளும் இளந்தெங்குகளும் காய்க்குலைகளையுடைய இளங் கமுகுகளும் நெருங்கி, நீண்ட கதிர்க்கற்றையையுடைய செந்நெற்பயிரும் கருப்பந் தோட்டங்களும் இவைபோல்வனவாகிய பிறவும் நிலைபெற்றுப் பெருக்கமடைந் திருக்கிற சோழநாட்டிலே ஒருவள்ளலானவன் பூர்வகாலத்திலிருந்தனன். அவன் யாரெனின், அழகிய ஒளிவீசுகின்ற பொன்னின்மீது நவரத்தினங்கள் பதிக்கப்பெற்ற செய்குன்றுகளும் மிகுந்த வெண்மையாகிய நிலாவீசுகின்ற மேல் முற்றங்களும் முத்துக்களிழைத்த ஏழ் நிலைகளையுடைய மாடங்களும் கூடங்களும் எவ்விடத்தும் மேகக் கூட்டங்கள் தவழ்தற்குரிய உயர்ந்த மதில்களும் நெருங்கியிருக்கிற மாதையென்னும் பெரியபட்டணத்திற்கு அரசனாயிருப்பவன். அவன் அந்தணர் குலத்திற்குத் திலகம் போல்பவனும், பேரறிஞர்களுக்குத் திருமுடிபோல்பவனும், மந்திரங்களெல்லா மொருவடிவு கொண்டாற் போல்பவனும்,

சதுர்வித புருஷார்த்தங்களைத் தருகின்ற பழைய வேத ங்கள் தவழ்கின்ற நாவினையுடையவனும், கற்பகத்தரு வை நிகர்த்த கையை யுடையவனும், தன் செங்கோற் கீழ் வாழ்வோர்க்கு அறம் பொருள் இன்பம் வீடு என்று சொல்லப்படுகின்ற நால்வகைப் புருஷார்த்தங் களைத் தெரிவித்து அவர்களை அப்புருஷார்த்தங்களை யடைதற்குரிய நல்வழியில் செலுத்துந் தொழிலை மேற் கொண்டவனும், உள்ளும் புறம்பும் ஒருசேரப் பரிசுத்த மானவனும், பாவங்கள் குறையும்படி அறநூல்களை வளர்க்கின்ற மெய்ந் நெறியையுடையவனும், உண்மை யும் பழைமையு மமைந்த வேதங்களால் சொல்லப் பட்ட மார்க்கங்களை நன்குணர்ந்து ஊழிபெயரினும் நித்தியநைமித்திக நெறியினின்றும் தவறுதபடி அவற் றைப் பத்தியோடு அனுஷ்டித்து வருகின்ற தன்மை யை மேற்கொண்டவனும், உலகத்திலுள்ள எல்லா ருடைய எண்ணங்களையும் அறிந்து தன்னிடத்துக் கொண்டு காட்டுந் தன்மையினுல் கண்ணுடிபோல்பவ னும், திண்ணிய புயங்களையுடைய அரசர்களது செம் பொன் மாமுடிகள் படியப்பெற்ற பாதங்களையுடையவ னும், எண்டிசைகளும் பரவிய கீர்த்தியை யுடையவனும், அரசுரிமைக்குரிய பற்பலதொழில்களை மேற்கொண்ட காலத்தும் குடும்பபார கிருத்தியங்களை மேற்கொண்ட காலத்தும் அவைகளில் சிறிதும் பற்றில்லாமல் தாம ரை யிலையின் நீர்போல் தோய்ந்தும் தோயாதிருப்பவ னும், பூண்ட பெருஞ் செல்வத்தோடு கூடியிருந்தும் பலவுறவினர்களோடு அளவளாவியும் இராச்சிய பார த்தை நடத்தியும் இவைகளில் சிறிதும்பற்றின்றி மெய் ஞ்ஞானநிலையை யடைந்திருந்த ஜநக சக்ரவர்த்தியைப் போல மெய்ஞ்ஞான நிலையை யடைந்திருப்பவனும், சர்வேசுவரனைப் பொற்றூணினின்றும் எனக்கெதிரே தோன்றியருள வேண்டுமென்று மிக்க அன்போடழை த்த பிரகலாதன் போலப் பச்சென்ற நிறத்தோடு

கூடிய கோபால கிருஷ்ணனை நாள்தோறும் பூசனை செய்கின்ற சிறந்த பத்தியுடையவனும், கற்கவேண்டு வனவெல்லாங் கற்று அவற்று லுண்டாவதாகிய பய னில் மனம் பொருந்தாவகை பற்பல தருமங்களைச் செய்து அவையாவும் ஸ்ரீ கண்ணபிரானுக்கே சமர்ப்ப ணஞ் செய்கின்ற அன்புடையவனும், நீலமேகவண்ண னாகிய திருமாலின் திருவுந்தித் தாமரையிற் றோன்றின சதுர்முகனுக்கு நிகராய்ப் பொறுமை யுண்மை நல்லறி வாகிய இவற்றிற்குக் கடல் போல்பவனும், அந்தத் திருமாலின் பெருமைபொருந்திய வரத்தினல் அவதரி த்தவனும், சீதாநாயகனாகிய ஸ்ரீராமபிரானைப்போல அஷ்டதிக்கிலுள்ளாரையும் நீதியோடு காப்பாற்றி அவ ர்களை நன்னெறியில் நடத்தின வேதபாரகனும், திரு வேங்கடேந்திரனென்னும் திருநாமத்தையுடையவனும், பிறர்மாட்டுத் தயை புரிவதில் சங்கநிதி பதுமநிதி போல்பவனும் அரசர்க்கரசனுமாவன்.

அத்தகையோன் அறநூல்கள் கூறியவாறு உலகத் தைப் பாதுகாத்துவருங்காலத்தில், அருட்கடலும் சற் குருவுமாகிய இராகவாநந்தரது திருவடித் தாமரைகளை வழிபட்டு வருவானாயினன். அவ்வாறு வழிபட்டுவரும் நாளிலொருநாள் அவ்விராகவாநந்த ரென்னும் சற்குரு நாதர் அவ்வரசனது உள்ளக் குறிப்பை யறிந்து, ஓ அரசனே! உனக்கு யான் சொல்லவேண்டுவ தொன் றுண்டு, அதனைச் சொல்லுகிறேன் சிரத்தையோடு கேட்பாயாக வென்றுகூறி, முகமலர்ச்சியோடு தர்மார்த்த காமங்கள் உலகத்தார் அடையும்படி யவர்களைத் திருத்தின நீ அவர்கள் மோட்சத்தையு மடையும்படி ஓர் ஞானநூல் செய்யக்கடவையென்றருளினர். அத னைக்கேட்ட அரசன் சற்குருநாதரை நோக்கி, சுவாமீ! தேவரீர் நியமித்தபடி ஞானநூலைச் செய்தல் துறவறத் தை யடைந்த மகான்களுக்கே யன்றி, இல்லறம் பூண்டு வாழ்கின்ற எம்போல்வாருக்கு இயல்வதன்றென்று

விண்ணப்பஞ் செய்தனன். அவ்விண்ணப்பத்தைக் கேட்ட இராகவாநந்த யோகியானவர் அரசனை நோக்கி, அரசனே! ஞானியர் இல்லற வாழ்க்கையி லிருந்தால் அவர்களுக்கோர் கெடுதியுமில்லை, அஞ்ஞானியர் காட்டிலும் மலைக்குகையிலும் வாழ்ந்தாலும் ஒரு நன்மையுமில்லை. நீண்ட வுடம்பினையுடைய பெரும் பாம்பு மலைக்குகையில் வாழ்ந்தாலும் மிக்ககோபத்தையுடைய புலியானது காட்டில் வாழ்ந்தாலும் என்ன பிரயோசனத்தை அவைகளடையும்? மெய்ஞ்ஞானியாயிருப்பவன் இல்லறத்திலிருந்தாலும் துறவறத்திலிருந்தாலும் அவனுக்கு அவைகளால் உளவாகின்ற சிறுமை பெருமைகளில்லை. ஆதலால் நீ இல்லறத்தானென்று அஞ்சவேண்டாம். யானியமித்தபடியே யொரு ஞானநூலை யியற்றுவாயென்று கட்டளையிட்டார்.

அரிதாகிய தவத்தை யுடையவராகிய இராகவாநந்த யோகிகள் அருளிச்செய்த சொற்களெல்லாவற்றையும் அரசன் தன் மனத்திற்கொண்டு, களிப்பினால் உடல்பூரித்து, தன்பொருட்செல்வ முழுதும் உலகத்தார்க்குக் கொடுத்தல்போல, அருட்செல்வத்தையும் (ஞானச் செல்வத்தையும்) கொடுக்கவேண்டுமென்று சிந்தித்து, நன்மையைத்தருகிற வேதாந்த நூல்களெல்லாவற்றையும் தொகுத்து ஆராய்ந்து, உலகவழக்குக்கு விரோதிக்காமல் உருவகப்படுத்தி, யாவருக்கும் மெய்ஞ்ஞானத்தைத் தருகிற இனிய கதையொன்றை எக்காலத்தும் உலகத்தில் நிலைபெற்று விளங்கும்படி செய்யவேண்டுமென்று தன் மனத்தில் நிச்சயித்து, உலகிலுள்ள மனிதருக்கு ஆயுளோ அற்பம், அந்த அற்ப ஆயுளுள்ளும் கொடியபிணி, இளமை, மூப்பு, தூக்கம், சோம்பல், ஆசை, மநோசலநம் முதலியவற்றை நீக்கிக் கற்பது அரிது, கற்றாலும் தமது அறிவாகிய கொள்கலம் மிகச் சிறிது, ஞானநூற் கடல் மிகப்பெரிது, என்று இவை முதலிய விஷயங்களை நன்றாய்ச் சிந்தித்து, முற்காலத்

தில் திருப்பாற்கடலைத் திருமாலானவர் கடைந்து அதி ல் உண்டாகிய அமிர்தத்தை யெடுத்துத் தேவர்களுக் குக் கொடுத்தாற்போல, வேதாந்தமாகிய பாற்கடலைத் தனது புத்தியாகிய மத்தினுற் கடைந்து, ஞானமிர்தத் தைத் திரட்டி யெடுத்து, இவ்வுலகத்தில் பிரபோதசந்தி ரோதயம் என்னும் பெயருள்ள ஒரு நாடகத்தைச் செய்த கிருஷ்ணமிச்சிரனும் நாணும்படி திருவேங்கடே ந்திரனுனவன் அந்த நாடகத்தைப் பூசுரர்க்கு உபயோ கமாகும்படி வடமொழியிற் செய்ததுமல்லாமல், மற் றெல்லா வருணத்தார்க்கும் உபயோகமாகும்படி தெ ன்மொழியிலும் கற்பதற்கெளிய நடையிற் செய்தரு ளினுன்.

பாயிரம் முற்றிற்று.

---

## 1. உற்பத்திச் சருக்கம்.

நீர்ப்பெருக்கைக் கானலினிடத்துக் கண்டாற் போல, ஆகாய முதலிய பஞ்சபூதங்கள் ஒன்றிலொன் றுண்டாகி வேறுன்றி உலகவுருவாய், ஆராய்கின்ற மெய் யுணர்வில்லாதவர்களுக்கு உண்மையாகவும் அவ்வுணர் வுள்ளவர்க்குப் பொய்யாகவும் போகின்ற கயிற்றரவு போலுதலால் அதின்தொடர்பை விடுத்து, பரிபூரணு நந்த ரூபமாய் நிர்மலமாய்த் தழைத்தோங்குகின்ற பேரொளியாய் அழகைக் கொண்டிருக்கிற ஆத்மபோத த்தை வணங்கி, இதயகமலத்தில் வைத்து எக்காலத் தும் வாழ்வோம்.

இடைபிங்கலைகளில் இயங்காதபடி இடை நாடி யாகிய சுழுமுனையில் நிறுத்தப்பட்ட வாயுவினுல் உச்சி யையடையும்படி செய்தும், உபசாந்தி மிகுந்த யோகி யின் மனத்தில் நிறைந்த ஆநந்தக்கடலிற் படிந்தும், பூமி முதலாகிய எல்லா வுலகங்களிலும் வியாபித்தும், இளம்

பிறையையணிந்த சடையையுடைய சிவபெருமானது நெற்றிக்கண்போலக் காட்டுந் தன்மையால் தடையறக் காணும்படியாயும் விளங்குகின்ற சின்மயமாகிய உள்ளொளியானது எக்காலத்தும் மேன்மையடைந்து தழைத்து வாழக்கடவது.

அத்துவிதம், வாசாமகோசரம், மநோதீதம், அசலம், மூலம், தத்துவம், அப்பிரமேயம், சர்வசமம், சச்சிதாநந்தம், சாந்தம், சுத்தம், அவ்வியக்தம், அவிகாரம், அநுபவம், துரியம், சுயம்பிரகாசம், நித்தியம், நிர்க்குணம், அநந்தம், நிரதிசயம், பிரமம் என்று வேதாகமாதிகளாற் சொல்லப்படுகிற மெய்ப்பொருள் ஒன்றுண்டு. அந்தப்பிரமப்பொருள் சிறிதும் விகாரமில்லாதிருக்கவும், அதன் சந்நிதியில் காந்தம் அசையாதிருக்கவும் அதற்கெதிரே ஊசியானது விகாரப்படுவதுபோல மாயையென்னும் ஒரு பெண்ணானவள் விகாரத்தையடைந்து கருப்பந்தாங்கி மாநதன் என்னும் ஒரு புத்திரனைப் பெற்றாள். அந்தப்புதல்வனை, இருளை ஒளியாகவும் ஒளியை யிருளாகவும் இன்பத்தைத் துன்பமாகவும் துன்பத்தை யின்பமாகவும் செய்ய வல்ல மாயையானவள் அன்போடு தன் மார்பிலணைத்துத் தாலாட்டிப் பாராட்டிச் சீராட்டி நீராட்டி ஊணூட்டி வளர்க்க, அவனும் தன் தந்தையாகிய மரத்தில் ஒரு புல்லுருவி முளைத்துச் செழித்தாற்போலச் செழித்து வளர்ந்தான்.

அந்தமாநதன் என்னும் புத்திரன் தனக்குத்தகுதியான பருவம் வாய்த்தவுடன், தன் தாயாகிய மாயாதேவி மனங்களித்து நோக்கி நிற்க, பிரவிர்த்தி நிவிர்த்தி என்னும் இரண்டு பெண்களை மணம்புணர்ந்து இனிதாக வாழ்ந்து வருங்காலத்தில், முதல் மனைவியாகிய பிரவிர்த்தியென்பவள்: மோகன், ஆங்காரன், மதநன், மாநன், காமன், கோபன், மச்சரன், சங்கற்பன், இராசதன், சந்தேகன், தாமதன் என்னும் புதல்வரையும்;

தீவினைமாது, கபடி, அகீர்த்தி, அநீதி என்னும் புதல்வி யரையும் ஈன்றாள். இரண்டா மனைவியாகிய நிவிர்த்தி யென்பவள் நிரூபகன், விவேகன், சாந்தன், சந்தோஷன், சமன், தமன், விராகன்; இயமன், நியமன், ஆதனன், பிராணாயாமன், பிரத்தியாகாரன், தியாநன், தாரணன், சமாதி என்று சொல்லப்படுகிற எண்மர்; சத்துவன், அமுதன், தவன் ஆகிய இப்புதல்வரையும்; மைத்திரி, கருணை, நீதி, முதிதை, உபேக்ஷை என்னும் புதல்வியரையும், பாற்கடலானது உலகத்தார்க்கு அமிர்தத்தைத் தந்ததுபோலப் பெற்றாள்.

மாயையானவள் தன் மகனாகிய மாநதனுக்குவாய்த்த மனைவியரிருவரிடத்து முண்டான புதல்வருக்கும் புதல்வியருக்கும் மணஞ் செய்விக்க நினைத்து, மோகன் என்னும் முதற்பிள்ளைக்குத் துன்மதி யென்னும் பெண்ணை மணம்புணர்வித்து, பிறகு அகங்காரனுக்கு அகந்தையையும், காமனுக்கு இரதியையும், கோபனுக்குக் கொலையையும், மச்சரனுக்கு அசூயையையும் மணம் புணர்வித்தாள். அதன்பிறகு மதனுக்கு மறதியையும், மாநனுக்கு வெகுமதியையும், இராசதனுக்கு முயற்சியையும், தாமதனுக்குச் சோம்பலையும், சங்கற்பனுக்குக் கற்பனையையும் மணம்புணர்வித்தாள். பிறகு சந்தேகனுக்கு அசித்தியை மணம்புணர்வித்தாள். அதன் பிறகு, அந்தப் பிரவிர்த்தி பெற்ற மைந்தர் நால்வருக்கும் மணம் செய்விக்கக்கருதி, தீவினை, அகீர்த்தி, என்னு மிருவரையும் அநாசாரனுக்கு மணம்புணர்வித்து, கபடி அநீதி என்னு மிருவரையும் கலியனுக்கு மணஞ்செய்வித்தாள்.

இங்ஙனம் மணஞ்செய்து கொண்டவர்கள் இனிதாக வாழ்ந்துவருங்காலத்தில், அகங்காரன் அகந்தையைக்கூடி மமதை என்னும் ஒரு புதல்வியையும், லோபன் என்னும் ஒரு புத்திரனையும் பெற்றான். அந்த

லோபனும் இச்சை என்னும் பெண்ணை விரும்பிப் புணர்ந்து மிகுசமர்த்தனாகிய இடம்பனைப் பெற்றான். அந்த இடம்பனும் வஞ்சனை என்னும் மாதைத்தழுவி அசத்தியனைப் பெற்றான். காமராஜன் இரதிதேவியைப் புணர்ந்து விடயாநந்தன் என்னும் புத்திரனைப் பெற்றான். கோபன் கொலை என்னும் மாதைப் புணர்ந்து கலகனைப் பெற்றான். மறதி என்பவள் மதனைப் புணர்ந்து அநர்த்தனைப் பெற்றாள். கெடுதிஎன்பவள் அநர்த்தனைப் புணர்ந்து நாசனை யீன்றாள். அசூயை யென்பவள் மச்சரனைப்புணர்ந்து வயிரனைப் பெற்றாள். வயிரன் தேவியாகிய அமரியாதை என்பவள் அக்கிரமனைப் பெற்றாள். மானனுக்கு வாய்த்த வெகுமதி என்பவள் வயிற்றில் உற்சாகன் என்பவன் பிறந்தான். பிறகு கற்பனை என்பவள் சங்கற்பனைப் புணர்ந்து விகற்பனைப் பெற்றாள். அந்தவிகற்பன் யோசனை யென்னும் பெண்ணைப் புணர்ந்து வெகுமுகன் என்னும் புதல்வனைப்பெற்றான். அசித்தி என்பவள் சந்தேகனைப் புணர்ந்து கலக்கன் என்னும் புதல்வனைப் பெற்றாள். சோம்பி என்பவள் தாமதனைப் புணர்ந்து நித்திரை, அசிரத்தை என்னும் இரண்டு பெண்களைப் பெற்றாள். முயற்சியைப் புணர்ந்த இராசதன் சிரத்தை என்னும் ஒரு புத்திரியையும் காரியன் என்னும் ஒரு புதல்வனையும் பெற்றான். அநாசாரனைப் புணர்ந்த அகீர்த்தியினிடத்து மிச்சாதிட்டி என்னும் பெண்ணும் விடயசங்கன் என்னும் புதல்வனும் தோன்றினார்கள். கலியன் என்பவன் கபடியைக்கூடி சஞ்சலன் அதன்மன் என்னும் இரண்டு புதல்வரைப் பெற்றான். அதன்மன் அதோகதியைப்புணர்ந்து துக்கனைப் பெற்றான்.

இவ்வாறாகப் பிரவிர்த்தியின் மக்களாகிய மோகன் முதலானோருடைய மணத்தையும் அவர்களுடைய மக்கட்பேற்றையுஞ் சொன்னோம். இனி நிவிர்த்தி மக்களாகிய விவேகன் முதலான உத்தமருடைய மணத்தை

யும் அவர்களுக்குப் பிறந்த மக்களையும் விவரித்துச் சொல்லுவோம்.

விவேகன் என்னும் அரசன் சுமதி என்னும் மாதை மணம் புணர்ந்தான். நிரூபகன் உத்தி என்னும் பெண்ணை மணம் புரிந்தான். சாந்தன் உறுதி என்னும் மாதை மணம் புரிந்தான். சந்தோஷன் மகிழ்ச்சியைப் புணர்ந்தான். சமன் சாந்தியையும் தமன் தாந்தியையும் மணம் புரிந்தார்கள். விரக்தி மாதை விராகன் மணஞ் செய்தான். சுசிலனுக்குக் கீர்த்தி என்பவள் மனைவியாக வாய்த்தாள். தவன் நல்விருத்தியை மணம் புரிந்தான். சத்துவன் புனிதை என்னும் பெண்ணை மணம் புரிந்தான். இயமன் அஹிம்ஸை என்னும் மாதைக் கடிமணம் புணர்ந்தான். மனநிலை என்னும் பெண் நியமனைத் தனக்குப் பர்த்தாவாகப் பெற்றனள். ஆதனன் திதியை மணந்தான். பிராணயாமன் பூர்த்தியைச் சேர்ந்தான். பிரத்தியாகாரன் மீட்சியைப் புணர்ந்தான். தியானன் காட்சி என்பவளைக் கூடினன். த்ருதி என்பவள் தாரணனுக்குத் தேவியானாள். சமாதி தன்னிலை என்னும் பெண்ணைச் சேர்ந்தான்.

இவ்வாறு மணம் புணர்ந்த விவேகனாதியர் இன்புற்று வாழுங்காலத்தில், அந்த நிவிர்த்தி யீன்ற பெண்களில் சமாதானனுக்குமயித்திரி என்னும் பெண்ணும், நியாயனுக்கு நீதி என்னும் பெண்ணும், கருமனுக்குக் கருணை யென்னும் பெண்ணும், பூரணனுக்கு உபேக்ஷை என்னும் பெண்ணும், அவிரோதனுக்கு முதிதை என்னும் பெண்ணும் வாழ்க்கைப்பட்டார்கள்.

பிறகு உத்தி என்பவள் நிருபகனைப் புணர்ந்து நிச்சயனை யீன்றாள். உறுதி மாது சாந்தனைப் புணர்ந்து அடக்கனைப் பெற்றாள். மகிழ்ச்சி என்னும் பெண் சந்தோஷனைப் புணர்ந்து அற்புதயனைப் பெற்றாள். சமன் சாந்தி என்னும் தந்தை தாயருக்கு அக

முகன் புதல்வனுகப் பிறந்தான். தாந்தி என்பவள் தம னைப் புணர்ந்து தனிவத்து நோக்குவானைப் பெற்ருள். விராகன் மனைவியாகிய விரத்தி சுகனை யீன்ருள். கீர்த்தி என்பவள் சுசீலனைப் புணர்ந்து பிரசித்தி என்னும் புதல்வியைப் பெற்ருள். தவன் நல்விருத்தி என்னும் தந்தை தாயருக்குப் பரோபகாரன் என்னும் புதல்வன் பிறந்தான், சத்துவனைப் புணர்ந்த சுத்தி என்னும் மாதின் வயிற்றில் தருமன் என்னும் புதல்வனும் சிரத்தை என்னும் பெண்ணும் தோன்றினுர்கள்.

அந்தச் சிரத்தை என்னும் பெண்ணினிடத்தில் சாந்தி யென்னும் ஒரு பெண் பிறந்தாள். இயமனைச் சேர்ந்த அஹிம்ஸை என்பவள் இரவாமை என்னும் மகவை யீன்ருள். நியமனைக் கூடிய மனநிலை யென்னும் பெண் சத்தியனைப் பெற்ருள். ஆதனனைச் சேர்ந்த திதி என்பவள் தேயனைப் பயந்தாள். பூர்த்தியை மணந்த பிராணுயாமன் தீர்க்காயுவைப் பெற்ருன். மீட்சியைப் புணர்ந்த பிரத்தியாகாரன் நிருலேபனைப் பெற்ருன். காட்சியைப் புணர்ந்த தியானன் ஐயமில்லானைப் பெற்ருன். தாரணனைக் கூடிய திருதி என்பவள் அப்பிரமன் ஆத்திகன் என்னு மிருவரைப் பெற்ருள். சமாதி தன்னிலை என்னும் தந்தை தாயருக்கு நிர்விகற்பன் மோனன் என்னு மிருவருண்டானுர்கள்.

முற்காலத்தில் காசிப முனிவரது மனைவியராகிய திதியும் அதிதியும் பெற்ற அசுரரும் சுரரும்போல மூத்தவளாகிய பிரவிர்த்தி என்பவள் ஈன்ற மோகன் முதலாகிய மூட மக்களும், இளையவளாகிய நிவிர்த்தி பெற்ற விவேகன் முதலிய மதியுடை மக்களும் செழித்து வளர்ந்து வருங்காலத்தில், மாயாதேவியானவள் தன் மகனுகிய மானதன் மணம்புரிந்து கொண்ட பிரவிர்த்தி நிவிர்த்தி என்னும் பெண்கள் பெற்ற புதல்வர் கூட்டம் யமுனைநதியும் கங்காநதியும்போலத் தன் பக்க

த்திற் பரவி நின்று விளங்குங் காட்சியைக் கண்களிக்க நோக்கி ஓர் கபட சிந்தனை செய்வாளாயினள்.

உற்பத்திச்சருக்கம் முற்றிற்று.

## 2. மோகனரசாட்சிச் சருக்கம்.

நமக்கு நாயகனாக வாய்த்த மகாபுருஷன் விஷய விருப்பமில்லாதவனும், நீங்காத இளமையைப் பெற்றிருந்தும் ஒருபோதும் எம்மைக் கண்ணெடுத்துப் பாராதவனுமா யிருக்கிறான், ஆதலால் மூன்றுலகங்களையுங் காக்கின்ற முதன்மையை நமது புதல்வனாகிய மானதனுக்குக் கொடுத்துவிட்டு, நம் கணவனை நீங்கித் தனித்திருந்து களித்து வாழ்வோமென்று மனத்திற் கொண்டாள். அந்த மாயாதேவியின் எண்ணத்தைக் குறிப்பாயறிந்த மைந்தனாகிய மானதன், தனக்கிருப்பிடமாக விசித்ராலங்காரமான நவத்வாரபுரங்கள் அளவில்லாதவைகளா யுண்டாக்கிக் கொண்டு, அவ்வப் புரங்களிலெல்லாம் தன் தந்தையாகிய பிரமத்தை அணுவளவாக நிறுத்திச் சிறையிட்டு வைத்தான். இப்படி சிறைசெய்யப் பட்ட தந்தையானவன் ஒருவனேயாயினும் உலகத்திலுள்ள பலகோடி யுடம்புகளிலும் அங்கங்கே வியாபித்து விளங்குதல் எப்படி யிருந்ததென்றால், படர்ந்த கிரணங்களையுடைய சூரியன் ஒருவனேயாகியும் தொகைப்பட நிரைக்கப்பட்ட தெண்ணீர்க் குடங்கள்தோறும் தனித்தனியே பிரதிபிம்பித்துக் காட்டுதல்போ லிருந்தது. அவ்வாறு அந்த மானதன் தன் தந்தையைச் சிறைசெய்தது கண்ட மோகாங்காரர் நன்று நன்றென்று தாமுங் களித்துப்பற்ற, அதைக் கண்ட காமனாதியரும் நெருக்கி மேன்மேலும் வருந்தும்படி ஆசை முதலிய கயிறுகளா லிறுக்கிக்கட்டினர்கள். மாயையாகிய பாட்டியானவள் வஞ்சனையை நினை

ந்தவிதத்தையும், தன் தாய்க்கருத்தை யறிந்த மானத ஞகிய புதல்வன் பாட்டனைச் சிறைசெய்தவிதத்தையும், காமனுதியர் ஆசையாகிய வலியகயிற்ருற் கட்டின வித த்தையும், துக்க ரஹிதனுகிய ஈசனுக்குத் துக்கமுண் டான விதத்தையும் கண்ட விவேகனுனவன் மனங் கல ங்கி, கொடியகண்டகர் செய்தவஞ்சனையானது பழைய நூல்களாற் சொல்லப்பட்ட தருமமார்க்கமல்ல, இதை க்கண்டவர்களும் பாவத்துக்காளாவார்கள் என்று சிந் தித்து, நாம் சும்மாவிருப்பது தகுதியல்லவென் றெழு ந்து, தந்தையாகிய மாநதன் பாதத்தை வணங்கி, ஐயனே, உன்னை யீன்ற தந்தையைச் சிறையிட்டு, தா யாகிய மாயையின் வஞ்சனை வழியில் நடப்பது நன் னெறி யன்றென்றும், தருமம் இன்பத்தைத் தருமே யன்றித் தருமத்துக்கு மாருன காரியங்கள் யாவும் அப் பொழுது இன்பம்போலத் தோன்றினுலும் பச்சை மட்பாண்டமானது தன்னிடத்துள்ள நீரோடு தானும் கெட்டுப் பயன்படா தழிதல்போல ஒருகணப்பொழுதி லழிந்து துன்பத்தையே கொடுக்கும் என்றும், அந்தத் தருமமாவது யாதெனில், தந்தையே அருட்டெய்வம் என்றெண்ணுந் தன்மையேயாம், அந்தத் தன்மையை விட்டுப் பிதாவைப் பின்ன பின்னங்களாகப் பேதகஞ் செய்தல் உனக்குத் தகுமோவென்றும் சொன்னுன்.

இதைக்கேட்ட மாநதன் விவேகனைநோக்கி, தாயான வள் தந்தையைப் பார்க்கினும் மேன்மையுள்ளவள், "அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம்" என்ற பெரி யோர் வாக்கியங்களுக்கு ஒத்து நடக்கவேண்டாமா, துறவாச்சிரமத்தை யடைந்த சந்நியாசிகளும் வந்து தாயைத் தொழுவதுண்டு. ஆதலால் என் மாத்ரு வாக் கியத்தின்படியாகவும் அவளெண்ணத்தின்படியாகவும் செய்தலே எனக்கு நீதியாவதும் தருமமாவதும் என்று ஆலோசித்துத் துணிந்து, அளவற்ற நவத்வார புரங்கள் தோறும் என் தந்தையைச் சிறையிட்டு வைத்தேன்

என்றான். அதுகேட்ட உயர்ந்த அறிவையுடைய விவேகன், மானதனைநோக்கி, பெரியோர் தாயின்பாதங்களை வணங்குதல், அரசமரத்தையும் திருத்துழாயையும் பசுவையும் வணங்குவதுபோன்ற வணக்கமேயன்றி, புத்திகேட்பதற்கு அவற்றை வணங்குதல் அல்லவே; அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம் என்ற வாக்கியார்த்தத்தை நன்குணர்ந்த பரசுராமரானவர் தாயினும் தந்தை சிறந்தவனென்றெண்ணியன்றோ, தந்தையாகிய சமதக்கினியின் கட்டளையைச் சிரமேற்கொண்டு தாயாகிய ரேணுகையைக் கண்டதுண்டங்களாய் வெட்டியெறிந்தது! ஸ்ரீ ராமர்வனவாசஞ் செய்யப்போகுங்காலத்தில், தமது தந்தையாகிய தசரத சக்ரவர்த்தியின் வார்த்தையைச் சிரமேற்கொண்டாரன்றித் தாயாகிய கௌசலை போகவேண்டாமென்று தடுத்தவார்த்தையைக் கேட்டாரா? கேளாததற்குக் காரணம் தாயினும் தந்தை சிறந்தவனென்பதன்றோ? இவைகளையெல்லாம் நன்றாயாலோசித்துத் தாயை அவமதித்தாலும் தந்தையை அவமதிக்கலாகா தென்பதைக் கடைப்பிடித்து அவனிடத்தன்பு கொண்டு விரைந்துசென்று அவனைச் சிறைவிடுத்தலே தருமமென்றான்.

அந்தச்சொல்லைக் கேட்ட மானதராஜன், தன்புதல்வனாகிய விவேகனைச் சினந்துநோக்கி, பிள்ளாய், தந்தையாயினும், மனைவியாயினும், மைந்தனாயினும், தமது குடிக்குக்கேடு நினைப்பாராயின் அவரோடுறவு செய்யலாமோ? உலகத்திலுள்ள மனிதர் பயிர்செழித்து விளையும்பொருட்டு முன்னேயுழுத எருதாயினும் அந்தப் பயிரை யழிக்கப்புகுந்தால் பார்த்துக்கொண் டிருப்பார்களோ? பயிரழிந்து போமென்று விரைந்து வந்து வலியகயிற்றாற் பிணித்துத் தொழுவத்திற் கட்டிவைப்பரல்லவோ? பொல்லாத நடக்கையரேயாயினும் உறவினரைத் தம்முள்ளேயடக்கிக் கொள்ளவேண்டும், அடங்காதாரை உடனே நீக்கவேண்டும், அப்படிச் செய்யா

விட்டால் அவரால்தீங்குநேரிடும்; சோறுக்குதற்கு இன்றியமையாத நெருப்பை மடைப்பள்ளியில் ஒரு புறத்து வைத்துச் சிறைசெய்யாமல் விட்டால், அந்த நெருப்பானது ஊர்முழுதும் சுட்டெரிக்கு மன்றோ? இவ்விடயங்களை யெல்லாம் ஆராய்ந்து, இனிதாகிய நமது குலத்தில் தோன்றின புத்திர பௌத்திராதியராய்க் கிளைக்கின்ற உறவினரைக் கெடுத்தலே அவனது எண்ணமாதலால் அவனை யான் சிறையிட்டு வைத்தேன் என்றான்.

இவ்வாறு சொன்ன மானதனை விவேகன் நோக்கிக் கைகூப்பி வணங்கி, நிலத்தியற்கையால் நீரின் தன்மை குறைந்தாற்போலத் தாயின் குணத்தை மேற்கொண்டதல்லாமல் தந்தையின் குணத்தை விரும்பினையில்லைபோலும்; இராவணனானவன் உத்தமனாகிய தந்தையின் குணத்தைப் பொருந்தாமல் பொல்லாதவளாகிய தாயின் குணத்தைப் பொருந்தினமையால் தனது குலத்தோடும் நரரும் வாநரருமாகிய இவர்களால் நசித்தது லோகப்பிரசித்தமன்றோ? ஆகையால் நீயும் நன்னெறியை விட்டுத் தீநெறியிலொழுகுகின்ற தாய்வார்த்தையைக் கேட்டு நடப்பையாயின் இம்மையில் பழியையும் அற்பாயுளையுமடைந்து, மறுமையில் நரகத்தையடைவதேயன்றிப் பேரின்ப வீட்டையும் இழந்துபோவாயென்றான்.

இதனைப் பக்கத்திலிருந்த மோகன் கேட்டெழுந்து, விவேகனை நோக்கி, தம்பீ, இலங்கை வேந்தன் தாயின் செய்கையை மேற்கொண்டதனால் உயிரிழந்தானென்றாய், அது உண்மையேயாகட்டும், தந்தைக்கு மாறாகப் புத்திரர் எழுதல் தகாதகாரியமென்று முன்னமே சொல்லியிருக்கிறாயல்லவா? இப்போது இங்கே உன்னோடு வாதுசெய்வது உன் தந்தையன்றோ? நீ இங்கே பேசவந்ததும் உன் தாயின் செய்கையன்றோ? ஆதலால் நீ இருவழியிலும் குற்றமுடையவனாகின்றாய், இத

ற்கு நீ சொல்லத்தகுந்த சமாதானம் யாதேனுமுளதாயின் சொல்லக் கடவாயென்றான். அது கேட்ட விவேகன் மோகனைப்பார்த்து, மோகா, நீ அறியாது வினவினாய், பெற்ற தாய்தந்தையர் தீநெறியிற் சென்றால், அவரை விட்டு நீங்குவதே விவேகிகள் செய்கை. இராவணனது தாய்பெற்றபிள்ளைகளில் இராவணனும் கும்பகர்ணனும் தீநெறியிற்சென்று வீணேமடிய, நன்னெறியிற் சென்றவனாகிய விபீஷணன் நன்மை யடைந்து இன்றும் உயிர்பெற்றிருப்பதைக் கேட்டறிந்திலையோ வென்று மறுத்தான்.

இவ்வாறு மறுத்த சொல்லானது மானதன் செவியிற் புகுந்தவுடனே அவன் மிகுந்த கோவத்தோடும் எழுந்து விவேகனை நோக்கி, அடா விவேகா, வேய், கதலி, நண்டு, முத்துச்சிப்பி என்பவற்றைப் போல என் குலத்துக்கு நாசகாரணன் நீயேயாகிறாய், என்னை வருந்திப் பெற்றதாயைக் கொலை செய்யும்படி எனக்குப் புத்திசொல்லுகிறாய், இது மிகவும் அழகிது! திதியின் வயிற்றில் தோன்றிய இரணியாதிகளைக் கொல்லப் பிரகலாதன் தோன்றினாற்போல நீயும் எமது குலத்தைக்கெடுக்க நிவிர்த்தி வயிற்றிற் பிறந்தாய்போலும், எமது தந்தையை யாம் விஞ்சவொட்டாமல் தடுத்ததேயன்றி அவரைக் கொலைசெய்யவில்லை, நீயோ எங்களையெல்லாம் அடியோடு நாசமாக்குதற்கு ஒரு கோடரிக்காம்புபோன் றிருக்கிறாய், உன்னியற்கையை மாற்ற எம்மால் முடியாது, இனி உன் கருத்துப்போல எங்களுக்கெல்லாம் நீ பகைவனாகி, எங்களையழித்து, திரிலோகத்தையும் கைப்பற்றும் வழியைத் தேடுவாயாகவென்று அவ்விவேகனைத் தூரமாகப்போக்கி, பக்கத்தில் நின்ற மோகனைக்கூவி, அவனை மார்போடணைத்து, அப்பா, நான் என் தந்தையைச் சிறைசெய்த காலத்தில் என் குறிப்பறிந்து விரைந்தோடி வந்து முன்னே நின்று, காமனாதியருடன் பாசங்களால் இறுகக்கட்டி

அசையவொட்டாது தடுத்தவன் நீ யன்றோ? உன்னைப்போன்ற சற்புத்திரன் வேறுயாவன்? உன்னைப் பெறுதற்கு நான்செய்த புண்ணியமே புண்ணியம்! என்னையோ முதுமைப்பருவம் வந்தடுத்தது, முதிர்ந்த ஆலமரத்துக்கு அதன் விழ்போல் இந்த முதுமைப் பருவத்தில் என்னைக் காப்பாற்றுதற்கு நீயும் உன் தம்பிமாரும் முற்பட்டு நின்றீர்கள், இனியெனக்கு யாதொரு குறையுமில்லை, ஆதலால் எனது ராஜ்யபாரத்தை நீயே தாங்கக் கடவையென்று கூறி, அவனுக்கு மகுடாபிஷேகம் பண்ணி, என் தந்தையை வெளிப்படவொட்டாது சிறைப்படுத்தி, என்னோடு நீடூழிகாலம் அரசாளுவாயென்று வாழ்த்தினன். கொம்பில்லாதிருந்த ஒரு கொடும்புலிக்கு ஒரு கொம்புவாய்த்தாற்போல, மோகனுக்கு ராஜ்யாதிகாரம் உண்டாதலும், இவன் முன்னினும் பதின்மடங்கு அதிகமான வீரசூரத்வமும் புஜபல பராக்கிரமமும் அடைந்து, தந்தை குறிப்பின்படியே நிவிர்த்தியையும் அவள் புதல்வராகிய விவேகனுதியரையும் தன் ராஜ்யத்தின் எல்லையில் நிற்கவுமிடங்கொடாமல் ஓட்டிவிட்டு, முப்புவனத்திலும் தன்கோலே செலுத்தி வாழ்ந்திருந்தான்.

மோகனரசாட்சிச் சருக்க முற்றிற்று.

---

## 3. அவித்தியாபுரச் சருக்கம்.

அளவற்ற கொடியோரான மோகனுதியரால் ஓட்டிவிடப்பட்ட விவேகனும், அவனுக்கு இளைஞரும், சுற்றத்தவரும், சுமதிமாதும் மிக்க தளர்வுடையவராய்ப் புறமே போய், புண்ணியஸ்தலங்கள் எங்கெங்குளவோ ஆங்காங்கு தனித்தனி சென்று ஒதுங்கிக் காலங்கழித்து வருவாராயினர். தருமநெறியிலிருப்பவரான இவர்கள் துயரமுற்றதினலே, பூமியில் திசைகள்தோறும்

பொருந்திய இந்திரன் முதலிய தேவர்கள் யாவரும் தங்கள் தங்கள் இடங்களைவிட்டு ஓடிப்போனார்கள். அப்பால் மோகராசன், தனக்குப்பகைஞராயுள்ளோர் வேறு யாருமில்லாமையாலும், தன்னிடத்தேயுள்ள துணைப் படைவலியினாலும், அளவில்லாத செல்வத்தாலும் மிக்க செருக்குடையனாகித் தன் மனைவியாகிய துன்மதியின் உபபலத்தினாலே, கல்லாமை, கொலை, களவு, துராசை, இன்சொற் சொல்லாமை, நடுவுநிலை யின்மை, கோபம் முதலிய தீய குணங்களையன்றி, நன்மை சிறிதேனு மில்லாத தீயவர்களுடைய இருதயமாகிய அவித்தியா புரம் என்னும் ஒருநகரத்தையமைத்தான். அந்நகருக்கு மாமன், மனைவி, தாய், தந்தை, குழந்தை என்றிந்த மயக்கத்தை யுண்டாக்கும் இனமென்னும் அகழியும், ஒருவரானு மொழிக்க முடியாத சங்கற்பமென்னும் மதிலும், யான் எனது என்னும் மதிலுண்மேடையும், தீயவொழுக்கமாகிய காட்டரணும், பஞ்சேந்திரியக் காவலும், விஷயங்கள் வெளிப்படாவண்ணம் விரைந்து அகப்படுத்தும் சூத்திரப் பொறிகளும், கோபம், கொலை, பாதகம் இவைபெற்று உலகெல்லாவற்றையு மொரு நொடியுள் வலம் வரத்தக்க பலகோடி சேனாவீரரும், எதுபெறினும் அமையாத அவா என்னும் கிரிதுர்க்க மும் அமைத்தான். அந்நகரம் நேராகச் செல்லும் நெறியின்றி அதருமநெறியிற் செல்லும் கோணலுடை யதாயும் அறிவின்மை கொண்ட வளைவான வாச லுடையதாயு மிருந்தது.

பின்னரும் இரண்டு காலை நிறுத்தி, மேலே இரண்டு கையைப் பூட்டி, முதுகெலும்பா லிணைத்து, முகட் டின்மேலே பழுக்கழிகளை யிட்டு, நரம்புகளாற் கட்டி, மயிர்த்தோலால்வேய்ந்து, புலாற் சுவரெடுத்து, போக்கு வரவுக்கு இருவாசலும் ஏழுசாளரங்களும் சாக்கிரம் முதலிய நான்கு தள அடுக்கும் அவற்றின்மேலே சிகர மும் கூந்தலாகிய நீண்ட கொடியும் அமையும்படி

நான்முகத்தச்சனால் ஒருசித்திரமாட மியற்றுவித்தான். இத்தன்மையாக இயற்றப்பட்ட மாளிகைபோல, கணப்பொழுதில் ஆயிரமாயிரமான மாளிகைகளைக் கட்டி வினை யழித்தழித்து புதுமாளிகைகளைச் செய்வான். அப்படிப்பட்ட மாளிகையில் இந்த மோகன் தனது தேவியாகிய துன்மதி சமேதனாய் அங்கு அமைத்த நெஞ்சு என்னும் ஆசனத்தில் அரசியற்றுவானாயினன்.

இனி மோகராசனது குணாதிசயங்களைச் சிறிது கூறுவாம்.

அவன் இந்திரனுடைய வச்சிரவாளுக்குத் தகராத பெருவலிக்கல்லை யொத்த சிந்தையையுடையவன். பன்னிரண்டு சூரியரு மொன்று கூடிப் பிரகாசிக்கினும் தொலையாத வல்லிரு ளெல்லாம் திரண்டொரு வடிவெடுத்தாலொத்த வடிவமுடையவன். மரப்பாவை வாய் திறந்து பேசினும் இவன் தனது நாவினையசைத்து நன்மொழி கூறான். வசை பேசுவானாயின் ஒவ்வொரு மயிர்க்கால் தோறும் ஒவ்வொருவாயுடையவனோ என்னும்படி பேசுவான். தனது குற்றத்தைப் பார்ப்பதில் திருதராட்டிரனவன். பிறர் குற்றத்தைப் பார்ப்பதில் ஆயிரங்கண்ணுள்ள இந்திரனேயாவன். இவன் செவி ஆயிரங்கோடி வம்புகள் கூடி நுழையினும் இடம்பெறத்தக்க பெரும் புற்றினை யொத்ததாயினும் ஒருசிறிய தருமநூலை எடுத்து நுழைக்கப்புகினும் சற்றேனுந் துளையில்லாத வச்சிரத்தைப் போன்றிருக்கும். தன்னுடைய நிலையற்ற வாழ்வை நீடூழிகாலம் நிலைக்கத்தக்கதென நினைக்கும் நினைவினையுடையவன். இரப்பவர்க்கொன்றுகொடுப்பதில் இரண்டுகையுமில்லாதவனவன்; தானொன்று பெறுவதிலோ ஆயிரங்கைகளுடைய கார்த்த வீரியார்ச்சுனனும் வெட்கத்தக்க பல கைகளையுடையவன் போன்றவன். நல்வழியில் நடப்பதில் காலற்ற முடவனைப் போன்றவன். தீயவழியிற் செல்வதில்

மகம்மேருவைச் சூழ்ந்துவரும் விரைவுள்ள சூரியமண்டலம் போன்றவன். இவன் பாவகன்மமாகியவெந்நீரில் மூழ்கி, வழுவிய வொழுக்கமாகிய பட்டாடையணிந்து, துர்க்குணமாகிய ஆபரணங்கள்பூண்டு, துர்வாசனை என்னும் புஷ்பமணிந்து, அபகாரமென்னும் சந்தனம் பூசி, புன்மையாகிய போசன முண்டு,வஞ்சகமாகிய நீரருந்தி, பிறப்பு இறப்புக்களாகிய ஊசலிலாடுவான். இவனுடைய தேராகிய எதிர்மொழி விதியை மேற் கொள்ளாதேனும், முயற்சி என்னும் கோல்கொண்டு துன்மதி என்னும் பாகன் நடத்த எமலோகம் வரைக்குந் தாவியெழுந்து உலகமுழுதையுங் காற்றுடிபோல ஒருநொடியிற் சுற்றிவரு மியல்புடையது. இவனுடைய மருளாகிய யானை வாய்மையாகிய மரத்தை வேரோடுசாய்த்து நற்குணமாகிய மலையைத் தகர்த்து அறமாகிய வாழையைத் துவைத்து அன்பென்னும் ஓடையிலே புகுந்துகலக்கி மேலாகிய வாழ்க்கையை அடிக்கு மியல்புடையது. இவனுடைய கவலையாகிய குதிரை எதிர்ப்பட்டவொன்றை வென்றல்லது பின்னிடேன் என்னுந்தருக்குடையதாய் வாயுகதி முதலிய எக்கதியும் நாண, சப்தகிரியேயாயினும் சப்தசமுத்திரமே யாயினும் சப்தபுவனமேயாயினும் அங்கெல்லாம் ஒரு கணப் பொழுதில் சுற்றிவரவல்லது. இவனுடைய விபரீத நெறியாகிய பதாதி தேவர்களையும் முற்றத்துறந்த துறவிகளையும் எதிர்த்து தமதடிப்படுத்த வல்லது. இம்மோகனது ஆணை, அஷ்டதிக்கும் சப்தசமுத்திரமும் எட்டுமலையும் பதினான்குலகமும் பாதாளலோகமும் ஆகாசமும் பூமியும் ஆகிய எங்கும் நடந்து தடையின்றி வேகங்கொண்டு அண்டபகிரண்டமும் மயங்கச் செய்பவல்லது. இவனது மதிகேடென்னுங் குடை, சூரியகிரணம் எங்கும் படாமல் மறைக்கும் மேகம் போல ஈசுவரனது சோதிவிளங்காமற் செய்து பகலையுமிரவாகச்செய்வதாகும். இவனது கொடுங்கோலின் வெம்மை, தீயினுங்கொடியதாகி நினைத்த

மாத்திரத்தில் எவரையும் வெதுப்பக் கூடியதாயிருக்கும்.

இவ்விதமாக யாவுங்கூடி பதினன்குலகமும் திறைகொண்டுவந்து எதிர்வந்து அடிதாழ்ந்து போற்ற, மனமகிழ்ந்து தனது தேவியாகிய துன்மதியோடு கூடிச்சுகித்து வாழுநாளில், ஆங்காரன், காமன், கோபன், லோபன், செருக்கன், மானன், அதன்மன், கலியன், டம்பன், அசத்தியன் முதலியயாவரும் அம்மோகராஜனது ஆக்கினைப்படி கொலுமண்டபம்வந்து கைகூப்பி நின்றார்கள். அவர்களை மோகவேந்தன் ஆசிர்வதித்து ஆசனத்தமர்த்திச் சொல்லுவானாயினன்.

தம்பிகாள்! இப்பூலோக முதலிய பதினன்கு லோகங்களையும் எம்மைக்கட்டி யாளும்படி எமது தந்தையார் எமக்குக் கொடுத்து மகுடாபிஷேகம் செய்வித்தனர். நான் பகைப்பற்றை யறுத்து வருத்தந்தீர்ந்திருப்பது உங்கள் வலிமையினலே யன்றோ? என் உயிரும் என் கண்ணும் என்னிரண்டு தோளும் ஒத்தவர்கள் நீங்களனைவருமாவீர்கள். உங்களைத் துணையாகக் கொண்ட எமக்கு இனிப்பகையாக எழுந்து எம்மை மேற்கொள்ளவரும் வலியுடையார் இல்லை. சிறியதொருபகையுள்ளதாயின் பிறகு அது நமக்கு முன்னே வந்து மூளுமல்லவோ. அந்தப்பகையானது எள்ளில் நாலிலொரு பங்களவு இருப்பினும் அது அற்பமாகிய பகையென்று அதனை அலக்ஷியஞ் செய்யவொண்ணுது. ஏனெனில், முட்களோடு கூடிய வலியமரத்தை முளைக்குமுன்னே கிள்ளிவிட்டால் அதுநசித்துப்போம். அப்படிச்செய்யாத பக்ஷத்தில் அதுதழைத்தோங்கி வளர்ந்து பெருமரமாய் கோடரிக்கும் அசையாததாகுமல்லவா. சிறியபாம்பினது நஞ்சினல் பெரிய யானைகளும் உயிர்விடுகின்றனவன்றோ? சிலமனிதராலும் சிலவானரங்களாலும் மஹா பலசாலியான இராவணனனவன் தன் இனத்தோடும்

மாண்டா னல்லவா? லோகாநுபவம் இவ்வாறிருத்த லால் விவேகன் அற்பமாகிய பகைவனென்று எண்ணு மல் அவனை வேரறக்களைவதாகிய ஆலோசனைசெய்ய வேண்டும். இதுவே விவேகனை நாசப்படுத்துதற் குரிய மார்க்கமென்று சொல்லக்கேட்ட காமன்எழுந்து நின் று, கரங்களைக் கூப்பி மோகனை வணங்கி, நீ யாது கட்டளை யிடுகினும் அதைத் தடையின்றிச் சிரசினு லேற்றுச் செய்வதற்கே யாமெல்லோரும் இங்கே திரண்டு நிற்கின்றோம். உனது சேனைகளாகிய எங்களி லொருவனுக்குப் பிரமாதியர் தாமும் ஈடாகமாட்டா ரே. இவ்வுலகங்கள் எல்லாம் ஒன்றுகூடி வரினும் எம்மி லொருவனே நின்று வெற்றிகொள்ள அமையுமென் ருல், வேறுயோசிக்க வேண்டுவதென்னே? விவேகனை வருத்தி, பதினுன்குலோகங்களையும் வெல்வதற்கு அடி யேனிருக்கும்போது அகங்காரன் முதலிய மேலோர்க ளுடைய படையும் அவன்மீது செல்ல வேண்டுமோ? வேண்டுவதில்லை. ஆதலால் உமது கட்டளைப்படி நாங்க ளெல்லோரும் இக்காரியத்தை முடித்துவிடுகிறோம். எங்களுக்கு விடைதரக்கடவீராக வென்று வணங்கின காமனை வியந்து, மோகராஜன் அக்காமன் முதலியோர் களுக்கு அவரவர்களுக்குத்தக்க சிறப்புச் செய்து அனு ப்புகின்ருன். எவ்வாறெனில்:

முதலில் அகங்காரனையழைத்து, அகங்காரனே! நீ, கொடை, ஆண்மை, கேண்மை, குணம், படை, சிற ப்பு, ஒழுக்கம், நடை, வாய்மை, நாகரிகம், தவம், புகழ், நிதி, மேன்மை, குலம், நியமம் முதலிய சிறப்பு க்களை யுடையவனுய், சமனை வென்று, உலகமுழுதுங் கைப்பற்றி, கௌட தேசத்தை ராஜதானியாகக் கொ ண்டு அவ்விடத்திலேயே வாழக்கடவாய் என்று கட்ட ளையிட்டான்.

அதன்பிறகு காமனை யழைத்து, அவனுக்கு மீனக்கொடி, சந்திரவட்டக்குடை, கடற்பேரிகை, குயி

லொலிக்காளம், தென்றற்றேர், இருள் யானை, கிளிப் பரி, மாதர்படை, புஷ்பபாணம், கருப்புவில், சுருப்பு நாண், மடல்வாள் முதலிய சிறப்புக்களெல்லாவற்றை யுங் கொடுத்து, எவ்வுலகத்தினும் நிருபகன் பிரவேசி யாமல் அவனை வருத்திவென்று உன் மனைவியாகிய ரதிதேவியோடு காஞ்சிப்பதிக்குப் போயிருந்து நிலை பெற்று வாழக்கடவையென்று கட்டளையிட்டான்

அப்பால் கோபனையழைத்து, அவனுக்கு நெறுநெ றெனக் கடிக்கும் பல்லுப் பறையும், கட்பொறியாகிய நெருப்புக்கணையும், நெரிக்கின்ற புருவமாகிய வில்லும், நெடுமூச்சாகிய தேரும், குறுவியர்வையாகிய கவசமும், தீயசொல்லாகிய வாட்படையும், அதட்டுகின்ற சத்தமா கிய சங்கத்தொனியும், மற்றும் பற்பல சிறப்புக்களையுஞ் செய்து, உனது மனைவி மக்களோடு உலகமுழுதும் உலாவி, சாந்தன் முதலாகிய பகைவரைப் பற்றற முடி த்து, யவன தேசத்திற் சென்று எக்காலத்தும் வாழ்ந் திருக்கக் கடவாயென்று நியமித்தான்.

அதன்பின்னர் லோபனை யழைத்து, அவனுக்குக் கையிற் பொருளிருந்தும் என்செய்வேன் ஒன்றுமில் லையே என்னும் இரப்பொலியாகிய பறையும், தாங்குகி ன்ற சுமையாகிய கிரீடமும் கடல் தாண்டிப் பொருள் தேடுதற் கேதுவான மரக்கலமாகிய தேரும், பிச்சையா கிய உடைவாளும், இருகால்களாகிய வேகப்பரியும் இவை முதலியவற்றைக் கொடுத்து, நல்ல முகமன் கூறி, உனது மனைவியாகிய ஆசையோடும் கூடிப் பூமி யில் விராகனும் விரக்தியும் ஒதுங்க வொட்டாது தடு த்து, கேரள தேசஞ் சென்று வாழக்கடவா யென் றான்.

பின்னர் டம்பனைக் கூவி, அவனுக்குப் பெருமையா கிய யானை, சிங்காரமாகிய தேர், பொய்வணக்கமாகிய சிலை, வஞ்சமொழியாகிய பாணம், கபடவொழுக்கமா

கிய குதிரை என்ற இவைமுதலிய பல பொருளும் வரிசையாக வழங்கி, நீயும் உனது வஞ்சனையாகிய பத்தினியும் உனது மகனாகிய அசத்தியனுமாக எங்குஞ் சென்று நிஸ்ஸந்தேகனையும் சத்தியனையும் வென்று காசிமா நகரத்தில் வீற்றிருக்கக் கடவாயென்றான்.

அப்பால் மதனையழைத்து, அவனுக்குக் களிப்பு என்னும் யானை, மதியாத வெடித்தசொல்லாகிய பறை, தன்னை மேலாக மதித்தொழுகு மொழுக்கமாகிய குதிரை முதலியவைகளை அகங்காரனுக்குக் கொடுத்த வரிசைகள் போலவே இவனுக்குங் கொடுத்து, நீ மறதி என்னும் மனைவியுடன் உலகமெங்குஞ் சஞ்சரித்து, அடக்கனை வேரோடும் அடக்கி, பிறிது பகைவரையுங் கெடுத்து, கோதாவரிக் கரையையடைந்து வசிப்பாயாக வென்று அநுமதி கொடுத்தனுப்பினான்.

அவன் நீங்குதலும், அனத்தனையழைத்து அவனுக்குக் கேடுவருவது தெரிந்திருந்தும் மேலோருடன் எதிர்த்தலாகிய யானையும், குரங்குப் பிடிபோலப் பிடித்தலாகிய கொடியும், இடையிலே உயிர்கெடவரினும் விடாது தொடர்தலாகிய வேகக் குதிரையும் பிறவும் கொடுத்து, ஹாநியாகிய மனைவியுடனும் நாசனாகிய பிள்ளையுடனும் உலகத்தை வென்று, அற்புதயன், பிராணயாமன் முதலிய பகைவரைச் செயித்து, கன்னடதேசம் போய் அங்கிருந்து வாழக்கடவா யென்றான்.

அப்பால் மச்சரனை யழைத்து, அவனுக்குப் பிறருடைய நலங்களை யெடுத்திகழ்தலாகிய பறையும், பிறர் வாழப்பொறாமை யெய்துதலாகிய அம்பும், சபையிற் பிரவேசிக்கின் அங்கு தரிக்காமையாகிய குதிரையும், தனிமையாகிய தேரும், கவலையைமனத்திடைவைத்துத் திரிதலாகிய முக்காடு என்னும் கவசமும் ஆகிய இவை முதலிய எல்லாவற்றையும் கொடுத்து, நீ உன்மனைவியாகிய அசூயையோடு உலகமுழுதும் வியாபித்துச் சந்தோ

ஷனை அவன்மனைவியாகிய மகிழ்ச்சியோடும் நீக்கி, நச்சுமரம்போல மராடதேசத்திற்சென்று வீற்றிருப்பாயென்று கட்டளையிட்டான்.

அதன்பின்னர் வயிரனையழைத்து, அவனுக்கு முகந்திருப்புதலாகிய குதிரையும், முறுகி மனங்கறுத்தலாகியகுடையும், ஆகட்டுமென்று அச்சுறுத்தலாகிய பறையும், பிரதிக்கினையாகிய கொடியும், அடிக்கடி தலைதுளக்குதலாகிய சாமரமும் பிறவும் வரிசையாக வழங்கி, நீயும் அமரியாதையாகிய உன்மனைவியும், அக்கிரமன் என்னும் புத்திரனுமாகக் கிராதநாட்டுக்குப்போய் அங்கே யிருந்துகொண்டு உலகத்தில் சமதிருட்டி, நியாயன், அவிரோதன் என்போருடைய வலியடக்கிப் புகழ்பெற்று வாழ்கவென்று நியமித்தான்.

அப்பால் மானனை யழைத்து, அவனுக்கு நல்லோரை வணங்காமையாகிய மகுடமும், அவரைக்கண்டெழுந்திராமையாகிய பீடமும், தன்னை யெவர்தொழுதாலும் அவரைத் தான் தொழாமையாகிய கங்கணமும், துணிவாகிய கூர்வேலும், மனங் குழையாமையாகிய யானையும், இறுமாப்பாகிய கொடித்தேரும், இவைபோல்வனவாகிய பிறவற்றையும் வரிசையாக வழங்கி, நீயும் உன்மனைவியாகிய வெகுமதியும் சோமநாதபுரம் சேர்ந்து, அங்கிருந்துகொண்டே தாந்தியையும் தமனையும் அடக்கிச் சிரஜீவியாய் வாழக்கடவையென்று ஆக்ஞாபித்தான்,

அப்பால் சங்கற்பனை யழைத்து, அவனுக்கு, அற்பரையும் வணங்குதலாகிய மகுடமும், அயலார் தூற்றினும் அதனைக் கேட்டுச் சகித்தலாகிய பொன்னுபரணமும், பகைவரிடத்திலும் தங் குறைகூறுதலாகிய பேரிகையும், நினைத்தகாரியத்தை முடிக்காமையாகிய குதிரையும், பிறவற்றையும் வரிசையாய்க்கொடுத்து, நீ உன்தேவியாகிய கற்பனையோடுஞ்சென்று கூர்ச்சரதேச

த்திலிருந்துகொண்டு நிருவிகற்பனும் நிலைமையும் உலகில் தலையெடுக்காமல் அடக்கி இனிது வாழ்வாயாக வென்று கட்டளை யிட்டான்.

அப்பால் விகற்பனை யழைத்து, அவனுக்கு மண்டலம், யானை, குதிரை, சிவிகை, மகரகுண்டலம், முதலிய ஆபரணங்களும், பெரும் பொருட்குவியல், மாதராகிய சேனை, பொன் மகுடம் ஆகிய இவைகளும், அவற்றின்மீது இடையறுத கண்ணோக்க மாகிய ராஜ்யத்தையும் வழங்கி, உன்பாலனுகிய வெகுமுகனைக் கொண்டு அகமுகனை வென்று, உன்தேவியாகிய யோசனையோடு, உன் தந்தையிடம் போய், அங்கே யிருந்துகொண்டு பகைவரை வென்று வாழ்கவென்று விடை கொடுத்தான்.

அதன் பிறகு சந்தேகனை யழைத்து, அவனுக்கு நிலையின்மையாகிய தேரும், மயக்க நீங்காமையாகிய யானையும், யாரிடத்தும் நல்லொழுக்கத்தை யறியாமையாகிய வாட்படையும், தாய்போல்வா ரிடத்தும் போர் செய்த லாகிய படையும், இவைபோல் வனவாகிய பிற வரிசைகளும் கொடுத்து, நீ உன்மனைவியாகிய அசித்தியோடும் மகனுகிய கலக்கனோடும் கொங்கண தேசத்துக்குப்போய், அங்கிருந்துகொண்டு, விசித்தி, நிச்சயன், ஐயுறுன் என்போரை விலக்கி இனிது வாழ்வாயாக வென்று விடைதந்தான்.

அதன்பிறகு தாமதனை வரவழைத்து, அவனுக்கு நியதியின்றி எந்நேரமும் எவ்விடத்தும் தங்கித்தூங்குதலாகிய சயநமும், குறட்டை விடுதலாகிய வாத்தியமும், கனவாகிய கூத்தியரும், உடற்புரட்டலாகிய தேரும், பெருமூச்சாகிய குதிரையும், உடம்பிற் குத்தி வருத்தினும் வருந்தாமல் இன்புறுதலாகிய யானையும், வரிசையாகக் கொடுத்து, நீ உன்மனைவியாகிய சோம்பியோடும் கன்னியாகிய நித்திரையோடும், பாண்டி நாட்

ஷனை அவன்மனைவியாகிய மகிழ்ச்சியோடும் நீக்கி, நச்சு மரம்போல மராடதேசத்திற்சென்று வீற்றிருப்பாயென்று கட்டளையிட்டான்.

அதன்பின்னர் வயிரனையழைத்து, அவனுக்கு முகந்திருப்புதலாகிய குதிரையும், முறுகி மனங்கறுத்தலாகியகுடையும், ஆகட்டுமென்று அச்சுறுத்தலாகிய பறையும், பிரதிக்கினையாகிய கொடியும், அடிக்கடி தலைதுளக்குதலாகிய சாமரமும் பிறவும் வரிசையாக வழங்கி, நீயும் அமரியாதையாகிய உன்மனைவியும், அக்கிரமன் என்னும் புத்திரனுமாகக் கிராதநாட்டுக்குப்போய் அங்கே யிருந்துகொண்டு உலகத்தில் சமதிருட்டி, நியாயன், அவிரோதன் என்போருடைய வலியடக்கிப் புகழ்பெற்று வாழ்கவென்று நியமித்தான்.

அப்பால் மானனை யழைத்து, அவனுக்கு நல்லோரை வணங்காமையாகிய மகுடமும், அவரைக்கண்டெழுந்திராமையாகிய பீடமும், தன்னை யெவர்தொழுதாலும் அவரைத் தான் தொழாமையாகிய கங்கணமும், துணிவாகிய கூர்வேலும், மனங் குழையாமையாகிய யானையும், இறுமாப்பாகிய கொடித்தேரும், இவைபோல்வனவாகிய பிறவற்றையும் வரிசையாக வழங்கி, நீயும் உன்மனைவியாகிய வெகுமதியும் சோமநாதபுரம் சேர்ந்து, அங்கிருந்துகொண்டே தாந்தியையும் தமனையும் அடக்கிச் சிரஜீவியாய் வாழக்கடவையென்று ஆக்ஞாபித்தான்,

அப்பால் சங்கற்பனை யழைத்து, அவனுக்கு, அற்பரையும் வணங்குதலாகிய மகுடமும், அயலார் தூற்றினும் அதனைக் கேட்டுச் சகித்தலாகிய பொன்னுபரணமும், பகைவரிடத்திலும் தங் குறைகூறுதலாகிய பேரிகையும், நினைத்தகாரியத்தை முடிக்காமையாகிய குதிரையும், பிறவற்றையும் வரிசையாய்க்கொடுத்து, நீ உன்தேவியாகிய கற்பனையோடுஞ்சென்று கூர்ச்சரதேச

த்திலிருந்துகொண்டு நிருவிகற்பனும் நிலைமையும் உல கில் தலையெடுக்காமல் அடக்கி இனிது வாழ்வாயாக வென்று கட்டளை யிட்டான்.

அப்பால் விகற்பனை யழைத்து, அவனுக்கு மண் டலம், யானை, குதிரை, சிவிகை, மகரகுண்டலம், முத லிய ஆபரணங்களும், பெரும்பொருட்குவியல், மாதரா கிய சேனை, பொன் மகுடம் ஆகிய இவைகளும், அவற் றின்மீது இடையறுத கண்ணோக்க மாகிய ராஜ்யத்தை யும் வழங்கி, உன்பாலனுகிய வெகுமுகனைக் கொண்டு அகமுகனை வென்று, உன்தேவியாகிய யோசனையோடு, உன் தந்தையிடம் போய், அங்கே யிருந்துகொண்டு பகைவரை வென்று வாழ்கவென்று விடை கொடுத் தான்.

அதன் பிறகு சந்தேகனை யழைத்து, அவனுக்கு நிலையின்மையாகிய தேரும், மயக்க நீங்காமையாகிய யானையும், யாரிடத்தும் நல்லொழுக்கத்தை யறியாமை யாகிய வாட்படையும், தாய்போல்வா ரிடத்தும் போர் செய்த லாகிய படையும், இவைபோல்வனவாகிய பிற வரிசைகளும் கொடுத்து, நீ உன்மனைவியாகிய அசித்தி யோடும் மகனுகிய கலக்கனேடும் கொங்கண தேசத்து க்குப்போய், அங்கிருந்துகொண்டு, விசித்தி, நிச்சயன், ஐயுறுன் என்போரை விலக்கி இனிது வாழ்வாயாக வென்று விடைதந்தான்.

அதன்பிறகு தாமதனை வரவழைத்து, அவனுக்கு நியதியின்றி எந்நேரமும் எவ்விடத்தும் தங்கித்தூங்குத லாகிய சயநமும், குறட்டை விடுதலாகிய வாத்தியமும், கனவாகிய கூத்தியரும், உடற்புரட்டலாகிய தேரும், பெருமூச்சாகிய குதிரையும், உடம்பிற் குத்தி வருத்தி னும் வருந்தாமல் இன்புறுதலாகிய யானையும், வரி சையாகக் கொடுத்து, நீ உன்மனைவியாகிய சோம்பி யோடும் கன்னியாகிய நித்திரையோடும், பாண்டி நாட்

டுக்குச் சென்று, அங்கிருந்து கொண்டே சத்துவனை யும் அவன் தேவியாகிய புத்தியையும் வென்றடக்கி மேன்மையாய் வாழ்கவென்று நியமித்தான்.

அப்பால் இராசதனை வரவழைத்து, அவனுக்குநல்ல சிநேகத்தையும் மறத்தலாகிய விருதும், மனத்தினால் ஒருவரையும் மதியாமையாகிய வாட்படையும், எடுத்த கருமத்தைச் செய்து முடிக்கும் ஊக்கமாகிய தேரும், இன்சொல்லைக் காதினாற் கேட்டாலும் கேட்காதுபோ லிருத்தலாகிய யானையும், ஆகிய இவைபோன்ற சிறப் புக்கள் யாவையுஞ் செய்து, உன் தேவியாகிய முயற்சி யோடும், புதல்வனாகிய உத்தியோகனோடும், கன்னடக தேசத்திற்குப்போய், சத்துவன், விரத்தி, விராகன் என் போரை வென்றடக்கி, அந்தத்தேசத்தில் வாழ்ந்திரு வென்று பணித்தான். (உத்தியோகன்-காரியக்காரன்).

அப்பால் தாமதச் சிரத்தையையும் இராசதச்சிரத் தையையும் வரவழைத்து, அவர்களுக்கு ஏற்பனவாகிய வரிசைகளைக் கொடுத்து, நீங்கள் இருவீரும் சத்துவச் சிரத்தையின் கர்வத்தை யடக்கி, எந்த நாட்டிலும் தர்மசத்திரம்போல வியபிசாரத்தையே பெருக்குங்க ளென்று நியமித்தான்.

அதன்பிறகு அதன்மனை யழைத்து, அவனுக்கு இந்திரியங்களை யெவ்விடத்துஞ் செலுத்துதலாகிய தேரும், முறைகேடாகிய மதயானையும், ஒழுங்காக நல் வழியிற் செல்லாமையாகிய குதிரையும், நாவடக்க மின்றி எந்தக் கடுஞ் சொல்லையுஞ் சொல்லுதலாகிய பறையும், பரிசிலாகக் கொடுத்து, நீ உன் தேவியாகிய அதோகதியோடும், புதல்வனாகிய துக்கனோடும், கடற் கரையிலுள்ள ஊர்கள் தோறுஞ் சென்று, தருமனையும் சுகனையும் தலையெடுக்க வொட்டாம லடக்கி வாழ்கவெ ன்று விடைகொடுத்தான்.

அப்பால் அநாசாரனை யழைத்து, அவனுக்கு இன் சொற்சொல்லி, நீ உன்தேவியாகிய அகீர்த்தியால் உபே

க்ஷையை வென்று, உன் புதல்வனாகிய விடய சங்கம னால் அகமுகனை யடக்கி, உன்மகளாகிய மிச்சாதிட்டி யால் ஆஸ்திகனை யொடுக்கி, உன் திறமையால் சுசீலனை வென்று எழுலகும் அஞ்சும்படி கோல் செலுத்தி எந் நாளும் வாழ்கவென்று விடுத்தான்.

அப்பால் கலியனை யழைத்து, அவனை நோக்கி, நீ கள் விற்போர் மனையிலும், சூதாடுவோரிடத்தும், விலை மாதர் சேரியிலும், வாழ்கவென்று சொன்னது மன்றி, நீ ஆசாரனை மேற்பட வொட்டாது தடுப்பாயாக, உன் மனைவியாகிய கபடியைக் கொண்டு மைத்திரியைத் தலை யெடுக்காமல் அடக்குவாயாக, மனநிலைச் செருக்கை உன் மகனாகிய சஞ்சலனைக் கொண்டு அழிப்பாயாக என்று கூறி, என்னை விட்டு நீங்காதிருப்பாயாக வென் றும் கட்டளை யிட்டான்.

இவ்வாறு மோகராஜன் மற்றவர்களுக்கும் அவரவர் தகுதிக்கேற்ற சிறப்புக்களைச் செய்து, அவர்களுக் குரிய இருப்பிடம், பகைக்குறிப்பு, செய்கருங்கள் முத லியவற்றைக் காட்டி விடைகொடுக்க, யாவரும் அவன் கட்டளையைச் சிரசாவகித்து, அவன் பாதங்களை வண ங்கி, அவ்விடம் விட்டுத் தத்தமக்குரிய இடங்களுக்குச் செல்லுவாராயினர்.

அப்பால் மோகவேந்தன் தனதுதேவியாகிய துன் மதியினுடைய அந்தப் புரத்துக்குச் சென்று, அவளை இனிய வசனங்களால் தன்வசப்படுத்தி, அவளைப் பார் த்து, என் அன்பிற்சிறந்த அன்னமே, உன்னை யன்றி என்னுயிரென வேறோர் பொருளில்லை, ஆதலால் நான் இப்பொழுது சொல்லும் வார்த்தைகளுக்கு நீ யிசை வாயானல் உன்னால் நமது குலம் பெருக்கமடையும், நீ யென் கருத்திற் கிணங்குதலே நன்மையாகும், நான் சொல்லுகிற விஷயமென் னென்றால், பாஷண்ட விஞ் சை என்னும் ஒருத்தியின்மீது என் மனஞ் செல்லா

நின்றது, அவளை நான் மணம் புரிந்து கொள்ள நீ சம்மதிக்க வேண்டுமென்றான். அதைக் கேட்ட துன்மதியும் அப்படியேயாகட்டுமென்று சம்மதித்தலும், மோகவேந்தன் தன் அருகில் நின்றவளாகிய தாமதச் சிரத்தையைத் தூதுவிட்டுப் பாஷண்ட விஞ்சையை யிணங்குவித்து மணம் புரிந்து கொண்டான். கொண்டு, அவளோடு இடையறாத இன்பக்கலவிகள் செய்து சுகித்து வருநாளில், அவள் வயிற்றில் தீக்குணம் பலவு முள்ளவனும் கொடுங்கோல் மன்னனாகிய தன்தந்தையினும் கொடியனுமாகிய அஞ்ஞன் என்பவ னொருவன் வந்தித்தான். அந்தமைந்தன், முப்புரத்தையழித்த நெருப்புப் போலவும், பெரியோர்க்குத் துன்பஞ் செய்கிற கீழ்மக்களது பழிபோலவும் நாள்தோறும் வளர்ந்து வந்தான். அந்தப்புதல்வன் இவ்வாறு வளர்ந்துவர, மோகவேந்தன் தன் மனைவிமக்கள் உறவினர் ஆகிய யாவரும் பெருக்கமடைந்து வாழ்வதினு லுண்டாகிய பெருங்களிப்பால் தன்னை மறந்து, உலகமுழுதும் தன் கொடுங்கோல் செலுத்தி அரசாட்சி செய்து வருங்காலத்தில்.

அவித்தியாபுரச் சுருக்கம்
முற்றிற்று.

---

## 4. விவேகன்வனம்புகு சருக்கம்.

இவ்வாறு மோகராஜன் அரசுபுரிந்து வருங்காலத்தில், தாமதியாது பெருஞ்சேனைகள் உலகெங்கும் பரவி, அங்கங்குள்ள புண்ணிய ஸ்தலங்களை யடைந்து, சுகமாய் வாழ்கின்ற விவேகன் முதலானவரிடத்தில் பல தீமைகளை யுண்டாக்கி, அவர்கள் பேரும் அற்றுப் போம்படி அவர்களை யோட்டி விட்டார்கள். அப்பொழுதில் உலகிலுள்ள நல்லறம் நடுங்கியது, மாதவமொடுங்கியது, ஞானமார்க்கமும் துலைந்துபோயிற்று, நல்

லொழுக்கமும் நிலை குலைந்தது, இயமாதி எண்வகை யுறுப்புகளையுடைய யோகநெறியுங் கலக்கமடைந்தது, வேதபுராண சாத்திராதிகளும் அடங்கிப்போயின, மங் கையர்கள் கற்பழியும்படி அவரவர் வாழ்கின்ற குடிகளு ம் குன்றிப்போயின, சத்தியம் குடிபோய், பொறுமை யழிந்து, பெரியதமம்சமம் முதலாகிய ஆத்மகுணங்கள் கெட்டு,உபசாந்தி,தாந்தி,சிரத்தை,மைத்திரி,உபேக்ஷை, முதிதை என்பவைகள் போயொழிந்தன. குலமலைக ளிலுள்ளவர்களுடைய மனவுறுதியுங்கெட்டது, அறிஞ ர் வருந்தும்படி மறையோர் செய்கிற வேள்வி முதலா யினவும் நசித்தன. துறவியர் மனம் பம்பரம் போலச் சுழன்றது, தேவருலகும் நிலை தளர்ந்தது, பூவுலகும் முதுகுநெளிந்தது, இந்தவண்ணமாகப் பதினன்கு உல கும் நெருப்பிலிட்ட தளிர்போலவும், மிகு வெப்பமான வெயிலிலகப்பட்ட புழுப்போலவும், வாட்டமடைந்து வருந்தாநிற்க, விவேகனும், பகைவராகிய காமனுதியர் செய்யுங் கொடுமையைக்கண்டு, உடல் தளர்ந்து வலி குன்றி ஒரு பக்கத்தில் ஒதுங்கிப்போயினன். முற்கா லத்தில் சுக்கிரீவன் தன் தமயனுகிய வாலியினுல் வருத் தப்பட்டு வேறொரு திக்கில்லாதவனுய் மதங்கபருவதத் தைச்சேர்ந்து அவ்விடத்து வசித்ததுபோல, விவேகனு னவன் மோகன் வலியால் நிலைகுலைந்து, நர நாராயணர் வசிக்கின்ற ஸ்ரீபதரிகாசிரமத்தை யடைந்தான். முற் காலத்தில் துரியோதனுதியராகிய கொடியோரது பகைத்திறத்துக்கஞ்சி, தரும புத்திராதியர் அஞ்ஞாத வாசஞ் செய்தது போலவும், கலி புருஷனுல் வலியழிந் து நளராஜன் வனவாசம் செய்தது போலவும், மிகக் கொடியோராகிய மோகன் முதலியோர்களால் விவேக ன் வலிகுன்றி, தன்உருமறைத்து வசிக்கும் நாளில்,

இயமன்,நியமன், ஆதனன், ப்ராணுயாமன்,பிரத்தி யாகாரன், தாரணன், தியானன், சமாதி என்னும் மந்தி ரிகளெண்மரும்; நிருபகன், பொறையன், சந்தோஷன்,

சத்தியன், தருமன், அடக்கன், நிச்சயன், சாந்தி, தாந்தி, சமன், தமன், மைத்திரி, கருணை, முதிதை, உபேக்ஷை, விராகன், நிவிர்த்தி முதலிய ஆண்பெண் என்னும் இருபாலாரும் விவேகன் இருந்த இடத்தே வந்து, அவனடியில் விழுந்து சொல்லத் தொடங்கினார்கள். புலிக்காட்டிலிருப்பதை நீங்கி, நல்லவிதிவசத்தினாலே இறவாது தப்பிய மான்போல, பாவியாகியமோகனது படைவீரர்கள் எங்களைப்பங்கமடையச்செய்த பாட்டைப்பொறுத்து உமது அருள்எங்களிடத்திருந்ததனால் உயிர் பிழைத்து வந்தோம். அஞ்சினோம்! எமக்கு உமது தஞ்சமன்றி வேறில்லை. எமக்குத் தஞ்சமாயிருக்கும் உமது தன்மை யொளித்துறைதல் உமக்குத் தகுதியாகுமோ. வலிய இருளைக் கண்டு சூரியன் ஒதுங்குவது இயல்பல்லவே. பெரிய சமுத்திரத்திடையிலேயுள்ள முத்து பவழ முதலியவற்றை ஒரு படகு சென்று எடுத்து வருவதில்லையா. ஒரு சிறிய தீப்பொறி உலகங்களை யெல்லாம் அழிக்கவல்லதாகவில்லையா. சத்துருக்கள் சேனையை வெல்ல வல்லனாகிய உன்னைத் தலைவனாகக் கொண்டு நாங்களெல்லோரும் செல்லுவோமாயின் மோகனுடைய சேனையை ஒரு நொடியிலே பொடிபடச் செய்யோமோ. நீரின்றி, நல்லவிதை நல்ல நிலத்திற்படினும் பயிராகுமோ, கொள் கொம்பின்றிப் பைங்கொடி படர்ந்து நிலைபெறுமா.

வீரர் எவ்வளவு சிறந்தவராயினும் அரசனில்லாப் படை வெல்லுமா. பழி பாவங்களை வளர்ப்பதுவே தொழிலாகக்கொண்ட மோகனையும் அவன் தேவி துன்மதியையும் உயிர் வாங்காது விடுவோமாயின், குயில் கூவாமையைக் கண்ட காக்கை நமக்கும் குயிலுக்கும் பேதமென்னவென்று கருவந் தலைக்கேறி நிமிர்வது போல நிமிர இடமன்றோ? உமது தந்தையாகிய மானதன் தன் புத்திரர் யாவரும் சமமென மதிக்காது மோகனை யரசாள வைத்து, உன்னையும் உனது தாயையும்

வேறுபடத்தள்ளிவிட்டு, மோகனுக்கு முடிசூட்டி, அவனுக்கே எல்லாச்செல்வமுங் கொடுத்த விதமென்ன. நீர் அவனுக்கு யாது பிழை செய்தீர். உமது தன்மைக்கு அது தக்கதன்றே என்று அவர்கள் சொன்னவை எல்லாம் இருசெவியினுள்ளுங்கொண்டு, இருப்பீர்களாக வென்றுரைத்து, கையையமைத்து, அவர்களொவ்வொருவரையும் பார்த்து, அருள் கொடுத்து, அவர்கள் துயரத்தை நீக்கி இயமன் முதலிய மந்திரிகளுடன் சொல்லத்தொடங்கினன். அருமையாகிய அமிர்தத்தைக் கொடுத்தவர்க்கும் விஷத்தைத்தருகிற பாம்புபோன்று கொடிய குணத்தையுடைய மானதன் உன் தந்தையை வருத்தி இவ்வாறு சிறை வைத்தது பெரும் பாவமாகும். அவனைச்சிறை விடுத்தல் உனக்குப் புண்ணியமாகும் என்று நான் சொன்ன சொல்லேயன்றி வேறென்ன பிழை செய்தேன். அந்தச் சொல்லைச் சொன்னதற்கு அவன் கோபங் கொண்டு, என்தாயோடு என்னையும் வேருக நீக்கிவிட்டு, வேருெரு புதல்வனுகிய மோகனுக்கு அரசுரிமை முழுதுந்தந்து, எவ்வுலகுக்கும் இறைவன் இவனே யென்று முடி சூட்டி, என்னைத் தாழ்வு செய்த தந்தையானவன் இன்னும் என்ன துன்பம் செய்தாலும் நான் அவனுக்கு மாருக ஒன்றுஞ் செய்யலாகுமோ. தருமநெறியைக்கடந்து ஒழுகுகின்ற அரசருடைய வாக்கை எவர் ஒப்புகின்றனரோ அவரே செல்வம் பெற்றவராவார். அவர் வாக்கைச் சரியன்றென்று மறுப்பவர்யாவரோ அவர் தப்பாது கேட்டையடைவர். பித்தர்க்குத் தங்குணம் நூலினுஞ் சிறந்ததன்றோ? ஊனைப்புசிப்பதாகிய புலிக்குதருமநெறியைக் கூறிக் கொலை செய்தல் பாவமென்ருல் அதனை அது அங்கிகாரஞ்செய்யுமா? ஆதலால் என்னைக் கொன்ருலும் தீயிட்டுக் கொளுத்தினுலும், நான், பூர்வத்திலே தேவர்கள் திருப்பாற்கடலில் மந்தரகிரியை யிட்டுக் கலக்கிக் கடைந்தபோது அப்பாற்கடல் எவ்வாறு பொ

றுமையோடிருந்ததோ அவ்வாறு பொறுமை செய்வேனேயன்றித் தந்தைக்குத்தீங்கு செய்யத் துணிவதில்லை என்முன். இவற்றை யெல்லாங் கேட்டிருந்த இயமன் முதலிய எண்மருள் ஒருவனுகிய இயமன் என்னும் அமைச்சன் எழுந்து,விவேகனைக் கைகூப்பித்தொழுது அவன் முகத்தைநோக்கி, எமதுவேந்தனே, அடியேன் கூறும் வாக்கியங்களை இகழாது கேட்டருளுமாறு பிரார்த்திக்கின்றேன். குரு, அரசன், அன்னை, பிதா, தமையன் என்னும் பஞ்ச குரவரும் தாம் குரவராயினரே என்னும் உணர்வின்றி பொறுத்தற்கரிய பிழைகள் செய்வாராயின் அவரைத் தண்டித்தல் கடனெனத் தரும நெறி கண்ட மனுவுரைத் திருக்கின்றனரன்றே? தரும நெறிக்கு மாருகத் தீமை செய்கின்ற தானவரை, வானவர்கோன் போரிலே அழித்து வருதல் முற்காலத்தில் மாத்திரமன்று. இந்நாளிலும் உண்டன்றே? அது தானு, பொறுமை யெல்லாந்திரண்டொரு வடிவெடுத்தாலொப்ப விளங்கிய தருமர் தமக்குத் தீமை செய்த கிளையை யெல்லாம் அடியோடு போர் செய்து கரைத்த கதை பெரும் பாரதமானதன்றே? அங்ஙனமாகவும் உம்முடைய பாட்டனுரைச்சிறையிலிட்டு உமக்கும் உமது தாய்க்கும் துன்பஞ்செய்து அவ்வளவிலுமமையாது உலகத்திலுள்ள சகல உயிர்க்கும் இடர் செய்து வருகின்ற துஷ்டராகிய மோகனுதியரைப் போரிலடக்காமல் அவர் உமக்குத் தமராயுள்ளாரென்னும் பரிவினுல் அவரிடத்துக் கருணை வைப்பீராயின், அவரால் மேன்மேலும் துன்புறுத்தப்பட்டொழிவதன்றி அவர் உம்மீது அன்பு செய்வர் என்பதைக் கனவிலும் நினையாதிருப்பீராக. கொடிதாகிய நோயைக் கொடிதாகிய மருந்தினுல் அறுத்தாலன்றி அது குணப்படுவதில்லையே. காமனுதி படைவீரராகிய மாடுகள் வாராமல் அறமென்னும் வேலியிட்டுத்தீயவனுகிய மோகன்என்னுங்களையை வேரோடு துலைத்து உமது கருணையாகிய வெள்ள நீரைப்

பாய்ச்சி, உணர்வாகிய பசிய பயிரை மேலோங்குமாறு காத்தாலன்றிஆராத இன்பமாகியபயிரை அநுபவித்தல் அரிதரிது. ஆதலால் உமது மாதாவின் குறையைத் தீர்த்து, உமதுபரிசனங்களாகிய எங்கள் குறையையுமாற்றி, உமது பாட்டனாகிய பெரியவரைச்சிறையினின்று நீக்கி, அவித்தியாபுரத்தையும் அங்கிருந்து அரசுசெய்பவனாகிய மோகனையும் அழித்து, ஏனைய குற்றங்களையும் நிவர்த்திசெய்து, மூவுலகத்துக்கும் நீரே ஆதாரமாகும் வகை யருள்வீராகவென்று வேண்டினான்.

இங்ஙனம் இரந்துவேண்டிய அமைச்சனது நியாயங்கள் எல்லாம் விவேகன் மனத்தை உருக்க, விவேகனானவன் தளர்ந்துபோகும் தருமநெறிகளை மீட்டும் நிலை நிறுத்துதல் அவசியந்தானென்றும், மோகன் செய்கின்ற கொடுமைகள் நாகவிஷம்போல அதிகரித்தலால் இனி சும்மா இருத்தல் தகாதென்றும், மோகன் முதலியோரை உறவினரென்று மதிக்காது பகைவராக மதித்து அவரை அடக்குதல் கடமைதானென்றும் துணிந்தான். விவேகனது உள்ளத்தில் நிகழ்ந்த ஆண்மையை அவனது முகத்தின் மலர்ச்சியேசொல்ல, அதனைக் கண்ட அவனது பரிவாரங்கள் எல்லாரும் ஆனந்தித்தார்கள். விவேகனுடைய மனைவியாகிய சுமதியும் மோகனுடைய கொடிய செய்கைகளைச் சகியாதவளாய் நாயகனோடு வந்து கூடினாள். அப்பால் விவேகனும் சுமதியும் ஒருவரையொருவர் தழுவி அன்பு கூர்ந்து இருவரும் யோசனை செய்து இனிச்செய்யவேண்டியவற்றைச் செய்வோமெனத் துணிந்தார்கள்.

விவேகன் வனம்புகு சருக்கம்.

முற்றிற்று.

---

## 5. விவேகன் மந்திரச் சருக்கம்.



அவ்வாறே விவேகன் தன்னைவிட்டு நீங்காது சூழ்ந்திருப்பவர்களாகிய நிருபகன், பொறையன், விராகன், சத்தியன், தருமன், சமன், தமன், சமாதானன், சுசிலன், நியாயன், சுகன், இயமன், நியமன் முதலிய எண்மரையும்நோக்கி, இங்குவாருங்கள் என்ன, அவர்களும் எழுந்து கைகூப்பிக் கொண்டு அவன்பக்கஞ்சேர, அவர்களோடு தானும் எழுந்து ஒரு தனியிடஞ் சென்று அங்கு அவர்களை யிருக்கச்செய்து தானு மிருந்து அவர்களுடைய முகத்தைக் குளிர்ந்த கண்களோடும் மலர்ந்த முகத்தோடும் பார்த்து, என் உயிர்க்குயிரும், நட்பும், பகைவரை வெல்லுவதற் கேற்ற படைவீரரும், வாழ்வும், நல்ல உறவினரும், மற்றப் பரிவாரங்களுமாயிருக்கின்றவர்கள் நீங்களே யன்றி எனக்கு உறுதியாயுள்ளவர்கள் வேறு யாருமில்லை, ஆதலால் நான் சொல்வதைக் கவனித்துக் கேளுங்கள். நானோ தருமநெறி கூறப் போய்த் தந்தையால் வருத்த முற்றுத் தளர்ந்த பிரகலாதனை யொத்தேன், இன்னும் நான் மோகனால் வருத்தப்படுகின்றதை நோக்கினால், தமையன் போவென்றுதள்ளப் புறஞ்சென்ற விபீஷணனையு மொத்தேன், ஆயினும் அவர்களைப் போல நானு முய்தற்குத் தருமநெறி யுண்டு. என்னைப் பெற்றெடுத்த தாயினும் இனியவராகிய மூதாதையோ தீயவராகிய மோகனுதியரால் பிணிக்கப் பட்டவராய்ச் செயலற் றடங்கினராதலின் என் துயரைப் போக்கும் வல்லமையுடைய பிறர் ஒருவர் வேறிலர். தீய தொழிலால் வாழ்கின்ற வாழ்விலும் வறுமையேமேலானதென்று நன்குணர்ந்த பெரியோர் துணிவர், புல்லரோ இழிதொழிலால் வாழ்வதேமேலென்று நீதிதப்பிச் செல்லுவர். இவ்விரண்டும் நமதிடத்தும் நம் குலத்தவர்களிடத்தும் கண்டுகொண்டோம். இனி வேறு திருஷ்டாந்தம் வேண்டா. ஆதியிலே மோ

கன் எங்களைத்தள்ளி, எங்களுக் கரசுகொடாமல் மறுத்த அக்காலத்தில்தானே அவனோடு போர்தொடுத்து அவனை அடக்காமல் அவன் அதிகரித்து விட்டபின்பு அவனை வெல்ல முயலுதல், பாம்பு கடித்த அக்கணத்திலேயே அதனைத் தடுக்காமல் அதின் விஷம் தலைமண்டைச் சேறின பிறகு அவ்விஷ மிறங்கும்படி மந்திரிப்பார் செய்கைபோன்றிருந்தது. அகங்காரனது வெற்றியானது தேவலோகத்தையு மளந்துகொண்டது. காமனது வெற்றி எல்லா வுலகங்களையும் விழுங்கி விட்டது. கோபனதுபடைமூன்றுலகத்தும்நிறைந்திருக்கின்றது. லோபனது ஏவற்பணிவிடை செய்யாதவர்கள் ஒருவருமேயில்லை. உடம்பெடுத்தவர் யாவரும் லோபன் மகனாகிய இடம்பனுக்கு ஆளாய் நின்றார்கள். மதனது அந்தகாரம் உலகமுழுதும் மூடிக்கொண்டது. மச்சரனது வெற்றி செல்லாத திசை ஒன்றுளதோ. கலியனுக்கு உலகமெல்லாம் கைவசப் பட்டிருக்கின்றது. மானனை எதிர் கொண்டு பூசியாதவர்கள் விண்ணுலகத்தும் மண்ணுலகத்து மில்லை. அதர்மனோடு, போர்செய்ய வல்லார் யாவர். அசத்தியனுக்கு இடங்கொடாதவர் நாவசைத்தல் இயலாது.

நிகரற்ற அந்தப்பெரும் படைத்தலைவர் ஒவ்வொருவருக்குமே உலகமுழுதும் எதிர் நிற்கமாட்டாதென்றால், அவர்கட்கெல்லாம் இறைவனாயிருக்கிற மோகனது வெற்றியை யார்எடுத்துச்சொல்ல வல்லவர். அவர்களோடு எதிர்த்தல் ஒருவராலு முடியாது.

அவர்களது தன்மை இவ்வாறென்றால், அவர்களுடைய பொய்ந் நெறியை அழித்து மெய்ந் நெறியை நிறுத்தி எல்லாவுயிர்களுடைய மனக்கலக்கத்தை யொழித்து மூதாதையைச் சிறை மீட்டல் எவ்வாறு என்று தன்பக்கத்திலிருக்கின்ற மந்திரி முதலாயினோரது மனக்கருத்தை யறிதற் பொருட்டு வினவினன். அவ்வாறு வினவினதைக் கேட்ட நிருபகன், எழுந்து விவேகவே

ந்தனது இரண்டுபாதங்களைவணங்கிக் கைகூப்பி நின்று, யாவர்க்கும் புத்தி நுட்பந் தோன்றும்படியாகவும் தாமெடுத்த கருமம் நிறைவேறும்படியாகவும் ஆராய்ந்து பார்த்துச் சொல்லுவானாயினன்.

எவ்வாறெனில், யாவரும் விர்த்தியடையும்படி எல்லாவற்றையுமறிந்திருக்கின்ற வேந்தனே? எங்களையெல்லாம் எதிரில் வைத்துக்கொண்டு சிற்சில வார்த்தைகளை நீர் வினவினது எமது மனக்கருத்தை யறிவதற்கேயன்றி வேறல்ல. காரிய விசாரத்தை எங்களைக் கொண்டு திருத்திக் கொள்வதற்கே யென்றால் அது ஒரு விசித்திரமாயிருக்கின்றது. சூரியனுக்கு எதிரில் ஒரு தீபம் வைத்தல்போலவும், வேதியர்க்குச் சடங்கு சொல்வது போலவும், உமக்கு ஒருவர் புத்தி சொல்வது பயனற்றதாகும். ஆயினும் என்றன் சொல்லையும் சற்றே கேட்டருள வேண்டும். அது என்னெனின், விஷத்தை யுடைய பாம்பானது ஒரு மூச்சு விடுதற்கு முன்னே திரண்டுவந்த பல எலிகளும் கெடும். மலைபோலக் குவிந்து கிடக்கின்ற விறகு ஒருநெருப்புப் பொறியினால் வெந்து நீறாகும். அன்றியும் கடல்சூழ்ந்த இவ்வுலகத்தில் அறிவுடையார் யாதும் இலராயினும் செல்வம் முதலிய எல்லாவற்றையும் உடையரெனப்படுவர். அறிவில்லாதார் செல்வமும் சிறப்புமுடையவராயினும் அவர் அவற்றை உடையரல்லராவர். சமுத்திரத்தையும், விந்தமலையையும் முற்காலத்தில் அங்குஷ்டப்பிரமாணமாகிய அகஸ்தியமுனிவன் தனது கையினால் அடக்கிவிடவில்லையா? உமது பக்கத்தில் நாங்கள் எல்லாரும் வந்து நிற்பதனால் உமக்குப் பயன் யாது? உமக்குச் சமானம் ஒருவருளரோ? சிவபெருமானுக்கு மலையானது வில்லாகவும், பாம்பு நாணாகவும், திருமால் அம்பாகவும் அமைந்திருக்கவும் அவர் திரிபுரங்களை யெரித்து நீறாக்கிவிட்டது தன் புன்சிரிப்பினாலல்லவோ? நீர் இதனை ஆலோசிப்பீராயின் மோ

கனது மாயச்செய்கையும் அவனது வலியும் அவன் செருக்கும் அவன்சேனையும் செல்வமும் ஆகிய எல்லாம் ஒருமாத்திரைப் பொழுதில் நிர்மூலமாய்ப் போகுமன்றோ? என்று சொன்னான். அவன் இதனைச் சொல்லி முடிக்குமளவில், சாந்தன் எழுந்துநின்று, கைகுவித்து, விவேகனது தாமரை மலர்போன்ற முகத்தை நோக்கி, நான் விண்ணப்பஞ் செய்வதொரு செய்தியுண்டு. அதனைக் கேட்டருளவேண்டு மென்று சொல்லுவானாயினன். மிகுந்த வலியுடையோராயினும் பகைவரை வெல்லநினைப்பவர் தாம் வெல்லுதற்குரிய காலம் இடம் காரியமுடிக்கும் வகை என்பவைகளை யாராய்ந்து, காலமுதலியவை தாம் வெல்லும்படி வாய்த்தபோது படையெடுத்துப்போய்ப் பகைவரை வெற்றிகொள்ள வேண்டும். ஆதலால் போர்புரிதற்கு ஏற்றகாலம் வருமட்டும் பொறுமையோடு வேண்டிய சாதனங்களைத் தேடிக்கொண்டு அடக்கமா யிருத்தல்வேண்டும். கடையுகம் வருமுன்னே சமுத்திரமானது தன் எல்லையைக் கடவாதன்றோ? இப்போது நாம் செய்யத்தக்கது யாதெனில், நமது பகைவர்கள் செல்லாத நல்ல ஸ்தலங்களெவையென ஒற்றராலுணர்ந்து அந்த நற்றலங்களுக்குக் காமியர்கள் வேடம்பூண்டு, அந்தப் புண்ணிய க்ஷேத்திரங்களில் பிரவேசிக்கும்படி கட்டளையிட்டருளல் வேண்டும். நமது படையை அவ்விடங்களுக்குச் சிறிது சிறிதாக நாளடைவில் அனுப்பி, அவ்வவ்விடங்களிலும் அப்படையைப் பெருக்கி, பகைவருடைய வலிமையையுணர்ந்துகொண்டு, அதன் பின்னர் படையெழுச்சிசெய்து போர்செய்து அவர்களை வெல்லுவதே தகுமென்றான்.

அதுகேட்ட விவேகன், ஆகுகவென்று அவனை உட்காரும்படி கையமைத்துவிட்டுச் சந்தோஷ முகத்துடன் அடக்கனைப் பார்த்தலும், அடக்கன் எழுந்துவணங்கிக் கைகுவித்துக்கொண்டு, வேந்தே! இதுவரையில் பொ

றையன் சொன்னவைகள் உண்மையேயாயினும், பதி னாறுயிரங் கோபஸ்திரீகளிடத்து இன்ப மனுபவித்துக் கொண்டு தமது காரியத்தளவில் கருத்தை நிறுத்தியிரு ந்த கிருஷ்ணனைப்போலப் பலதொழிலைச் செய்துகொ ண்டு உட்கருத்தைக் குறித்த வொருகருமத்திற் செலு த்த வல்லவர் வேறு யாவருளர். முன்னாளிலே தவஞ் செய்கின்றவர்களும் தீயவர்களிருக்கின்ற நாட்டிலே புகுந்திருக்க வருங்காலத்தில் மாறு வேஷதாரிகளாகி யேபுகுந்து தமதுகாரியத்தை முடித்தார்கள். வழிமுறை யாக மதுரக்கனி தருவதாகிய மரத்தின் கன்றை உவர் நிலத்திற் பெயர்த்து நாட்டினால் பின்னர் நாளில் அதன் குணமும் பெயரும் வேறுவது இயற்கையன்றோ? கருங் குயிற் குஞ்சானது பறக்கும் பருவம் வரும்வரையில் காக்கைக் கூட்டினிடத் திருக்கும்போது தனது குர லொலியை மறைத்திருப்பது போலப் பின்னாளிலே தமது கருமத்தை முடிக்கவேண்டுபவர் உபாயங்களைத் தேடுவது குற்றமாகா தென்றான். உடனே சந்தோஷன் எழுந்து விவேகனை வணங்கி, ஐயனே! நான் சொல் வதைச் சிறிதுகேளும். பகைவருடனே உறவாயிருப்ப வருடைய உள்ளமோ மிகக்கொடியது, வேஷமோ மிக இனிது. அங்ஙனஞ் செய்யாத விவேகிகளுமோ மிகச் சிலர், கஜரத துரகபதாதிகளுடனே நவரத்தின கிரீடந் தாங்கி, அளவிறந்த மடமாதருடன் சுகித்து உலகத் தையு மினிது காத்துவந்த சனகன் அவ்வாழ்க்கையில் ஒரு சிறிதும் கருத்தை நிறுத்தாது பரவஸ்துவையே தியானிப்பவனா யிருந்தமையை இவ்வுலகத்தில் எடுத் துக் கூறுதவர் யாவர்? தன்னால் ஒருகாலத்தும் அறியப் படாதவர்களே யாயினும் அவர்கள் சொல்லிய ஏவல் களை யெல்லாம் விருப்போடு செய்து வந்தவனும், பலி யிடுவோனுடன்கூடி அவனேவற்படிகாளிமுன் அஞ்சா து சென்றவனும், அரசனது சிவிகையைச் சுமந்தவனு மாகிய சடபரதனுடைய உள்ளம் அவைகளில் சிறிதுந்

தோய்வின்றியிருந்ததை யார்தாம் அறியாதார். கஙைக் கூத்திக்கு எவை விருப்பமென்று அவற்றைத் தேடியீந்தும், அவள் சொல்லியபடி செய்தும், அவள் பருகி மிஞ்சிய நீரைப் பருகினவருமாகிய, சிவனும் பரிசுத்தரெனச் சொல்லத்தகுந்த திரியம்பகருடைய உள்ளம் பிறர் அறியாததல்லவே. வேடத்தளவிலே ஒருவரும் உட்கருத்தளவிலே பிறருமாயிருக்கின்ற விவேகிகள் அநேகருளர். புளியங்காயுடன் அதன்ஒடு முற்றும்வரையில் சம்பந்தித்திருந்து முற்றிய காலத்திற் பிரிந்து ஒன்றியுமொன்றுதிருப்பதுபோல விவேகிகள் ஒழுகுவர். விவேகிகள் மடமாதருடன் கூடி இன்பமனுபவிப்பினும் தங் கருத்தை யதிலழுந்தவிடார். வீதியிலே நீர்க்குடமேந்தி நடனமாடும் தாதியின் கருத்தெல்லாம் குடத்தின் மீதிருப்பது இயற்கையன்றோ? பெரியோர் அநேக மடமாதருடன் கூடி விளையாடினு மென்னை? தாழ்ந்தோர் தவவேடந் தரித்திருப்பினு மென்னை? குற்றமில்லாத தூய மனமுடையவர்களுக்கும் மனத்திற் பரிசுத்தமில்லாதவர்களுக்கும் இழிவும் சிறப்புமுண்டோ? ஆகவே ஒற்றர்களையழைத்து உலகமெங்கும் விடுத்து, எவ்விடங்களிற் பகைவருடைய வலிமை செல்லாதெனத் தேர்ந்து, அவ்வவ்விடங்களில் நமது மித்திரர்களை விடுத்துப் பகைவரை வெல்வதே தகுதியென்று சொன்னான். இங்ஙனம் சந்தோஷன் கூறி அஞ்சலியஸ்தனுய்த் தனது ஆசனத்தில் உட்கார, விவேகன் ஏனைய சமன் தமன் முதலியோரை நோக்க, அவர்களும் நமது பகையை வெல்வதற்கு இதுவே தக்க சூழ்ச்சியென்று சொல்லுவாராயினர். அவைகளை யெல்லாங் காதுகுளிரக் கேட்ட விவேகன் மனம் பூரித்து, இனிச் சிறிதுங் காலந் தாழ்க்காது முயற்சி செய்வதே கருமமென்று துணிந்து, ஒற்றரை இக் கணத்திற்றுனே அனுப்புகிறேன் என்று ஏற்றவாறு செய்வானுயினன்.

விவேகன் மந்திரச்சருக்க முற்றிற்று.

---

## 6. விவேகன் ஒற்றுக்கேள்விச் சருக்கம்.

அவ்வாறே விவேகவேந்தன், தருமன், விசாரன், சத்தியன், அமிர்தசிலன் என்னும் நால்வரையும் நோக்கி, இங்கு வாருங்கள் என்ன, அவர்களும் வந்து வணங்கி நின்று, எம்மை அழைத்த காரணம் இன்னதெனத் திருவுளம் பற்றியருளுக வென்று வேண்ட, விவேகன் அவர்களைப் பார்த்து, நீங்கள் நால்வரும் உலகெங்கும் போய், ஐயமில்லாமல் பகலுமிரவு மிடைவிடாமல் செல்லவேண்டிய இடங்களுக் கெல்லாஞ் சென்று, போர் செய்யுங்காலம் வரும் வரையும் நாம் மறைந்திருத்தற்கு ஏற்றபுகலிடம் பார்த்துவந்து எமக்குச் சொல்லக் கடவீர். தருமா! நீ அடர்ந்த விண்ணுலகத்துக்குப் போகக் கடவாய். விசாரா! நீ பூலோகத்திற் சென்று பார்க்கக் கடவாய். சத்தியா! நீ தென்புலஞ்சென்று பார்க்கக் கடவாய். அமிர்தசிலா! நீ பாதாளத்துக்குப் போகக் கடவா யென்று நால்வருக்கும் நியமிக்க, அவர்களும் விடைபெற்று விரைந்து வேடமாறிச் சென்றனர். அங்ஙனஞ் சென்ற நால்வரும் தாந்தாம் போகவேண்டிய இடங்களுக்குச் சென்று, எவ்வெவருடைய வலியையும் வாழ்வையும் தொழில் முதலியவைகளையும் உள்ளங்கை நெல்லிக்கனி போலத் தெரிந்துகொண்டு மீண்டார்கள்.

மீண்டவர்களில், விண்ணுலகஞ் சென்று பார்த்தவனுகிய தருமன் விவேகனிடஞ்சார்ந்து அவன் பாதங்களை வணங்கி நின்று, ஐயனே! வைகுந்த முதலிய வானிடங்களிலே நமது பகைவர்கள் செய்கின்ற தீமை என்னல் எடுத்துச்சொல்லப்படுந் தரத்ததன்று. சொல்லின், நாவானது வெந்துபோம், நினைக்கின் மனமானது சுறுக் கொள்ளும், கேட்கின் தீக்கோலை யெடுத்துச் சொருகிக் கொள்வதுபோ லாகுமன்றோ? வைகுந்தத்திலே நம்பகைவருடைய கொடிய செய்கையைச்

சகியாத விஷ்ணு கண்சிவந்து அங்கங்கறுத்து வாய் துவர்த்து இடைச்சேரியிற் சென்று நெய்வெண்ணெய் தயிர் பால் எல்லாமுண்டும் ஆறப்பெருதுசுற்றிலே பாற் கடலிற் சென்று பள்ளி கொள்வானுயினன். இனிச் சிவனே அப்பகைவருடைய கொடுமையால் திருமேனியி லொருபாதி தீப்போலச் சிவந்து ஒருபாதி கறுத்து அவ்வளவில் நில்லாமல் நெற்றியிலும் நீருகும்படி அக்கினியதிகரிக்க அதற்கு மருந்தாகச் சந்திரனைச் சூடினும் கங்கையைத் தரித்தாலும் அருததாயிருக்கிறது. அப்பால் பிரமன் தன்னைப்பற்றிய தீயால் முன்னே ஒரு தலை போகப்பெற்றும் அந்தத் தீயானது தன்னுள்ளே யிருந்து மேலும் வினையை விளைத்ததனுலே எக்காலத்தும் குளிர்ந்த பரிசத்தை யுடையதாகி தாமரைப்பூவிலே வாசஞ் செய்வானுகியும் அம்மனஸ்தாபம் நீங்கப் பெற்ருனில்லை. இவைமாத்திரமோ, வேந்தனே! இன்னுங் கேட்பாயாக, நம்பகைவர்கள் விநாயக மூர்த்தியைப் பாதைவழி தோறுங் குடியாக்குவித்து,நாணமின்றித் தொடையின்மீது ஒரு பெண்ணை வைத்துக்கொள்ளும்படி செய்து, அவரை நிருவாணியாகும்படி செய்து விட்ட மோசம் மகாமோசமாயிற்று. சுப்பிரமணியக் கடவுள் மோகனுடைய தீச்சரங்களால் மெய்கறுத்துக் கூடுதணிய நிழலில்லாமல் துள்ளித் துடித்து ஓடாத தினைப்புனங்களெல்லாம் ஓடி, குறப்பெண்கள் வாசஞ் செய்கின்ற மலையில் ஒரு மலைப்பக்கமாகவும் வேங்கை மரமாகவும் மாறி மறைந்தனர். இந்திரன் தனதுடம் பெங்கும் துளைக்கப்பட்டவனுய்ச் சோர்ந்து மந்தார நிழல் தேடி யுட்கார்ந்தும் தனது உடலைப்பற்றிய சோகந் தீரப்பெற்ருனில்லை. சிவ பக்தராகிய மார்க்கண்டர் மீது கூசாமல் பாசம் வீசி அவரைத் துன்புறுத்திய காலனைத் தாளாலுதைத்துத் தரையிலே வீழ்த்தும்படி சிவனைத் தூண்டிய கொடியன் நம்பகைவனுகிய கோபனன்றே. கொடியோராகிய நம் பகைவரது தீய செய்கை

யினுல் தேவர்கள் யாவரும் மண்ணிலேமிதிக்கின் மிகச் சுடுமென்னும் அச்சத்தால் மிதியாமல் அந்தரத்தில் நின்றும் கண்ணுறக்க மின்றி இன்னும் யாதுவருமோ வென்று கண்ணிமையா திருந்தும் விண்ணுலகத்தை விட்டிறங்கினுல் வெப்பேறுமே யென்று திகைத்தும் நொந்து, வருவதறியாது துடிக்கிருர்கள் என்று தேவர் களது செய்கை யிவ்வண்ண மென்று தருமன் வணக் கஞ் செய்து, ஒரு பக்கஞ் சார்ந்தனன்.

உடனே சுசிலன் எழுந்து விவேகனை வணங்கி, இறைவனே! யான் பாதலத்தைத் துருவிச் சென்று கண்டதைச் சொல்வேன், கேட்டருள்க. மோகனு டைய ஆக்கினைச் சக்கரத்திலிருந் தாடுகின்ற கோபன், காமன் முதலியவர்கள் பாதலத்திலே செய்கின்ற கொ டுமையால் நாகராஜன் கண்சிவந்து, நெடுமூச் செறிந் து, மிக்கபயம் பிடித்து, இனி பிழைக்க வழியில்லை யென்று பூமியின் கீழாகச் சென்று பூமி அவன் சிரசின் மீதுறுத்தப் பதுங்குவா னுயினன்.

கொடிய விஷத்தினும் தீயவர்களுடைய செய்கை மிகக்கொடிது என அறிஞர் சொல்வது பொய்யாகு மா? அதுபற்றியன்றே சிவனும் விஷ்ணுவும் இந்தத் தீயவர்களினும் சர்ப்பங்கள் மிக நல்லவையென் றெண் ணி முறையே அவற்றை ஆபரண மாகவும் சயனமாக வும் கொள்ளத் துணிந்தனர். கெட்ட பாதகர்களாகிய மோகனுதியர் விர்த்தி யடைந்து, பூமி கிடுகிடென்று நடுங்கும்படி துஷ்டபாவச் செய்கைகளைச் செய்த கொ டுமைக் காற்றுமல் நாகலோகத்தாராகிய ஆதிசேஷன் முதலியவர்கள் பட்டபாட்டை அவர்களே சொன்ன போது என் உள்ளம் பதறியதை என்ன சொல்வேன். அருள்தரித்த துரியோதனுதியர்க்கு அன்புள்ள தந்தை யாகிய திருதராட்டிரக் குருடனை யொத்த கொடிய மானதனுக்குப் பிரவிர்த்தி வயிற்றிற் பிறந்த திருட

ராகிய மோகனதியருக்கு நாம் ஒளித்து வாழ்வதற் கேற்ற ஒரு தேசம் எங்கேயுள்ளது. நமது குலத்துக் குப் பகைவனாகிய கருடனுக்கும் அவன் கண்ணுக்கெ திர்ப்படா திருக்கின் தப்பலாம், அறியாமை என்னு மிருளை யகற்ற வல்ல சூரியன் போலும் நிருபகனிருக்க வும் காமனுடைய வலிமை எவ்வுலகினும் மிகுந்தது என்ன கால விசேஷமோ என்பார்கள். கோபனுடைய தீமையைப் பொறையன் அடக்காதிருப்பதென்ன ஆச் சரிய மென்பார்கள். அசுந்தை நாயகனாகிய அகங்கார னைச் சாந்திகணவனாகிய சமன் வலியழிக்கத் தாமதித்த தென்ன என்பார்கள். மச்சரன் உலகத்தை யூடுருவிச் சென்று வருத்துகின்ற செய்தியைச் சந்தோஷனுக்கு எடுத்துச் சொல்வாரு மில்லையா என்பார்கள். சுடும் புலைத் தொழிலைச் செய்கின்ற டம்பனுடைய அக்கிரமங் களை நிஸ்ஸந்தேஹனும் மெய்யனும் விசாரிக்கின்றா ரில் லையே என்பார்கள். மௌட்டிகனாகிய வயிரன் நாச மாம்படி அவிரோதன் முயலாதிருப்ப தென்ன விபரீத மென்பார்கள். ஆண்டகையாகிய விவேக வேந்தனை மோகன் தனதாணைக் குட்பட்ட தாமதன் மகளாகிய நித்திரையை விடுத்து மயக்கிவிட்டானோ, அன்றி அவ் வேந்தனுடைய பத்தினியாகிய சுமதியை வேறுபிரித்து விட்டானோ? சூரியன்போல அவனிருந்தும் பனிபோ லும் இப்பகைவர்கள் செய்கையைச் சிந்தியாதிருப்ப தன் காரணமென்னையோ அறியோமென்பார்கள். இன் னும் இவ்வாறு நாகலோகத்தார் சொன்னவைகள் ஒரு கோடி கோடியுள்ளன. அவர்கள் சொன்ன வண்ணம் யான் சொல்லும் வண்ணமன்று என்று சொல்லி முடி த்தான். அங்ஙனம் சொன்ன அமிர்தசிலனை, சுமதி சமேதனாகிய விவேகன் குறுமுறுவலோடு உட்காரென ச் சொல்ல, அவன் உட்கார்ந்தனன்.

பிறகு யமலோகஞ் சென்று வந்த சத்தியன் அஞ் சலியஸ்தனாய் விவேகன் முன் எழுந்து, ஐயனே! நான்

யமலோகஞ் சென்று கண்ட விந்தைகளைக் கேட்டருள்க. காலனும் அவனுடைய கோடி கோடி தூதர்களும் உலகமெங்கும் விஷம்போலப் படர்ந்து, மிகவுங் கொடியராகிக் கண்களில் தீப்பொறி சிந்தும்படி கோபித்து நீலமேகங்கள் போல உருக்கொண்டு, கரியநெஞ்சமுடையவர்களாய், சுவர்க்க லோகத்தை யடைந்து அச் சுவர்க்க வாயிலின் பொற்கதவைப் பூட்டிட்டு, இடையிடையே வந்து சேருகின்ற புண்ணியர் சிலருக்கு மாத்திரம் திறந்து இடங்கொடுத்து விட்டு ஏனையர்யாவரையும் சிலரை இளமையிலும், சிலரை ஓடியாடும் பருவத்திலும், சிலரைப் பாடசாலையிற் சென்று கற்கும் பருவத்திலும், சிலரை யெளவனத்திலும், சிலரைப் பெண்களை மணந்தின்ப மனுபவிக்கும் பருவத்திலும், ஏனைய பருவத்திலும் அப்பால் எப்பருவத்திலும் எச்சமயத்திலும் நேற்றிருந்தான் இன்றைக்கிலன் என்ன பாவம் என்று உலகம் அசிசயிக்கும்படியாகப் பெண்ணென்றும் ஆணென்றும் பேதமின்றி உயிரை வாங்கி, வேறோருடலிற் செலுத்திக் கொடிய நரகத்தில் தள்ளி, அவருள்ளே கொடிய பாவிகளைக் கூறு கூறாக வாள் கொண்டு அடிமுதல் முடியீறாக அரிந்தும், அக்கினியிலிட்டுவாட்டியும், பாம்பு அட்டை செந்தேள் முதலியன நிறைந்த குழியிலே தள்ளியும், அக்கினிமயமாகக் காய்ந்து சிவந்த இருப்புத் தூணோடு சேர்த்துக் கட்டியும் இவ்வாறு எண்ணில்லாது பேதப்பட்ட நரகவேதனைகளைச் செய்து வருத்துகின்ற தன்மையை எவ்வாறு சொல்வேன். அங்ஙனம் வருத்தப்படுகிற சீவர்களின் தொகையைக் கணக்கிடவும் போமோ. கடற்கரை மணல்தானும் அவ்வளவாகாதே யென்று சொன்னான்.

ஐயனே! இன்னுமவர்கள் சொல்வதைச் சிறிது கேட்டருள்க. பெண்டுபிள்ளை சுற்றம் பின்னுக்குதவியென நினைந்து, தருமத்தைச்சிறிதும் நாடாமல், அவர் பொருட்டுக் கடன்பட்டு எம்பொருளை யெல்லாம் இறு

த்தோமே யென்பார் சிலர். பெண்பிள்ளை சுற்றத்தவர்களே, உண்டீர், உடுத்தீர், உற்றவேளைக்கு ஒருவரும் வந்து அண்டமாட்டீர், அந்தோ; உம்மை நம்பி அடைந்த கதியிதுவோ என்பார் சிலர். கொடுஞ்சாருவாகப் பாவி மாறுபாடாய் மறங்கூறி வேறுலோக மில்லையென்பதைக் கேட்டுக்கெட்டோம் என்பார் சிலர். நீறு கோபி திருநாமம் ஆகிய இவைகளை நெற்றியிலிடாத சமணருடைய நூல்வழியிற் புகுந்து திகைத்தோமே யென்பார் சிலர். உடம்புகளெல்லாம் ஒரு கணத்திற் பிறந்து ஒருகணத்தில் இறக்கு மியல்பினவாகவும் அவைகளுக்குப் பாவமும் உண்டோ வென்று புத்தன் சொன்னதை நம்பிக் கெட்டோமே யென்பார் சிலர். பரிசுத்தனாகிய விவேகனையும் சும்மா வருத்தின மகா பாதகரிடம் எமக்குண்டாகிய கன்மக் கொடும்பாவம் சென்றடைக வென்பார் பலர். பொருளைத்தேடிச் சிறு தொழிலிற் செலவிட்டது மன்றி உணர்ச்சியற்றுப் பதகரைப்பாடிப் பிழைத்ததெல்லாம் இப்பொழுது நமக்குப் பலித்ததென்பார் சிலர். இப்படி எம்மைக் கேட்டுக் கேதுவாக்கின பாவி இன்னு மொருமுறை எம்மைப் பிறக்கவிடின், நாம் அங்கே செல்லுவோமா என்பார் சிலர். என்றும் இறக்கமாட்டோம் என்றிருந்தோம், இறப்பதையறிந்தால் அன்றுபடைத்த பொருளை அன்றே மறையவர்க்குக் கொடுப்போமே யென்பார் சிலர். இப்போது எம்மை அங்கே போய்வரும்படி யனுப்பினல் புதைத்த திரவியத்தையெல்லாம் மனப்பூர்த்தியாய்த் தருமஞ்செய்து இங்கு ஓடிவருவோமே யென்பார் சிலர், பிறந்தவுடனே துறந்து சுத்தப்பிரமத்தையறிந்து பிறப்பை மறந்து இந்த நரகத்திலே பொருந்தாதிருக்கும் பாக்கியமும் நமக்குக் கிடைக்குமோ என்பார் சிலர். இவ்வாறு நரகத்திலேயழுந்தித் துன்பமடைவதை யறியாமல் சிறந்த விவேகனுடைய செயலை நிராகரித்தோமே என்பார் சிலர், இவ்வாறே கொடிய

நரகத்திலே கிடந்து வருந்துவோர்கள் எடுத்துச் சொல்லுகிற சொற்களையும் அடையும் துன்பங்களையும் எடுத்துச் சொல்ல வல்லவர் யார் என்று தான் கேட்டவைகளையெல்லாம் இயன்றவளாயிற் சொன்னான். இப்படி சத்தியன் சொல்லித் தனது ஆசநத்தில் உட்கார, விசாரன் எழுந்து விவேகனை நோக்கி, ஐயனே, நான் கண்டறிந்தவைகளையுஞ் சொல்வேன், கேட்டருள்வாயாக, சௌபரி ரிஷியானவர் ஓடைக்குள்ளே புகுந்து மறைந்திருந்ததும் அங்கும் மன்பதபாணம் போய் அவரை யிழுத்துக் கரைக்குக் கொண்டுவந்து அவரை மாயையின் வசப்படும்படி செய்ததை என்னென்று சொல்வேன். ஓடமேறி நட்டாற்றிலே செல்லும்போது பராசரரை மச்சகந்திமீது மோகங்கொள்ளுவித்து அவளுடன் சிறிதும் குற்சிதமின்றிச் சேரும்படி செய்த காமன் திறத்தை எவ்வாறுரைப்பேன். வேதங்களை செவ்வையாயுணர்ந்து அவைகளை வகுத்தவராகிய வியாசரைத் தனக்கிளைஞர் மனைவியுடன் கூடச்செய்த மன்மதனது கொடுமையைக் கண்டு கூசாதவர் யாவர்? அக்காமனுதியர் செய்கின்ற தீமையைச் சகிக்க முடியாமலன்றோ பெரியோர்கள் உறவும் மனையும் ஊரும் வளநாடும் செல்வமும் பிறவும் விட்டுத் துறவையடைந்து ஊர்தோறுஞ் சென்று பிச்சையேற்றுண்டு திரிவாராயினர். நம்மவரான சிலர், அஞ்சாக் கொடும்புல்லராகிய காமனுதியருடைய கொடுஞ்செயலாகிய அக்கினியிலும் பஞ்சாக்கினியே குளிர்ந்ததென்று அவற்றின் மத்தியினின்று தவஞ்செய்யப் புறப்பட்டவரும், சிலர் கண்ணை மூடிக்கொண்டு பிரபஞ்ச பிரஞ்ஞையற்று யோகஞ் செய்பவரும், சிலர் நீருக்குள்ளே சென்று ஒளித்தவருமாயினரன்றோ? தீமையைச் செய்தலே தொழிலாகவுடையவர்களுடைய தீயகுணம் தம்மைப் பற்றிக் கொள்ளுமென்னும் அச்சத்தால் சில முனிவர்கள் காட்டுக்கு ஓடினர்கள். ஏனையசிலர் மலைச்சாரலை யடைந்து

அம்மலையின் கண்ணுள்ள குகைகளிலே ஓடியொளித்தார்கள். மிகுதியானவர்கள் ஓடாததிசையில்லை, வேதியருடைய கருமமெல்லாம் மாறி அவராற் செய்யவேண்டிய கருமங்களை மற்றைச் சாதியார் செய்வாராயினர். உயர்ந்தவர்களெல்லாம் தாழ்ந்தவர்களிடஞ் சென்று பிரயோஜனமடைய விரும்பி வணக்கஞ் செய்கிறார்கள். மேலோர் சோதிடங்கேட்கக் கீழோர் அதனை யுரைக்கிறார்கள். ஆலயங்களும் அகரங்களு மழிந்தன. மடாலயங்கள் நந்தவனங்கள் பாழாயின. சற்கருமங்கள் தாழ்ந்தன. சீலம் நல்லொழுக்கங்கள் குறைந்தன. செய்யத்தகாத கருமங்கள் ஓங்கின. மயக்கத்தைச் செய்கின்ற மாதருடைய முழக்கமே பெரிதாயிற்று. காரணமின்றிக் கடும்போர்களுண்டாகின்றன. வீடுகள்தோறும் மேன்மை யென்பதற்றுக் கீழ்மையே செறிந்தது. வைதிக நெறிகள் மறைந்தன. அதற்கு மாறான நெறிகளோ தழைத்தன. அப்படியே உலகவழக்கமெல்லாம் தலைதடுமாறிப்போயின. நல்வழியிலே செல்லுகின்ற சிலரும் தீயவழியிலே செல்வார் போன்றே திரிகின்றனர். இப்படித் திரியாவிடின் தீயவழியிற் செல்கின்றவரால் தீமை விளையுமென் றஞ்சியே அங்ஙனந் திரிகின்றனர். அவரை அப்படிப்பட்டவரென்றறிவதற்கு என்னலு மாகாமற் போயிற்றன்றோ? ஆயினும் இம்மோகனுதியரால் நெருங்க முடியாத தெய்வ ஸ்தலங்களும் பரிசுத்தமான தீர்த்தங்களும் புண்ணிய பர்வதங்களும் திவ்விய வனங்களும் சில உண்டு என்று சொன்னான். சொல்லுதலும் விவேகவேந்தன் முகமலர்ந்து, விசார! நீ யன்றோ சாமார்த்தியன்; என அழைத்து ஆசிகூறி, நீ இப்போது அத்தீயவர்கள் அணுகக்கூடாத சிலபுண்ணியஸ்தலங்களும், நதிகளும், மலைகளும், வனங்களும் சில உண்டென்று சொன்னவற்றை எனக்குவிரித்துக்கூறுவாயாக என்று சொன்னான். சொல்ல அவனும் சொல்வானாயினன்.

ஐயனே! யான் கண்டுவந்த ஸ்தலங்களிவை. சித ம்பரம், திருவேட்களம், திருநெல்வாயில், திருக்கழிப் பாலை, திருநல்லூர்ப் பெருமணம், திருமயேந்திரப் பள்ளி, திருமுல்லைவாயில், திருக்கலிக்காமூர், திருச்சாய்க் காடு, திருப்பல்லவனீச்சரம், திருவெண்காடு, திருக்காட் டுப்பள்ளி, திருக்குருகாவூர், சீர்காழி, புள்ளிருக்கு வே ளூர், திருக்கோலக்கா, திருக்கண்ணார்கோயில், திருக் கடைமுடி, திருப்புன்கூர், திருநீடூர், திருநின்றியூர், அன்னியூர், வேள்விக்குடி, எதிர்கொள்பாடி, திருமண ஞ்சேரி, திருக்குறுக்கை, திருப்பறியலூர், குரக்குக் கா, வாளொளிபுற்றூர், மண்ணிப்படிக்கரை, ஓமாம் புலியூர், கானாட்டுமுள்ளூர், திருநாரையூர், கடம்பூர், பந்தண நல்லூர், கஞ்சனூர், திருக்கோடிகா, திருமங் கலக்குடி, திருப்பனந்தாள், திருவாப்பாடி, திருச்சேய் ஞலூர், திருந்துதேவன்குடி, திருவாயிலூர், கொட் டையூர், திருவின்னம்பர், திருப்புறம்பயம், திருவிசய மங்கை, திருவைகாவூர், வடகுரங்காடுதுறை, திருப் பழனம், திருவையாறு, திருநெய்த்தானம், பெரும்புலி யூர், திருமழபாடி, திருப்பழூவூர், திருக்கானூர், அன் பிலாலந்துறை, திருமாந்துறை, திருப்பாற்றுறை, திரு வானைக்கா, திருப்பைஞ்ஞீலி, திருப்பாச்சிலாச் சிரா மம், ஈங்கோய்மலை இவை காவேரிக்கு வடகரையி லுள்ளவைகள். வாட்போக்கி, கடம்பந்துறை, திருப்ப ராய்த்துறை, கற்குடி, மூக்கீச்சரம், திருச்சிராப்பள்ளி, எறும்பியூர், நெடுங்களம், மேலைக்காட்டுப்பள்ளி, ஆல ம்பொழில், திருப்பூந்துருத்தி, திருக்கண்டியூர், சோற் றுத்துறை, திருவேதிகுடி, தென்குடித்திட்டை, திருப் புள்ளமங்கை, சக்கரப்பள்ளி, திருக்கருகாவூர், திருப் பாலைத்துறை, திருநல்லூர், திருவாவூர், பசுபதீச்சுரம், திருச்சத்திமுற்றம், திருப்பட்டீச்சரம், திருப்பழை யாறை, வடதளி, திருவலஞ்சுழி, குடமூக்கு, திருக்கு டந்தைக்கீழக்கோட்டம், திருக்குடந்தைக்காரோணம்,

திருநாகேச்சுரம், திருவிடைமருதூர், தென்குரங்காடுதுறை, திருநலக்குடி, வைகன்மாடக்கோயில், திருநல்லம், திருக்கோழம்பம், திருவாவடுதுறை, திருத்துருத்தி, திருவழுந்தூர், திருமயிலாடுதுறை, திருவிளநகர், திருப்பறியலூர், திருச்செம்பொன்பள்ளி, திருநனிபள்ளி, திருவலம்புரம், தலைச்செங்காடு, திருவாக்கூர்த்தான்றோன்றிமாடம், திருக்கடவூர், திருக்கடவூர் மயானம், திருவேட்டக்குடி, திருத்தெளிச்சேரி, தருமபுரம், திருநள்ளாறு, கோட்டாறு, திருவம்பர்ப்பெருந்திருக்கோயில், திருவம்பர்மாகாளம், மீயச்சூர், இளங்கோயில், திலதைப்பதி, திருப்பரம்புரம், சிறுகுடி, திருவீழிமிழலை, வன்னியூர், கருவிலி, பேணுபெருந்துறை, நறையூர்ச்சித்தீச்சரம், அரிசிற்கரைப்புத்தூர், சிவபுரம், கலையநல்லூர், கருக்குடி, திருவாஞ்சியம், திருநன்னிலத்துப்பெருங்கோயில், திருக்கொண்டீச்சரம், திருப்பனையூர், திருவிற்குடி, திருப்புகலூர், திருப்புகலூர் வர்த்தமானீச்சரம், இராமநதீச்சரம், திருப்பயற்றூர், திருச்செங்காட்டங்குடி, திருமருகல், திருச்சாத்தமங்கை, நாகைக்காரோணம், சிக்கல், கீழ்வேளூர், தேவூர், பள்ளி முக்கூடல், திருவாரூர், திருவாரூரரநெறி, திருவாரூர்ப் பரவையுண்மண்டளி, திருவிளமர்கரவீரம், பெருவேளூர், தலையாலங்காடு, குடவாயில், திருச்சேறை, நாலூர் மயானம், கடுவாய்க் கரைப்புத்தூர், இரும்பூளை, அரதைப் பெரும்பாழி, அவணிவணல்லூர், பரிதியமம், வெண்ணியூர், பூவனூர், பாதாளீச்சரம், திருக்களர், சிற்றேமம், திருவுசாத்தானம், இடும்பாவனம், கடிக்குளம், தண்டாலரூணெறி, கோட்டூர், வெண்டுறை, கொள்ளம்பூதூர், பேரயில், கொள்ளிக்காடு, தெங்கூர், நெல்லிக்கா, நாட்டியத்தான்குடி, காறுயல், கன்றுப்பூர், வலிவலம், கச்சினம், கோளிலி, திருவாய்மூர், திருமறைக்காடு, அகத்தியான்பள்ளி, கோடிக் குழகர் இவை காவேரிக்குத் தென்கரையிலுள்

ளன. திருக்கோணமலை, திருக்கேதீச்சரம் இவை ஈழ நாட்டிலுள்ளன. திருவாலவாய், திருவாப்பனூர், திருப்பரங்குன்று, திருவேடகம், கொடுங்குன்றம், திருப்புத்தூர், திருப்புனவாயில், இராமேச்சுவரம், திருவாடானை, திருக்கானப்பேர், திருப்பூவணம், திருச்சுழியல், திருக்குற்றாலம், திருநெல்வேலி இவை பாண்டி நாட்டிலுள்ளன. திருவஞ்சைக்களம் இது மலைநாட்டிலுள்ளது. அவிநாசி, திருமுருகன்பூண்டி, திருநணா, கொடிமாடச் செங்குன்றூர், வெஞ்சமாக்கூடல், திருப்பாண்டிக்கொடுமுடி, கருவூரானிலை இவை கொங்கநாட்டிலுள்ளன. திருநெல்வாயில்அரத்துறை, திருப்பெண்ணாகடம், கூடலையாற்றூர், திருவெறுக்கத்தம் புலியூர், திருத்தினைநகர், திருச்சோபுரம், திருவதிகை, திருநாவலூர், திருமுதுகுன்றம், திருநெல்வெண்ணெய், திருக்கோவலூர், அறையணி நல்லூர், இடையாறு, திருவெண்ணெய் நல்லூர், துறையூர், வடகூர், திருமாணிகுழி, திருப்பாதிரிப்புலியூர், முண்டீச்சரம், புறவார் பனங்காட்டூர், ஆமாத்தூர், திருவண்ணாமலை இவை நடுநாட்டிலுள்ளன. திருக்கச்சியேகம்பம், திருக்கச்சிமேற்றளி, திருவோணகாந்தன்றளி, கச்சியனேகதங்காவதம், கச்சிநெறிக்காரைக்காடு, குரங்கணின்முட்டம், திருமாகறல், திருவோத்தூர், பனங்காட்டூர், வல்லம், திருமாற்பேறு, திருவூறல், இலம்பையங்கோட்டூர், திருவிற்கோலம், திருவாலங்காடு, திருப்பாசூர், திருவெண்பாக்கம், திருக்கள்ளில், திருக்காளத்தி, திருவொற்றியூர், வலிதாயம், திருமுல்லைவாயில், திருவேற்காடு, திருமயிலாப்பூர், திருவான்மியூர், திருக்கச்சூராலக்கோயில், திருவிடைச்சுரம், திருக்கழுக்குன்றம், அச்சிறுபாக்கம், திருவக்கரை, அரசிலி, இரும்பை மாகாளம் இவை தொண்டநாட்டிலுள்ளன. திருப்பருப்பதம், இந்திரநீல பருப்பதம், அனேகதங்காவதம், திருக்கேதாரம், நொடித்தான் மலை இவை வடநாட்டிலுள்ளவைகள்.

திருக்கோகரணம் இது துளுவநாட்டிலுள்ளது. என இவை இருநூற் றெழுபத்து நான்கும் சிவஸ்தலங்களாம்.

எழுமூர், கொல்லிக் குளிரறைப்பள்ளி, பேராவூர், ஏழூர், தோழூர், வீரட்டம், ஏமப்பேறு, தக்களூர், அளப்பூர், கச்சிப்பழையார், பலதளி, காம்பீலி, ஏரிடவை குறும்பலவு, வெங்கூர், குழையூர், கொங்கணம், பிரம்பிலேமகூடம், தஞ்சை, கொடுங்கோளூர், கஞ்சாறு, குன்றியூர், முழையூர், விராடபுரம், கண்ணை, காட்டூர், உஞ்சேனை மாகாளம், ஏமநல்லூர், பொதியின் மலை, உருத்திரகோடி, பஞ்சாய்க்கை, நியம நல்லூர், விளத்தொட்டி, அறப்பள்ளி, குமரி, பேரூர், கடைமுடி, கருகற் குரனகரம், வெற்றியூர், கொங்கசோகம், திரிசோமீசம், மைண்டீச்சரம், மாகோணம், சூலமங்கை கோட்டுக்காடு, மந்தானம், மந்தாரம், வாரணசி, ஊற்றத்தூர், நாங்கூர், வாதவூர், பொய்கை நல்லூர், மாட்டூர், மற்குன்றம், நெற்குன்றம், அத்தியூர், இடைப்பள்ளி, புலிவலம், உறையூர், இறையான்சேரி, படம்பக்கம், குணவாயில், பூழியூர், கூந்தலூர், பட்டி குத்தம், குடியத்தங்குடி, குருந்தங்குடி, திருவண்குடி, சாலைக்குடி, வேதீசம், பிடவை, குரக்குத்தளி, தென்னிறைக்காட்டூர், நிறைக்காட்டூர், பிறைக்காட்டூர் இவை வைப்பு ஸ்தலங்கள்.

## விஷ்ணு ஸ்தலங்கள்.

திருவரங்கம், உறையூர், திருமுட்டம், திருத்தஞ்சை, திருவன்பில், கரம்பனூர், வெள்ளறை, புள்ளம் பூதங்குடி, ஆதனூர், திருப்பேர், அழுந்தூர், சிறுபுலியூர், சேறை, தலைச்சங்க நாண்மதியம், திருவாலி, திருக்குடந்தை, கண்டியூர், விண்ணகரம், கண்ணபுரம், திருநாகை, கண்ணங்குடி, நந்திபுரவிண்ணகரம், நறையூர், புருடோத்தமம், காழிச் சீராமவிண்ணகரம், சித்ரகூடம், கவித்தலம், கண்ணமங்கை, நாங்கூர், மணிமாடக்கோ

யில், திருத்தெற்றியம்பலம், வெள்ளியங்குடி, செம்பொன் செய்கோயில், திருமணிக்கூடம், அரிமேய விண்ணகரம், திருவைகுந்த விண்ணகரம், திருத்தேவனூர் தொகை, காவளம்பாடி, வெள்ளக்குளம், பார்த்தன் பள்ளி, திருத்துவரை, திருப்பாவநாசம் இவை சோழநாட்டுத் திருப்பதிகள். திருமாலிருஞ்சோலைமலை, திருக்கூடல், திருமெய்யம், திருக்கோட்டியூர், திருப்புல்லாணி, திருத்தண்கா, மோகூர், வில்லிபுத்தூர், திருக்குறுங்குடி, திருக்குருகூர், தொலைவில்லி மங்கலம், சீவரமங்கை, தென்பேரை, திருவைகுந்தம், திருப்புளிங்குடி, திருக்குளந்தை, வரகுணமங்கை, திருக்கோளூர் இவை பாண்டிநாட்டுத் திருப்பதிகள்.

திருவநந்தபுரம், வண்பரிசாரம், காட்கரை, புலியூர், செங்குன்றூர், மூழிக்களம், திருநாவாய், திருவல்லவாழ், திருவாட்டாறு, திருவண் வண்டூர், திருவாறன்விளை, திருக்கடித்தானம், திருவிற்றுவக்கோடு, திருக்கச்சி, திருவூரகம், திருப்பாடகம், திருவெஃகா, அத்திகிரி, பரமேச்சுர விண்ணகரம், அயிந்திரபுரம், திருவேளுக்கை, திருக்காரகம், திருக்கள்வனூர், கார்வானம், திருவெவ்வுளூர், அட்டபுயங்கம், திருநீர்மலை, திருநீரகம், திருநின்றவூர், திருக்கடன் மல்லை, திருவல்லிக்கேணி, திருப்புட்குழி, திருக்கடிகை,திருவிடவெந்தை, திருவேங்கடம் இவை தொண்டை நாட்டுத் திருப்பதிகள்.

திருச்சிங்கவேள் குன்றம், அயோத்தி, நைமிசாரணியம், வடமதுரை, கங்கைக்கரைக்கண்டம், பதரிகாசிரமம்,திருப்பிருதி,பிருந்தாவநம், சாளக்கிராமம், திருவாய்ப்பாடி, திருவைகுந்தம், திருப்பாற்கடல் இவை வடநாட்டுத் திருப்பதிகள்,

இப்படிப்பட்ட புண்ணிய ஸ்தலங்கள் இன்னும் அநேகமுண்டு. இவைகளில் சிவபெருமானும் திருமா

லும் மனமகிழ்ச்சியோடு எழுந்தருளி யிருப்பார்கள். அன்றியும் புண்ணிய தீர்த்தங்கள் அநேகமுண்டு. இவை யாவும் மோகவேந்தனது கொடுங்கோன்மையால் கார் காலத்துச் சூரிய சந்திரர்களும் உடுக்களும் ஒளிமழுங்கி யிருப்பதுபோல விளங்காதிருக்கின்றன என்றிவ்வாறு விசாரன் சொல்லிமுடித்தான்.

இதைக்கேட்ட விவேகன் தலையசைத்து, விசாரனை நோக்கி, நமது படைவீரர்களை அவ்வவ்விடங்களுக்கு அனுப்புவோம், அது நிற்க, மோகன் முதலான நமது பகைவரது படைஞர் எவ்வெத் தலங்களில் வாழ்கின்றார்கள். அந்தச் செய்தியை விரிவாயெடுத்துச் சொல்லக்கடவையென்று நியமிக்க, விசாரன் சொல்லுகின்றான். எப்படியெனின், நாம் அடையவொண்ணாத அவித்தியாபுரத்தில், நவத்துவாரங்களை யுடைய வீட்டில், துன்மதியும் பாஷண்டவிஞ்சையும் ஆகிய மாதரிடத்தில், கொடுமையாகிய கலியன், சாருவாகன், அநாசாரன், காபாலி என்பவர் சூழ, மோகவேந்தன் வீற்றிருந்து எல்லா வுலகங்களிலும் தன் கொடுங்கோல் செலுத்தி, ஆங்காரன் முதலானோரை அங்கங்கே யமைத்து தத்தம் தொழில்களை நடத்தும்படி கட்டளையிட்டான். அவன் சொற்படியே காமன் தன் தேவியோடும் புதல்வனோடும் காஞ்சிப்பதியில் பிரவேசித்து அவ்விடத்தி லிருந்துகொண்டே எல்லாவுலகங்களையும் தன்வலி மிகுதியால் அடக்கி வெற்றிகொண்டான். ஆங்காரன் கவுடதேசத்திலும், அவன் மகனாகிய லோபன் கேரளதேசத்திலும், அவன் தநயனாகிய இடம்பன் காசிநகரத்திலும், மதன் என்பவன் கோதாவிரி தீரத்திலும், அதன்மன் என்பவன் நெய்தனிலத்தூர்கள் தோறும், கோபன் யவநதேசத்திலும், மச்சரன் மராடத்திலும், சந்தேகன் கொங்கணதேசத்திலும், சங்கற்பன் குச்சரதேசத்திலும், இராசதன் தாமதன் என்பவர்கள் பாண்டிநாட்டிலும் சோணாட்டிலும், மாநன் என்ப

வன் மேனுட்டிலும், வயிரன் எயினதேசத்திலும், அநர்த்தன் கன்னடதேசத்திலும், ஆக இவ்வாறு தத்தம் மனைவி மக்களோடிருந்து எல்லாவுலகங்களையும் கைப்பற்றித் தத்தந் தொழில்களை நடத்தி, நம்மவர் ஒதுங்கும்படி தாக்கி இனிது வாழ்கின்றுர்கள் என்றுசொன்ஞன். இப்படி விசாரன் சொல்லக்கேட்ட விவேகன் விசாரன் முதலியோரை நோக்கிச் சொல்வானுயினன்.

விவேகனேற்றுக் கேள்விச்சுருக்கம்
முற்றிற்று.

---

## எ-வது. விவேகன்சேனை கரந்துறை சருக்கம்.



இப்போது நீங்கள் சொல்லிய சூழ்ச்சிப்படியே நமது சேனைகளைப் பற்பல இடங்களுக்குப் போக்கி ஆங்காங்குதம்மை வெளிப்படுத்தாது கரந்துறையும்படி அமைக்கப்போகிறேன், ஆதலால் யாவரும் சிறிது பொழுது அமைதியாயிருங்க ளென்றுன். அவ்வுரைப்படி யாவரும் அமைதியாயிருக்க, நிருபகனும் அவன் சேனுபரிவாரங்களும் காஞ்சிக்கும், அவன் மைந்தன் நிச்சயனும் அவன்படைவீரரும் கோகர்ண தலத்துக்கும்,அமிர்தசிலனும் அவன் குழாமும் காசிநகரத்துக்கும்,விராகனும் அவன்துணைவரும் அநந்த சயனத்துக்கும், அடக்கனும் அவன் சேனுவீரரும் பத்திரகிரிக்கும், சத்தியனும் அவன் அணிகளும் பகீரதிக்கரைக்கும், பொறையனும் துணைவரும் சிந்து நதிக்கரைக்கும்,அவிரோதனும் படைவீரரும் காளத்திகிரி சேடகிரி முதலிய மலைப்புறங்களுக்கும், தபனும் துணைவரும் நாத முதலாகவுள்ள எத்தலங்களுக்கும், நிருவிகற்பனும் அவன்படைஞரும் நாசிகைக்கும், சந்தோஷனும் அவன் தானையும் கோதாவிரிநதிப் புறத்துக்கும், புனிதை நாயகனுகிய சத்துவனும்படைவீரரும்,சிற்சிலராகத் தென்னுட்டிலேயுள்ள

காவிரிவைகைமுதலியநதிதீரங்களுக்கும்,தருமன்சேனைகள் கூறுகூறுகப் பிரிந்து சேது வேதாரணியம் நாகை முதலிய சமுத்திர தீரங்களுக்கும், சமன் தானைகள் சிற்சிலராகக் கங்கா சங்கம முதலிய சங்கமங்களுக்கும் ஏனையரும் இவ்வாறே ஏனைய இடங்களுக்குச் சென்று கரந்துறைவீர்களாகவென்று விவேகன் ஆஜ்ஞாபித்தான். பின்னரும் நிருபகனை நோக்கி, உனது படைவீரர் சிற்சிலரை தூதுவராக நமது படைஞர்நிற்கின்ற இடங்கள்தோறும் ஓரொருவர் சென்று ஆங்கு வசிக்கும்படி ஏவுவாயாக என்றுரைக்க, அவனும்அவ்வாறே செலுத்தினன். அப்பால் தன்பக்கத்தில் நின்ற மற்ற வீரர்களை நோக்கி,நீங்கள் யாவரும் எம்மிடத்திலிருங்களென்றான்.

இங்ஙனம் யாவருக்கும் கட்டளையிட்ட பின்னர், படைவீரர்கள் விவேகனை வணங்கி, உனது ஏவலைத் தலைமேற் கொண்டு நமது பகைவருடைய வலியை ஒருவாறடக்கி வருவோமென விடைபெற்று,நிருபகன்முதலிய சேனதிபதிகள் தத்தம் படைஞரை நோக்கி, நீங்கள் யாவரும் உங்கள் உங்கள் விரோதிகள் இருக்குமிடங்களுக்குச் சென்று வேற்றுருக் கொண்டு ஒருவர் கண்ணுக்கும்புலப்படாமல் மறைந்துறையுங்கள் என்று நியமிக்க, அவ்வாறே அப்படைஞர் யாவரும் தத்தம் விரோதிகள் இருக்குமிடங்களிற் சென்று மறைந்துறைந்தார்கள். தருமபுத்திரன் முதலானோர் அஞ்ஞாதவாசஞ் செய்ததுபோல விவேகன் படைஞர் மறைந்துறைந்து தத்தம்பகைவருடைய செயலுக்கேற்ற வேடந்தாங்கி அவ்வப்பதிகளிலுறைந்து,தமது குணமும் தொழிலும் வெளிப்படாவண்ணம் எவ்வகைத்தீய வொழுக்க முடையவர்களுடனும் கூடி அவரோ டுறவாடுவோர், ஆடுமவரோடும் விளையாடுவோர்,மடந்தையர் அனேகருடனே கூடுமவரோடு உறவு கூடுவோர், திருவிழாவென்றும் கோயிலென்றும் குளமென்றும் ஓடுகின்றவர்க

ளோடும் அபலோடுவர், நகைப்பவருடனே கூடி நகை யாடுவர், பாடுமவரோடும் யாழிஞேடு ஏழிசையும் பாடு வர், இவ்வாறு விவேகன் சேனைகள் ஆரியப்பாவை யாடி னுலும் காரியத்தின்மேற்கண் என்றூற்போல எத்திற த்தினருடனும் கூடி ஒழுகுவாராயினர்.

இங்ஙனம் நீறுபூத்த நெருப்புப்போலவும் மாசு கொண்டமாணிக்கம் போலவும் உண்மை வெளிப்படா தொழுகிவரும் நாளில், காஞ்சியிற் பிரவேசித்து காமம் பயிற்றுங்குரவர்போல வேடம் பூண்டு அநேகருடன் சிநேகஞ் செய்துவந்த நிருபகன் படைஞர், பருவமும் பக்குவமும் பார்த்து, காமப்பயனைப் போதிக்கவந்த குரவர்போலாகி, அந்நட்பினரைத் தனியிடத்துக்குக் கொண்டேகி, நண்பர்காள் எனவிளித்து, நாம் சொல்வ தைச் சற்றே சிரத்தை வைத்துக் கேளுங்கள்.

இந்தப் பூமியில் இடுக்கண்மே லிடுக்கணடைந்து ஓர் இமைப் பொழுதிலே மடிந்து வருந்தும் இம்மா னிடப் பிறப்பில் பெண்களுடன் கூடிச் சுகிக்கும் இன்பமானது கருடனுற் பற்றப்பட்ட பாம்பின் வாய் பட்ட தேரை யொன்று வாய்திறந்து கூவும்போது ஒரு துளித்தேன் அந்தத்தேரையின்வாயில்வீழ அதனை அது நுகர்ந்து இன்பமடைவதை யொத்திருத்தலால் சிற்றின்ப மெனலாயிற்று. இனி இதனினும் சிறந்த இன்பம் யாதெனின் அது சுவர்க்க இன்பமாம். அந்தச் சுவர்க்கம்புகுந்தால், நரைதிரை மூப்பு அகன்று எந்நா ளும் யவ்வன முடையவராகி, பஞ்சதருவி னிழலிலே மந்தமாருதம் வீச, காந்தருவர் கின்னரர் இசைபாட, இந் திர பீடத்திலமர்ந்து, தேவகன்னியருடைய செவ்விதழ் த்தேனை எந்நாளு முண்டு, துன்பமென்ப தறியாமல் வாழ்தல் கூடும். அதல்லாமல் பிறர்மனைவியருடன் கூடி அனுபவிக்கும் தீயஇன்பத்தைத்தவிர்த்து, தூயவேள்வி விரதாதிகளைப் புரிவீர்களாயின் அந்தச் சுவர்க்கத்

தைப் பெறக்கூடு மென்று கூறினார்கள். அதுகேட்ட நண்பினர்கள் மெய்யுணர்வடைந்து, அன்று முதலாகச் சுத்தநதி படிந்து விரதசீலங்கள்பூண்டு சற்கன்மிகளாய் நடக்கத் தலைப்பட்டார்கள். அதுகண்டு சிலர் பாவனை செய்வாருமாயினார்கள்.

சிந்துநதி தீரத்துக்குச்சென்ற பொறையனது துணைவர் அதற்கப்பாலுள்ள யவன தேசத்துச் சனங்களுடன் சிநேகஞ்செய்து அவர்கள் சந்தோஷிக்க நடந்து வருநாளில், அவரிற்சிலரை தனியிடத்துக்குக்கொண்டுபோய், பரிபாகமும் காலமும் இடமு மறிந்து, நண்பர்களே! எனவிளித்து,கோபனுடைய போதனைக் குட்பட்டு நீங்கள் நடப்பது தகுதியன்று.வலியவர்மே லெழும்புகின்ற கோபமானது அவரிடத்துச் செல்லப்பெறாது கோபஞ் செய்தவரிடத்தே திரும்பி அவர்க்கே கேடு செய்வதாகும். மெலியவர்மேல் எழுங்கோபமானது இகத்தில் வெவ்வியபழியும், பரத்தில் நரகமும் விளைப்பதாகும். கோபமானது அற்பர்கள் பார்த்து அகங்களித்தற்கும் நகைத்தற்கும் ஏதுவாய்க் கேட்டினையே தருவதாகும். இனியநட்பையும் ஒருநொடியிலே வேரறுக்கும்.கொடிய புலியானது பசுவினத்தைப்போல விர்த்தியடையாமைக்குக் காரணம் அதன்கோபமே யன்றோ? ஒருவர் குற்றஞ் செய்தவிடத்துத் தங்குற்றத்திற்காக அடியைத் தாங்கும்பொருட்டுக் கையேற்பாரேனும் தங்கருமம் பழுதுபடாவண்ணங் கோலை யுயரவோங்கி மெல்லெனப் பூப்போல அடித்தாலும் குணமுடையவர்களுக்கு எக்காலும் செல்வங் குறையமாட்டாது. ஆதலால் இதனை யாங்கூறுவது உம்மிடத்துவைத்த நேயத்தாலென்பதை உணரக்கடவீர்களென்று இவ்வாறு போதித்தார்கள். இதனைக் கேட்டமாத்திரத்தில் நீங்கள்சொன்னது ஒக்கும் ஒக்கும். எம்மைக்கெடுத்தது பண்டு எழுந்த கோபமே, இன்றுமுதலாக அக்கோபனுறவை விட்டொழித்தோமென்று கூறி நல்லவராயினர். அது கண்

ட வேறு பலரும் அங்ஙனம் பாவனை செய்தடங்குவா ராயினர்.

அப்பால் கேரளதேசத்திற் சென்று அங்குள்ளார் சிற்சிலர்க்குப் பிரிய நண்பராய் நடந்துவந்த விராகன் படைவீரர், காலமும் இடமும் வாய்க்க அத்தோழ ரோடு ஒரு சோலையினிடமாகச் சார்ந்து, அவர்களை நோக்கி, அன்பர்காள் என விளித்து, நீர் இங்கு செய்கின்ற பொருள்வியாபாரம் ஒன்று பத்தாகப் பலிக்கினும் அதனாற் பயன்யாது? நல்லதருமங்களை ஆராய்ந்து செய்வீராயின் ஒருபொருள் அனந்தகோடியாய்ப் பலிக்குமே, அதுவன்றோ வாணிகம். வாணாள் ஒரு கணப்பொழுதும் நிலையிலதென்பதறிந்தும் மலைவனங்கள் தோறும் வீணாக அலைந்தலைந்து மிகுதனம் சம்பாதிப்பதே விரதமாக்கிக் கொண்டீர். நீங்களும் நன்றாக வுண்ணுமல் பிறர்க்குங்கொடாமல் திரவியத்தைச்சேமித்து வைக்கின்றீர், நீர் உடுக்கின்ற வஸ்திரமோ ஒரு முழத்துண்டாயிற்று. உண்பதுவோ காய்கனி தானியாதி அற்பவஸ்துக்களாயின. அவ்வளவிலே உலகவாழ்வுக்கும் நஷ்டம் பிறப்பிக்கின்றீர். சுவர்க்கலோக வாழ்வையுஞ் சிதைத்துவிடுகின்றீர். இது உமக்கு அழகன்று. சம்பாதித்த உங்கள் திரவியத்தைப் பொன்காத்த பூதம்போலிருந்து காக்கும்படி மூடிய சிந்தனையை விட்டொழிவீர்களாக. தவம் தானம் தருமத்தை முடிவுறுமற் காட்டி அமுதுண்டு உடுத்துக் கலிதீரக்கடவீர். உங்கள்பொருட்டு முன்பு பூட்டிய சுவர்க்கத்துக் கதவைத்திறந்து அதனுட்புகுந்து வாழும்படி தேடக்கடவீர் என்று இதுபோன்ற பிறவுங் கூறினார்கள். அதுகேட்ட அக்கேரளர், இனிது இனிது, இதுபோல நாம் என்றுங் கேட்டதில்லை. எம் முன்னோர்கள் தேடியபொருளும் அவர்கள் போன போக்கும் எங்கே! எனத்தேறி உள்ளுணர்வு தோன்ற நகைத்து, இனியாம் தானதருமமே செய்வோமென்று துணிந்து அங்ஙனஞ் செய்யத் தலைப்பட்டார்கள். அது கண்டு, பின்னுஞ் சிற்சிலர் அவ்வாறு செய்வாராயினர்.

அப்பால் கங்காசங்கமத்தை யடைந்த படைவீரர் கவுடதேசத்தை யடுத்து, அவர் கொள்கையைக் கைக்கொண்டு அவர்போலவே நடித்து, அதனால் அவர் சிலரோடு நட்புச்செய்து சமயம்பார்த்து அவர்களுக்குப் புத்திசொல்ல நினைத்து, சமயம் வாய்த்தவுடனே அவர்களைநோக்கி, நண்பர்களே, அகங்காரமானது தருமத்தை வேரறுக்கு மியல்பினது, கல்வியறிவை வீணாக்கவல்லது, உள்ளம் புகைந்தெழுப்புங் கனலை மிகப்புழுங்குவிக்குந் தன்மையது, பிறர் பார்த்திகழும்படி செய்யும், சிறிது தவஞ்செய்யத் தொடங்கினல் அதனைக் கெடுக்கு மியல்பினது, சுவர்க்க சுகத்தைத் தடுக்குந் தன்மையது, சுகத்தையழிக்கும், இறுதியில் நரகத்துச் செலுத்தும் ஆதலால் நம்மவராகிய உங்களுக்கு இது அழகல்லவே. தக்கன் யாகஞ் செய்தகாலத்தில் அகங்காரம் கொண்டு தனக்கு மேலோனகிய சிவபெருமானை யிகழ்ந்ததனல் அவன் தலையிழந்ததே யன்றி, அவனை யடுத்திருந்தவர்களிற் சிலர் மூக்கிழந்தவர்களும், உடல் குழம்பப் பெற்றவர்களும், கண்ணிழந்தவர்களும், பல்லிழந்தவர்களுமாகி அதோகதியையடைந்தசெய்தி யாவர்க்குந் தெரிந்த விஷயமேயன்றோ, ஆதலால் அந்த அகங்காரகுணத்தை விடுவதே தூயமாதவமாம், அதுவே பெருந்தனமாம், அதுவே வண்மையாம், அதுவே திண்மையாம், அதுவே அறிவாம், அதுவே வாழ்வாம், அதுவே அழகாம், அதுவே சுவர்க்கமாம், அதுவே மற்றெல்லாச் செல்வமுமாம் என்றிவ்வாறு போதித்தனர். அது கேட்டமாத்திரத்தில் அந்தக்கௌடதேயத்தாரும் சீ, சீ, என்ன காரியம் செய்துவிட்டோம் என்று நல்லறிவு பெற்றுப் பரமசாதுக்களானர்கள், அவர்களைக் கண்டு வேறு சிலரும் அவ்வாறேயானர்கள்.

அதன்பிறகு காசிநகரையடைந்த அமிர்தசிலனுடைய படைவீரர் அந்த நகரவாசிகளைப் போலச்சிறிது

காலம் இடம்பாசாரம் பூண்டு அவர் சிலரோடுறவு கொண்டு,இறுதியில்காலமும் இடமும் வாய்க்கநோக்கி, அவர்களை நண்பர்களே யென்றழைத்து, அவர்களை நோக்கி, பொருள் கவர்தலும் பிறவும் விரும்பிச் செய்கிற இந்த இடம்பாசாரம் மேலுலகினுஞ் செல்லுமோ வென்று பஞ்சபூதங்கள் உள்ளேயிருந்து நகைக்கும், யமதூதர் இந்த இடம்பருடைய உயிரைக் கவர்ந்து போய் நரகத்திலிட்டு வருத்துதற்கு எமது கைகள் விரைகின்றனவே. இப்போது எம்மிறைவன் கட்டளையிட்டால் ஒரு நொடியிலே அத்தீயோரைக் கொண்டு வந்து விடுவோமேயென்று சிந்திப்பார்கள்.

அகத்திலே பதுங்கியிருப்பதாகிய கபடத்தை, அடுத்திருப்பவருக்கு அக்கபட முண்டென்பதை அவர் முகமே காட்டிவிடும், அதுகாட்டாதாயின்அவர்மொழியாயினுங் காட்டிவிடும், பிறர் நகைத்தற் கேதுவாகும், முதலில் சுகங்காட்டுவதுபோலத் தோன்றி இறுதியில் மிகுந்த துக்கத்தைக்காட்டும். அதுமட்டோ, அளவற்ற அனர்த்தங்களையு முண்டாக்குமல்லவா, கரதலா மலகம் போல அகத்தியலும் புறத்தியலும் ஒன்றுகக்காட்டி ஒழுகுவோர்க்கு விரதம் மாதவம் வேறு நன்னடைகள் ஒன்றும் வேண்டுவதில்லை, அவர் அடையாத மோக்ஷமு முண்டோ, ஆதலால் இடம்பாசாரத்தை விடுத்து ஈடேறுங்களென்று சொல்லக்கேட்ட அக்காசி நகரத்தார், இவர் சொல்வது உண்மையேயாகு மென்று கொண்டாடி, அன்றுமுதலாக அவர்கள் பரிசுத்தரானுர்கள். அதுகண்டு வேறு சிலரும் அவ்வாறுயினர்.

அதுநிற்க, கோதாவிரி தீரத்திலுள்ள பத்திரிகிரிப் பக்கத்தை யடைந்த அடக்கன் படைவீரர் அங்குள்ளார்போல வேடம்பூண்டு, அவர்களோடுஉறவாடி, இறுதியில் பக்குவமறிந்து அவர்களிற் சிலரைநோக்கி,நண்பர்களே! அடக்கமில்லாமல் மதகுணத்தைப் பூணுமிடத்தில் கற்ற கல்வி, குலமேன்மை, கருணை, பெரும்புகழ்

செல்வம், கைம்மாறு நோக்காத உதவி, ஈகை, நல்லொ ழுக்கம், அரியதவம், நியமம், உறவின் கேண்மை, திண்மை, வாய்மை, அழகு என்றற் றொடக்கத்தன வெல்லாம் பெற்றிடினும் அவற்றையெல்லாம் அப்பெரு மித குணமானது நாசஞ்செய்துவிடும், அடக்கமானது தன்னையடைந்தவர் இழிகுலத்தாரேயாயினும் அவரை உயர்குலத்தா ராக்கிவிடும், தீயபழியை நீங்குவிக்கும், புகழைப் பெருக்கும், பண்போடு நண்பை வளர்க்கும், முடிவில் சுவர்க்க சுகத்தையுங் கொடுக்கும். ஆதலால் பெருமித குணம் தகாதென்று கூறினார்கள். அது கேட் டவர் பலரும் மருந்துண்டு பித்தமயக்கம் தெளிந்தவர் போலத் தெளிந்து அடக்கமுடையவர்க ளானார்கள்.

இப்படியே சோமநாதத்திற் பிரவேசித்த தமன் படைஞர் தமது உருமாறி, அந்த நாட்டார்க்கு உறவி னர்போல நடித்து, அவர்களைத் தம்வசபாக்கி, அடக் கனுக்கியன்றபடிசொல்லி, மானத்தை விரும்பாத மெய் வணக்கமானது அங்குள்ளார்க்கு வரும்படி கற்பித் தார்கள்.

அதன்பிறகு மராடதேயத்திற் பிரவேசித்த சந் தோடன் உறவினர் அந்நாட்டார்க்கு உறவினர்போல உடன்பழகி, தமது சொல்லைக் கேட்பதற்குரிய சமயம் பார்த்து, நம் தவம் எவ்வளவோ அவ்வளவே யன்றி என்னமுயற்சி செய்தாலும் அதற்குமேற்பட்ட இன்பத் தைத் தருவதொன்றில்லை யென்று சிற்சிலருக்கு மச்சர ளல் உண்டாயிருந்த கெடுதியை விலக்கினார்கள்.

நிருவிகற்பன், அவிரோதன், நிச்சயன், சத்துவன், சத்தியன், என்பவர்கள் தமக்குத் தகுந்த தலங்களில் தங்கி, சங்கற்பன், வயிரன், அசத்தியன், சந்தேகன், இராசததாமதர் என்பவர் கண்ணுக்குப் புலப்படாமல் சமயம் பார்த்து, அவரவர்க்குண்டா யிருந்த குணசுபா வங்கள் மாறும்படி போதித்தார்கள். விவேகன் சேனை

விரராகிய மற்றவரும் அவரவர்க்கியன்ற முயற்சியைச் செய்து அவ்வத்தேசத்தாரைத் தீநெறியினீக்கி நன்னெறியிற் செலுத்தினார்கள். இவர்கள் இப்படி செய்தது, சந்தனமரங்கள் பலவும் ஒரு காட்டில் முளைத்து அக்காட்டிலுள்ள வேறு மரங்களையும் தம்மைப் போலவே மணம் வீசும்படிச் செய்தல்போ லிருந்தது.

அப்பொழுது உலகத்தில் எவ்விடத்தும் தவம், பொறை, அருள், ஆசாரம், விரதமுதலியயாவும், காடு, மலை, நதி, புண்ணியஸ்தலங்கள் முதலிய இடங்களிலெல்லாம் இருட்டறையி லேற்றிய தீபங்களைப் போலப் பிரகாசித்தன. மாதர்கற்புத் தலையெடுத்தன, வேதியர் கருமங்களாகிய யாகாதிகளும் வர்ணாசிரம தர்மங்களும், ராஜநீதியி லடங்கிநின்றன. அந்தச் சமயத்தில் விவேகராஜன் நியாயனை நோக்கி, நீ போய் நம்படைஞர் செயலெல்லாமறிந்து வரக்கடவை யென்றேவ, அந்த நியாயனும் அவ்வாறே சென்று உலகமுழுதும்நோக்கி மீண்டுவந்து விவேகனை வணங்கி நின்று சொல்லுவானாயினான்.

அரி அரபக்தியுள்ள நம்மவர்கள் யாவரும் யோகிநிகருடைப அருட்டுணைகொண்டு சென்று கரந்துறைதல் என் கண்ணுக்கோ புலப்படவில்லை. பிறர் யார் கண்ணுக்குப் புலப்படாதிருந்தாலும் அப்படி பெண் கண்ணுக்குப் புலப்படாதிருந்தாலும் சிலர் வீடுகளில் காமம் நல்வழியிற்செல்லா நின்றது, கோபமும் குற்றங்கண்ட பொழுதே யன்றி எப்பொழுதும் நிகழ்வதில்லை, உலோபமும் அறமல்லாதவழியில் நடப்பதில்லை, தவம் உலக முழுதும் வியாபித்தது, மானமும் அடங்கிற்று, அகங்காரம் நீர்பெய்தநெருப்புப்போல அவிந்து போயிற்று, மச்சரமும் மேம்படாமல் தாழ்ந்துபோயிற்று, இடம்ப குணமும் அவ்வவரை விட்டு விலகிப் போயிற்று, ஊர்கள்தோறும் தருமம் நடநம் செய்கின்

றது. அதருமம் வெட்கமடையா நின்றது, தேற்றாங் கொட்டையால் தெளிவித்த நீர்போல அநேகருடைய மனம் தெளிவடைந்தது. பொய்யென்பது ஒரு புறத் தொதுங்கிற்று, இராசத தாமதகுணங்கள் தாழ்ந்து சத்துவகுணம் தலையெடுத்தது. சங்கற்பங் குறைந்து நிருவிகற்பமிருந்தது, அநர்த்தமும் துக்கமும் அநேகர் மனத்தை நீங்கின, மேகங்கள் மழைபெய்தன, வஞ்சகராகிய நமது பகைவர் இனிச்சில நாளில் நசித்துப்போவார்கள் என்பதற் கிவையே குறிகளாம், உன் முயற்சி பழுதுபடுமோ, பாவம் தோற்கும் புண்ணியம் வெல்லும் என்பது பொய்யோ என்று இவ்வாறு சொன்ன நியாயனை விவேகன் தன்னிருகைகளால் தழுவிக்கொண்டு, இன்னமும் ஒரு தரம்போய் அவ்வவ் விடங்களில் நிகழுஞ் செய்தியை அறிந்துவந்து சொல்லக்கடவையென்று கட்டளையிட்டான்.

விவேகன்சேனை காந்துறைசருக்க முற்றிற்று.

## 8. சத்துவச்சிரத்தை தூதுச்சருக்கம்.

அதன்பிறகு, அங்குள்ள அமைச்சரெல்லாரும் வேறோர் உபாயம் நினைத்து, விவேகராஜனை நோக்கி, ஐயனே, நமதுபகைவரை வெல்வதற்கு இன்னுமொரு சூழ்ச்சியுண்டு, அதனைக் கேட்டருளும்படி பிரார்த்திக்கின்றோமென்றார்கள். அதுகேட்ட விவேகன் அவர்களைநோக்கி, அதுயாதென்ன, சொல்லுவாராயினார்கள், மோகன் துன்மதியையே யல்லாமல் பாஷண்ட வீஞ்சை என்னும் ஒரு கன்னிகையையும் மணந்து, அவள் வயிற்றில் அஞ்ஞன் என்னும் ஒரு புத்திரன் பிறக்க அதனால் இறுமாந்திருக்கின்றான், அந்தக் கொடியபகையை யெல்லாம் உமது ஆற்றல் வெல்லுமாயினும் இந்திரன் முதலான தேவர்களுடைய இடரைக்கெடுத்து அசுரர்களது வலிமைமுழுதுங்கெடுத்த தசரதன், இராம

னென்று சொல்லப்படும் ஒரு குமாரனைப் பெற்று
வலிய பகையைத் தீர்த்ததுபோல, உமது தேவியாகிய
சுமதியினது அனுமதிகொண்டு உபநிடதை யென்னும்
கன்னியைக் கலியாணஞ் செய்துகொண்டு அவள்வயிற்
றில் ஒரு புத்திரனைப்பெற்று, அப்புத்திரனால் அஞ்ஞ
குமாரனை வெல்லுதற்கு உமது திருவுளம் பொருந்த
வேண்டும், இதுவே எமது விண்ணப்ப மென்றார்கள்.
அவ்வுரை செவியிற் பட்டமாத்திரத்தில் விவேகன் அக
மகிழ்ந்து, நீர் சொன்னது செவ்வையானது என முடி
யசைத்து, யானும் இவ்வகை சிந்தைசெய்தேன், அதற்
கேற்ப நீருஞ்சொன்னீர். இவ்விடத்திற்றானே சிறிது
போதிருங்கள், சுமதி மனக்கருத்தை உணர்ந்து வருகி
ன்றேனென்று கூறிச் சுமதியிடஞ் சென்றான். நாயகன்
வரவைக்கண்ட சுமதிதேவி முகமலர்ந்து உபசரிக்க,
விவேகனும் சுமதியை ஆலிங்கனஞ்செய்து மெல்லணை
யை யணுகி, அதன்மேல் இருவரும் வீற்றிருக்கையில்;
அவள் முகத்தைநோக்கி, என்னுயிர்க்குயிரும் வாழ்வும்
நல்லுறவும் கண்ணும் சிந்தையும் மற்றைய பிறவும் அரு
ந்ததியைப்போன்ற நீயேயல்லது வேறுயாவர்? ஆயி
னும்இங்குநான் சுட்டிவந்த கருமத்தைச்சொல்லுதற்கு
என் நெஞ்சங்கூசி அஞ்சுகின்றது என்றான், என்றலும்,
சுமதிதேவி யெழுந்து நாயகனைத் தொழுது, என் பிரா
ணநாயகரே, நீர் திருவாய் மலர்ந்தருளுவதை யான்மறு
த்திடப் புகுந்தால் உமதிடத்து யான்கொண்ட அன்பு
யாதாகுமென்றாள். அதுகேட்ட விவேகன் அவளைநோ
க்கி, கண்ணினு மினியராகி ஒளியாத உள்ளத்தோடும்
வேண்டிய தொருபொருளைக் கொடுப்பவரிடத்தும்
ஒருவர் சென்று இரக்கும்போது, ஈவரோ ஈயாரோ
என்னும் அச்சத்தோடுமே இரப்பார். இது உலக இயற்
கை. ஆதலால் என்மனம் அஞ்சுகின்றதென்றான். அது
கேட்ட சுமதிதேவி, குடியிற்பிறந்த பெண்கள் தமது
நாயகர் யாதுசொல்லினும் அச்சொல்லின்படி பணிவி

டைசெய்து தெய்வந்தொழாது கணவரையே தெய்வ மெனத் தொழுது அவருண்டபின் தாம் உண்ணுதலும் அவர் தூங்கியபின் தாம் தூங்குதலும் அவர் எழுமுன் தாம் எழுதலும் ஆகிய இவைமுதலியன கடனாகக் கொள்வர். ஆதலால் நீர் அருளுகின்றவழியில் யான் நடப்பது கடனாகும். ஆகவே நீர் மயங்குவது தகுதியன் றெனக் கூறினள். அதுகேட்ட விவேகன், என்கண்ணே! நமது பகைவரது வலிக்கஞ்சி நாம் ஒதுங்கித் திரிவது உனக்குத் தெரிந்ததன்றோ. இனி அப்பகையை வெல்லுதற்கேற்ற உபாயங்களைத் தேடுவதும் நமது கடனாயிற்றன்றோ? ஆதலால் நான் உபநிடதையை மணந்து அவள் வயிற்றில் ஒரு புத்திரனைப் பெற்று, அப்புத்திரனால் மோகனது இரண்டாம் மனைவி வயிற்றில் உதித்து வளர்பவனாகிய அஞ்ஞனை வெல்லுதல் ஆவசியகமாகின்றது, ஆகவே உபநிடதையை மணம் புரிவதற்கு உன்னால் தடையொன்று மில்லையாயின் மேன்மையான புத்திரப் பேறுண்டென்றான். அது கேட்ட சுமதிதேவி, நன்னோக்கத்தோடு செய்யப்புகும் ஒரு கருமத்திற்கு என் கருத்தும் வேண்டுமோ? அன்பரே! நன்று வினவினீர், அடியாள் மனமும் உமது மனமும் வேறென நினைந்திரா? நீர் நினைந்ததுநற்கருமமே. அதற்கு என்மனமும் ஒருப்படுகின்றது என்றாள். என்றலும்; விவேகன் சுமதியைத் தழுவி, அப்பொழுதே பகைவரை வென்று, வெற்றிமாலையைச் சூடினவன் போல ஆனந்த பரவசமடைந்தான். அப்பால் அந்தப் புரத்தை விட்டு நீங்கி, அத்தாணி மண்டபத்தை யடைந்து, அங்கே தன்வரவை யெதிர்நோக்கியிருந்த மந்திரிகளிடம் நிகழ்ந்ததைக்கூறி, உபநிடதையிடம் தூதுவிடக் கருதி, அத்தொழிலில் வல்லவராவார் யாவரென ஆராய்ந்து, ஈற்றிலே சத்துவசிரத்தையே அத்தொழிலுக்கு வல்லாளெனத் துணிந்து, அவளை யழைத்து, பெண்ணே! நளன்பொருட்டுத் தமயந்தியிடம் தூதுசென்ற

அன்னம்போல நீயும் என்பொருட்டு உபநிடதையிடம் தூதுசென்று, நம்பகைவர் அறிந்து கொள்ளாதபடி அவள் மனத்தைத் திருப்பி மனத்துக்கு இணங்கும் படியாகச் செய்து மீள்வாயாக என்றான். அதுகேட்ட சத்துவசிரத்தை, தனது கரங்களைக் கூட்பி விவேகனை வணங்கி, ஐயனே! உமது ஏவலைச் சிரமேற்கொண்டேன், நான் தூதுசெல்லும் நெறியில் உலகத்திலே எவ்விடத் தும் பரவி உலாவுகின்ற பகைவர், என்னைக்கண்டு புலி போலப்பாய்ந்து பற்றுவாராயின், அவர்கையினின்றும் மீள்வது எவ்வாறோ அறியேன் என்றாள். அதுகேட்ட விவேகன், பெண்ணே! அரிபக்தி சிவபக்தி என்னும் யோகினிகளது கிருபை யிருக்கும்வரையில் நீ அஞ்சத் தக்கது யாது? யோகினிகளிடஞ் சென்று, அவர்க ளிடம் நிகழ்ந்தவைகளை யுரைத்து, அவர்களுடைய திருவருளைப் பெற்றுக்கொண்டு, அப்பால் வாணி புத் திரியாகிய உபநிடதையினிடஞ் சென்று, அவளுக்குத் தக்கவாறு சொல்லி அவளது சம்மதம் ஏற்று இங்கு வருவாயாக என்றான். அதுகேட்ட சிரத்தை, விவே கன் பாதங்களை வணங்கி, அவன்சமுகம் நீங்கி, சிவபக்தி அரிபக்தி என்னும் யோகினிகளிடஞ் சென்று வணங்கி னள். அவளைக்கண்ட யோகினிகள் அவளுக்கு மங்க ளங்கூறி அவளைநோக்கி, சத்துவன் பெற்றபெண்ணே! நீ இங்கு வந்தது யாது கருதி யென்ன, எனது அன் னையரே, மோகனாகிய பாவியானவன், அகங்காரன் முதலிய படைஞரோடு கூடி எவ்வுலகத்திலும் விஷம் வியாபித்தது போல வியாபித்து, தீத்தொழில்களைச் செய்தலால், நன்மைகள் யாவும் நீங்கியொழிந்த விதத் தையும், தருமம் நிலைகுலைந்ததையும், சாந்தி தாந்திக ளோடு சமதமங்களின் பெருமையும் பொறையும் அழிந்ததையும், தவம் தலைசாய்ந்து ஒதுங்கியதையும், நிருபகனும் சந்தோஷனும் அவரையடுத்த மற்றைய ரும் மெலிந்து நீங்கியதையும், நீதி, கருணை, முதிதை,

உபேகைக்ஷ, மைத்திரி, என்பவர்கள் தளர்ந்ததையும் சொல்லி, விவேகராஜன் அக்கொடியோர்க்கு பயந்து தான் ஒளித்திருப்பதற்கு வேறோர் அரணின்றி, தன் சுற்றத்தோடும் பதரிகாசிரம வனத்தில் வந்து தங்கி யிருக்கும் விதத்தையும், உபநிடதையின் மணவிருப்பத் தினால் தன்னைத் தூதுவிடுத்த வரலாற்றையும், பகைவர் வருத்தினாலும் உமது அநுக்ருதவியைக் கொண்டு அவர் களை வென்று வரும்படி அவ்விவேகராஜன் சொன்னதை யும் எடுத்துச் சொல்லினள். அதுகேட்ட யோகினிகள் மனமுருகி அவளை நோக்கி, நங்காய்! அஞ்சேல்,உபநிட தையை உனது அரசன் மணம் புரிதற்கும் மோகனாதிய ரை வெல்லுதற்கும் நாங்கள் துணைசெய்வோம், உனக் கும் இடையூறுவாராது காப்போம். எமது அருட்காவல் பூண்டு பிரமலோகஞ் சென்று மீள்வாயாக என்ன, சிர த்தைமாதும் அவர்கள் பாதங்களை வணங்கி, அவர்கள் அருளாகிய ஒடத்தின்மீதேறிக் காமனாதியரது பகைக் கடலிலே செல்வாளாயினள்.

சந்துவச்சிரத்தை தூதுச்சருக்கம் முற்றிற்று.

---

## 9. மோகனொற்றுக் கேள்விச் சருக்கம்.

இங்கே அவித்தியா புரத்திலே சஞ்சலன், கபடி, கலியன், குதர்க்கன், சாருவாகன், அகீர்த்தி, கபாலி, சபதன் முதலிய பலர் தன்னைச் சூழ, துன்மதியோடு இரவும் பகலுங்கூடி இன்பமனுபவித்து அவள் சொன் னபடியே நடத்தி இறுமாந்திருக்கும் நாளில், ஒரு நாள் தனது மைத்துனனாகிய கலியனை அழைத்து, நமது பகைவர்கள் நமக்கஞ்சி நாற்றிசையிலுமோடி மறைந்த பின்னர், நெடுங்காலமாக அவர்கள் செய்ததும் அவர் கள் கதியும் இன்னவாறாயின என்பதை நம் படைவீர ரில் ஒருவராயினும் வந்து சொன்னாரில்லை. இக்கணந்

திற்றுனே ஒற்றரைப்போக்கி, அவர் செய்தியை உணர்வாயாக என்றான். அதுகேட்ட கலியன், ஐயனே, நீ கட்டளையிடாமுன்னமேநாற்றிசையிலும்ஒற்றரைப்போக்கிவிட்டேன், வறுத்த விதைகள் முளைப்பதுண்டோ அத்தன்மையராகிய நம்பகைவரது வலிமையும் எம்மனோரிடத்திற் பலிக்குமோ, எவ்விடத்தும் பரவியிருக்கிற காமன் முதலானோருடைய பராக்ரமம் எளிதாமோ என்று கூறினன். கூறி முடிக்கிற சமயத்தில் அவனது ஏவலாற்சென்று உலகமுழுதும் நிகழ்கின்ற செய்தியையறிந்துவந்த ஒற்றர்கள்,சாஷ்டாங்கமாய்வணங்கி,இறைவனே, நமது படைத்தலைவர்களாகிய காமனாதியர்கள் உலகமெங்கும் தமது படைத்திறலைச் செலுத்திப் பகைவரது உருவும் புலப்படாவகை அவரை யொடுக்கி வருவராயினும், மேகமின்றி மழைவீழ்வதுபோல இவ்வுலகத்தில் இதுவரையிலும் இல்லாதனவாகிய சில அதிசயங்கள் உளவாயிருக்கக் கண்டோம், என்னெனின்; காஞ்சியைக் காமனும் இரதியும் தமது இராசமாபுரமாகக்கொண்டு, அங்கிருந்தபடியே உலகமுழுதும் கோல் செலுத்தி வருகின்றனராயினும்,மந்திரிவீட்டில் மௌட்டியம் நுழைந்ததுபோல அவ்வூரிலே தானே மாதர் ஆசையைத் துறந்து அவர்தருகிற இன்பத்தைச் சிற்றின்பமென்றிகழ்ந்து பேரின்பத்தை நாடி உதய மத்தியாஸ்தமந காலங்களிலே சந்தியாவந்தநம் ஓமம் முதலிய சத்கருமங்களை நடத்துவோரும் பற்பலராயினர். கோபனது அரசிருக்கைத் தாநமாகிய யவநதேயத்தில் சிலர் கோபமென்பதை மறந்து பொறுமையுடையோராய் விளங்கக் கண்டோம், லோபனிருக்குமூரிலே கருணையோடு கூடிய ஈகையும் தலையெடுத்திருக்கப் பார்த்தோம், மச்சரன் வாழ்கின்ற நாட்டிலே பிறர் செல்வங்கண்டு அநேகர் மனமகிழ்ந்திருக்கக் கண்டோம், மாநனது நகரத்தில் அநேகர் முடிதாழ்த்தி வணங்குவதும் நோக்கினோம், சந்தேகன் அரசுசெய்கின்ற கொங்கண

தேயத்திலே சிலர் நிச்சயன் வழியில் நிற்பதும் பார்த்தோம், சங்கற்பன் வாழ்கின்ற குச்சரதேயத்தில் நிருவிகற்பம் வாழ்கின்றது. இடம்பன் நிலைபெற்றுவாழ்கின்ற காசி நகரத்தில் மனத்தெளிவு வாழ்கின்றது. இராசததாமதர் வாழ்கின்ற வூரில் சத்துவகுணம் வாழ்கின்றது. இது என்ன சித்து வித்தையோ, அன்றியும் கடற்கரை ஊர்களெல்லாவற்றினும் அதன்மன் நிலைபெற்றிருக்க, அவ்விடங்களில் சிலரிடத்தில் தருமம் விளங்குகின்றது, நாம் செய்யுஞ் செய்கையெல்லாம் இந்திரசாலம்போலப் பொய்யாய்ப் போகும்படி செய்வோராகிய நம் பகைவர் உறையுமிடம் எவ்வகையினும் புலப்படவில்லை, அப்படியிருந்தும் நம் செய்கைகளுக்கு மாறுன செய்கைகள் மாத்திரம் அங்கங்கே காணப்படுகின்றன. அன்றியும் விவேகராஜன் தனது பரிவாரத்தவரை நம்மவர்போல வேற்றுருக்கொண்டு நம்மவ ரிடங்கள்தோறுஞ்சென்று நம்மவர் வலியை யழிக்கும்படி அனுப்பியிருக்கிறுன். மேலும் பிரமனுக்கு வாணி வயிற்றில் தோன்றின உபநிடதை யென்னும் பெண்ணைத் தனக்கு மணம் பேசிவரும்படியாய் சத்துவன் மகளாகிய சிரத்தையைத் தூதுபோக்கியுமிருக்கிறுன் என்றும் சொல்லி முடித்தார்கள்.

இவற்றைக்கேட்ட மோகன் நச்சரவுபோலச் சீறி, உள்ளே பயமொருபக்கம் வாட்ட, அதனை மூடாந்தகாரத்துளிருத்தி, பித்தங் கொண்டவன்போல நகைத்து, தன்பக்கத்திலிருந்த கலியன் முதலான அமைச்சரை நோக்கி, இவ்வொற்றர் கூறினவற்றைக் கேட்டீர்களா, நன்று கூறினர், ஈடழிந்து நாடிழந்து காடுபுகுந்த விவேகன் முதலானோர் மீள்வராம், மீண்டு வேடமாறி நாடு சென்று யாவர்க்கும் தருமத்தை போதிப்பராம், அவர்கள் செயலை நம்மவர்கள் அறிவது அரிதாம், பிரமனது புதல்வியாகிய உபநிடதைமீது விவேகன் ஆசைகொண்டிருக்கிறுனும்,அவனுக்கு மணம் பொருத்தும் பொருட்

டுச் சத்துவச் சிரத்தையைத் தூதுவிட்டானும், அவனை மணம்புணரும் போகமும் அவனுக்கு உண்டாகுமாம், இவ்வாறு நமது தூதுவர் வந்து சொன்னார்கள், மாது சிரோமணியாகிய பாஷண்ட விந்தையை யாம்மணம் புரிந்து அவள் வயிற்றில் தோன்றின அஞ்ஞகுமாரன் போல ஒரு குமாரனைப் பெறவேண்டுமென்று விவே கன் கொண்ட கருத்து நன்று, அவனது கருத்து, பூனை யானது புலியின்தொழிலைச் செய்ய நினைப்பதுபோ லிருக்கின்றது. சிங்கேற்றின் வாயிலகப்பட்ட யானையை விடுவிப்பதற்குக் குறுநரிகள் முயற்சி செய்வதுபோல நமது தந்தையாலும் நம்மாலும் சிறையிடப்பட்ட பிர மத்தை விவேகன் முதலியோர் மீட்க முயல்வது அழ கா யிருக்கின்றது. எமது தந்தையானவன் எமது பாட் டனாகிய பிரமத்தைச் சிறைசெய்ய அப்பாட்டன் சிறி தும் நழுவாதவண்ணம் நாம் பாசவிலங்கிட்ட அந்நாளி லும், விவேகனையும் அவன் சுற்றத்தாரையும் காட்டுக் குப்போகும்படி கலங்கச்செய்து ஓட்டிவிட்ட நாளிலும் இல்லாதவலிமை இன்று வந்ததுபோ லிருக்கின்றது. என்று பலவாறு பரிகசித்து, அத்தூதரை நோக்கி, நீங் கள் இப்போது சொன்னதெல்லாம் சிறிதும் ஆராய்ச்சி யில்லாத சிறியாரிடத்திற் கேட்டனவா, அன்றிக் கன விலே நீங்கள் கண்டனவா என்று வினவி, அவர்களை யிகழ்ந்தான். அது கேட்ட ஒற்றர் மோகனை வணங்கி, ஐயனே, கண்டவற்றையும் சொன்னோம், இன்னும் விவே கன் முதலியோர்க்கு யோகிநிகளுடைய அருளுதவி மிகுதியா யிருக்கிற தென்றும், அவ்வருளுதவியைக் கொண்டே இவ்வளவுஞ் செய்யத் தலைப்பட்டார் என் றும் அநேகர் சொல்லுகிறார்கள் என்றார். அது கேட்ட மோகன் புன்னகைசெய்து, அவரை நோக்கி, பெண்கள் சொல்லைத் தலைமேற்கொண்டு திரிகின்ற விவேகனதிய ருடைய ஆண்மை அழிவதன்றிச் செல்லா தென் றான்.

மோகன் ஒன்றுக்கேள்விச் சருக்கம் முற்றிற்று.

———

## 10. இடம்பனுக்கு ஓலைவிடு சருக்கம்.

அப்பால் மோகன் தன்னருகேயிருந்த கலியனை நோக்கி, நீ நமது பகைவர் இருக்குமிடங்கள் தோறுஞ் சென்று, அவரையடக்கி, நம் படைத்துணைவருக்கு ஊக்கமுண்டாக்கி, மீண்டு காசிநகரத்தை அடைவாயாக, நாமும் இரண்டுதினத்தில் அந்நகருக்குவரக்கருத்துற்றோம் என்று கூறி, அவனுக்கு விடைகொடுத்து, மற்றொரு பக்கத்தில் நின்ற சாருவாகனை நோக்கி, விஷமுந் தீயுங் கலந்தாற்போல நீயுங் கலியனோடுசேர்ந்து சென்று, நற்றலங்கடோறும் மறைந்து, அங்குவாசஞ் செய்பவர்களாகிய நம்பகைவரைப் பிடித்துக்கொண்டு வரக்கடவாயென்று கூறி அவனையும் போக்கினன். அதன்பின்னர், புத்தனையும் சமணனையும் காபாலியையும் அழைத்து, நீர் கற்ற வித்தைகளை யெல்லாம் ஆங்காங்குச் சென்று போதித்து, வைதிக வித்தைகளை வேரோடு களைந்துவிட்டு, சத்துவ சிரத்தையைப் பிடித்துக்கொண்டு வரக்கடவீர் என்று கூறி அவரையும் போக்கினன். கலியனும் சாருவாகனும் தமக்கியைந்த தலந்தோறும் போயினர். மற்றையோர் சரசுவதி தேவியினிடஞ் சென்ற சிரத்தைபைத்தேடிச் சென்றார்கள். அவர்கள் யாவரும் அங்கு நின்றும் போயினபின்னர் அரசன் ஒரு தூதனையழைத்து, இன்னமாசம் இன்னநாள் இன்னநேரம் காசியை அடைவோம் என ஓர்ஓலை எழுதுவித்து அதனை அவன் கையிற்கொடுத்து, இதனைக் கொண்டுபோய் இடம்பனிடங்கொடுப்பாயாக என்று ஏவினன். இது சமயத்தில் அங்கே காசியில் இடம்பன் ஒரு பன்னசாலையை அமைத்து, அதிலே பரிசாரகர் பற்பலர் ஏவல்செய்து நிற்கத் தான் பதியாக வீற்றிருந்து செய்கின்ற பொய்மார்க்கங்களை எவ்வாறு கூறுவோம். இராக்காலங்களில் பலவேசியரையும் விதவையரையும் வரவழைத்து அவரோடுகலந்து இன்பமனுபவித்து லீலாவினோதனுய்விடர்சிகாமணி

யாக நிற்பன். பகலெல்லாம் அச்சிந்தையை மனத்திலே ஒரு புறத்தடைத்துக் கொண்டு, கண்டோர் யாவரும் தன்னை மகாத்துமா என்று போற்றும்படி ஓமமும் ஜப மும் செய்வான்போல நடித்து, அக்கினி முகத்திருந்து வாய் மிணு மிணுத்துக் கொண்டு, நெய் சொரிந்து, தரு ப்பை, மாந்தழை, நெற்பொரி, அட்சதை, சமிதை முத லிய உபகரணங்களை யிட்டு அக்கினியை வளர்த்துப் பவித்திர விரலை மூக்கிலுங் காதிலுமாக முறைமாறிப் பொருத்துவன். அவ்வக்கினி ஹோத்திர சாலையைக் கண்டு வருபவரை வாரும் வாரும் என்றழைத்து அவர் க்கு வெண்ணீறு வழங்குவன், நம் பெயர் சர்வஞ்ஞ தீக்ஷிதர் என்று கூறுவன், இது கண்ட பலர் மெய்யென நம்பி அவனுக்குச் சிஷ்ராயினர். அவரும் இடம்பனைப் போலவே இரவெல்லாம் வேசியர் மடியிற் றுயின்று விடிந்தபின்னர் ஜிதேந்திரிய ரென்றும் வேதவேதிய ரென்றும் யோகியென்றும் தபோதனரென்றும் தத்த மக்கிஷ்டமாகிய ஒரொரு பெயர்புனைந்து அதற்கிசைய வஞ்சித் தொழுகுவர். இளவிதவையருக்கு ஞானோப தேசஞ் சேய்வார்போல அவரை வரவழைத்துப் பகலெ ல்லாம் அவர்க்குக் குருவாகி, மாலைப்போதகன்ற பின் னர் மாலைசூடிய நாயகர் போலாகுவர். தாமரைமணியும் கோபி சந்தனமும் சோமன் உத்தரியமும் செவியில் துளவமும் விளங்கும்படி நாமகீர்த்தனஞ் செய்வார் போல நடித்து இராக்காலங்களில் காமவேட்கை தீருந் கள்வருமாயினர்.

இங்ஙனம் பலரைத் தனக்குச் சிஷராகக்கொண்டு உலகெங்கும் டாம்பிகத்தைப்பரப்பி, டாம்பிக, குருவா ய், காசியிலே விளங்குகின்ற இடம்பன் முன்னே, மோக வேந்தன் விட்ட தூதன் சென்று வணங்கி ஓலையைக் கொடுத்தான். இடம்பன் அவ்வோலையை வாங்கித் தன் சிரசிலே சூடி, பக்கத்திலிருந்த சீடனிடங்கொடு த்துப் படிக்கும்படி சொல்ல, அவனும் அச்சுருளைப்

பிரித்து மூன்றுலகமுழுதும் புகழும் இராசமா மோகன் எழுதி டம்பனுக்கு அனுப்பிய பத்திரமாவது— இரண்டுதினத்தில் யாமும் அக்காசி நகரத்தில் வந்து சேருவோம். செய்ய வேண்டியனவாகியகருமங்களைப் பழுதின்றி நடாத்துக எனவாசித்தான். அவ்வாசகங்களைக் கேட்ட இடம்பன் ஆனந்த சாகரத்தழுந்தினவனாய், அத்தூதுவனுக்கு ஏற்றவாறு வரிசை வழங்கி, மோகமன்னவன் தனது அவித்தைமா நகரத்தைவிட்டு இங்குவருதல் நாம் செய்த தவமென்று மகிழ்ந்து, தனது புத்திரனாகிய அசத்தியனை யழைத்து, அவனுக்கு மோகவேந்தன் காசிக்கு வருகின்ற செய்தியைக்கூறி, நமதரசன் வாசஞ்செய்யத் தகுவதான ஒரு மாளிகையை யமைத்து, கரும்பு வாழை கமுகு முதலிய மங்கல விருக்ஷம் நாட்டி, தோரணங்கள் மாட்டி, வாயிலிலே பந்தரிட்டு, மேற்றுகில் விதானித்து, புஷ்பத் தொங்கல் பூட்டி, பூரணகலசமிட்டு அலங்கரிக்கும்படிக்கும், வீதிகள் தோறும் மதயானைகளைப் பந்திபந்தியாக நிறுத்தி வீடுகள்தோறும் மங்கல கும்பம் இடும்படிக்கும் ஆஞ்ஞாபிப்பாயாக என்றான். இங்கே இவ்வாறு நடக்க, கவுடதேசத்தி லிருந்தபடியே மோகவேந்தனது வருகையையுணர்ந்த அகங்காரன் அங்குநின்றும் நீங்கிக் காசியை யடைந்தான்.

இடம்பனுக்கு ஓலைவிடு சருக்கம் முற்றிற்று.

---

## கக-வது இடம்பாங்காரச் சருக்கம்.

---

மான மானது எழுந்து மேற் சொலித்து வருவது போலவும், மனிதர்கள் எவரும் அடங்க வாய்மொழியால் அதட்டுமவன் போலவும், தான்கற்றதே வித்தை மற்றவர் வித்தையெல்லாம் வீண் என்பவர் போலவும், தனது வடிவினால் எவ்வுலகமும் விழுங்கி யுமிழ்வான் போலவும் வரும்போது, கங்கைக்கரையிலே யிரு

ந்து நாநாவருணத்தினருமாக தர்ப்பணம், சந்தியா வந்தனம், ஓமம், சாந்தி, தவம், ஜபம், நியமம், வேத சாஸ்திர புராண பாராயணம், அவைகளின்படி பற்பல கருமங்களைச் செய்யுமவர்கள் பலரைப்பார்த்து, தனது பத்தினியைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினுன்.

வருணம் நான்கு, ஆசிரமம் நான்கு, அவ்வருணத்திற்கும் அவ்வாசிரமத் திற்கும் உடன்பட்டார் போல ஒழுகுகின்ற இவர் தாங்கள்செய்யவேண்டுவன இவை, இவற்றின் இயல்பு இவை என்பதுணராது செவ்வையாகநடக்கும் கிருதகிர்த்தியராய்த்தாம்செய்யுமவைகளை முடிக்குஞ் சிலர்போல உண்மை யில்லாமலிருக்கின்றார்கள். இக்கள்வர் இரண்டுகாலுடைய மிருகங்களே யாவர். இனி வேதாத்தியயனம் பண்ணுகிற இவர்கள் வாயில் வந்தவாறு கத்துவதன்றி, சுரம், பதம், கிரமம், அவரோகணம், ஆரோகணம், பொருள், தேசம், காலம், நற்பருவம், மாத்திரை, மங்களாசாரம் என்னும் வேதமோதிலக்கணங்களை ஒரு சிறிது முணரார்கள். அப்பால் இவன் அவதானி, இவன் கிரமதாடி, இவன் சடாவல்லவன், இவன் உபாத்தியாயன், இவன் வேதபட்டன், இவன் அத்தியாபகன் என்று நவநவமாகப் பலபெயர்புனைந்து தானுதிகள் பெற்றும் திவசம் புசித்தும் உலகை வஞ்சிக்கின்ற திருடர்கள் இவர்கள். இன்னும் உலோகாயதம் முதலிய சமயங்களின் கொள்கைகளை யெடுத்துக் கூறும் நூல்களின் புத்தகம் இருந்தவிடத்திலும் இவர்கள் பிரவேசிக்காமலிருந்தும், தர்க்க சாஸ்திரத்தில் இவர் மிகப்பெரியர், சாங்கிய சாஸ்திரத்திலிவர் மிக நிபுணர்; வேதாந்த சாஸ்திரத்திலிவர் மிக வல்லுநர், கற்பம் மீமாஞ்சையில் இவர் அதிகதுரந்தரர்; யோகத்தில் இவர் வெகு துரந்தரர், வியாகரணத்தில் இவர் பரமசிரேஷ்டர், என இவர்கள் தாம் தாம் கட்டிக்கொண்ட பட்டங்களோ பல. சுவடியும் கயிறும் கம்பையும் வெண்சோமனும் விளங்கும்படி அதிக ஆட

ம்பரமாக வீற்றிருந்து, பிரமப்பொருளைத் தெரிவிப்ப வர் போலநடித்து, பவித்திரத்தை அணிவிரலிலே தரித்து, அடிக்கடி அவ்விரலை நீட்டி அதனுல் சுட்டி, காதில் விளங்குகின்ற மகர குண்டலங்களை அசைத்து, அந்தக் குருக்கள் செய்கின்ற கூத்தெல்லாம் பொருள் பறிக்கும் பொருட்டே யன்றி வேறுண்டோ? இந்தக் கள்வர் கற்ற சூதை உலகத்தில் வேறுயார் கற்றிருக் கிறார்கள்.

ஆதிகாலத்தில் தமிழ் வேதத்தை யருள்செய்த நம்மாழ்வாருடைய பிரபாவத்தையும் அந்தத்தமிழ்வே தத்தின் ஏற்றத்தையும், பொய்கையாழ்வார் முதலிய முதலாழ்வார்க ளாகிய மூவர் பாடலையும், அவர்களு டைய வைபவத்தையும், மற்றை யாழ்வார்களுடைய வைபவத்தையும்,அவர்கள் அருளிச்செய்த நூல்களையும் சிறிதும் அறியாதிருந்தும், வைஷ்ணவ சித்தாந்தத்தை விரித்துரைக்கிற பாஞ்சராத்ரம் வைகாநசம் என்னும் வைஷ்ணவாகமங்கள் இவையென்று காதினுற்கேட் டறியாதிருந்தும், இப்படியிருக்கிற தமது நிலைமையை யறியாமல், தமக்குத் தகாதபட்டாசாரியர், அழகிய நம்பி,வேதாந்தாசாரியர் என்பவை முதலிய பெயர்களை த்தரித்து, நெற்றிமுதலிய இடங்களில் விளக்கமாகத் திருமண் ஸ்ரீசூர்ணங்களைத் தரித்து, நீர்க்காவி வஸ்திரம் உடுத்து, துளசிமணிமாலிகை முதலியவைகள் பூண்டு, மூப்புஇளமை சாதி என்பவற்றை நோக்காமல் யாவ ரையும் அடியேன் தாசன் என்றுவணங்கி, பிறர்பொரு ள் கவர்ந்துகொண்டு, அவர்களுக்கு முத்திரா தாநஞ் செய்து, நிர்மலர்போலிருக்கிற இவர்களுக்கு யாரை நிகர்சொல்லலாம். இராக்காலமெல்லாம் காமக்கணி கைபர்மயக்கத்தி லாழ்ந்திருந்து, பகற்காலத்தில் விபூதி ருத்திராக்ஷதாரணஞ் செய்துகொண்டு, குருக்களாகி, பூனைபோன்ற குழைவும் பாவனையு முடையவராய், சிவார்ச்சனை பண்ணுவோர் போலப் பலவுருச்செபித்து

மணிதொட்டாட்டி மனிதரை வஞ்சிக்கிற இவர்களுடைய வேடமோ மிகக் கொடிது. மூவர் தேவாரப் பதிகங்களாகிய அமிர்தத்தை யுண்ணுமலும், திருமூலர் அருளிச்செய்த திருமந்திரத்தை உணராமலும், கிருபையோடு தருமமார்க்கத்தைக் காட்டுவோர்போல நடித்துப் பொருள் பறிப்பதே தொழிலாகக்கொண்டு, இவ்வுலகிற் கூடியிருக்கின்ற இவர்கள் நடிப்பு முழுதும் சாண்வயிறு வளர்ப்பதற்கல்லவா.

குடத்தினுள்ளே மலம் நிறைந்திருக்க, அந்தக் குடத்தின் மேற்புற மாத்திரம் நீரினுற் கழுவினுற்போல, தருமத்தையும் அன்பையும் துடைத்தமையால் தம் உள்ளத்தில் நீங்காத மலமிருக்கவும், நீரினுல் புறம் துடைத்து, மேனி முழுதும் வெண்ணீற்றைப் பூசினிக்காய் போற்பூசி, பரந்து பரந்து பலர் கைப்பொருள் பறிக்கிற சைவப்பழங்கள் இந்த வஞ்சகரல்லவா, இங்கே சிலர் துறவிகளென வேஷம் பூண்டிருப்பதைப் பார்த்தனையா, மயிர்களைத் திரட்டிக் கொன்றைக் காய்கள் போல நீட்டித் தலைச்சுமையாக நிரப்பிக் கட்டிப் பெரிய சடாதாரியெனப் பெயர்தரித்து ஒழுகா நின்ற இவர்களுடைய ஆசையை அளவிடப் புகுந்தால் அதனளவு அவரது சடையினளவினும் நெடிதாம். நகரங்களிலேயுள்ள மடங்கள் தோறும் சென்று, புராணிகராயிருந்து தருமநெறியை யெடுத்துச் சொல்லுவோர் போலக்கையிலே யேட்டைத்தாங்கிக்கொண்டு, யாதோ சில சொல்லும் போதெல்லாம், அரிசி காய்கறி முதலியவைகள் கொண்டுவருவோர் மேலேகண்ணும், வாக்கில் இன்சொல்லும், மனத்தில் வஞ்சனையும் உடையராய் நிர்பராயின், இவர்களைப் பிறர் பொருள்மேல் விருப்பமில்லாதவர் என்பது எவ்வாறு பொருந்தும். இவர்கள் பாவனையை இவ்வுலகில் யார் படித்திருக்கிறுர்கள்.

மூங்கிலிலைபோற் கோபிசந்தனமும் முத்திரைப் பொறிகளுமிட்டு, அதனிடையே கரிக்கோடு தீட்டி,

அங்குலதூரத்துக் கொவ்வொன்றாய்ப் பல செம்புகள் நிறைத்து, 'சமீபிப்போரை நீங்குங்களென்று விலக்கி, அடிமேற் குந்தியிருந்து, பலவாறு நடித்துத் தம்மைத் தத்துவரென்று காட்டி, உலகத்தை எத்துவார்கள் சிலர், இவர் கள்வரிற் சிறந்தவர்.

தலையைப் பனங்காய்கள் போல முண்டித்து, காவியாடையுடுத்து, சீடர்பலரும் தம்மைச்சூழ்ந்துவர, சந்நியாசி வேஷம் பூண்டு, தண்டுகமண்டலங்கள் தாங்கி, ஆதரிப்பவர் வீடுகள் தோறும் புகுந்து, ஊர்கள்தோறுமுள்ள மடங்களில் குடிகொண்டு, உபநிடதப் பொருளை நன்றாயுணராமல் தாம் கற்றதை ஒருவர்க்கொருவர் ஓதி, அத்துவிதமார்க்கம் இதுவெனக் காட்டுவார் போற்காட்டி, கண்தெரியாத குருடர் தம்மைப்போன்ற குருடருக்கு வழிகாட்டுதல் போலச் சொற்பொருள் விளக்கித்தியங்கி, யாதும் தெளிவடையாதவர்களே இந்தக் கூட்டத்தார்.

சீதளமான இடத்தில் தர்ப்பாசநம், கம்பளாசநம், புலித்தோலாசநம் இவைகளை விரித்து, அவற்றின்மேலிருந்து, வேண்டிய உபகரணங்களை ஒருபட்டாடை மீதுவைத்து, ஜபம் செய்பவர்போல வாய் மினுமினுத்துக்கண்களை மூடி இறுமாந்து, இவர்செய்யும் இடம்பாசாரமுழுதும் பொருள் பறித்தற் பொருட்டே யன்றோ, இயல்பாகிய பசியை நீக்கிக் கொள்ளும் உபாயத்தை யறியாமல், முக்கோலும் பட்டைநாமமும் காவிவஸ்திரமும் தரித்து, சீயர் என்கிற பட்டந்தாங்கி, இல்லறத்தாரையும் தலையால் வணங்கி, விஷ்ணு ஆலயங்களின் பிரசாதத்தை உண்பதற்கன்றோ இவர்கள் இக் கோலங்கொண்டது.

மத்துவ குருவாகிய இவன் சந்நியாசம் பூண்டும், பிறர் பொருளாசையாகிய பைத்தியம் அதிகரித்து மூடிக்கொண்டாற் போல உடம்பின்மீது காவிவஸ்திரம்விளங்க, சங்குமுதலான பலவாத்தியங்கள் முழங்க,

பொற்சிவிகைமேல் வருவதை நோக்குமிடத்தில், இங்கே இதுவரையில் யாம் சுட்டிவந்த பெயர்களெல்லாம் பாக்காகவும் இவனைக்கமுகந் தோட்டமாகவுங் கூறலாம்.

ஆதலால், என்பிராணநாயகி, இவர்களைப்பார்த்து இவர்களோடு ஒரு வார்த்தை பேசினுலும் அளவற்ற பாவம் வந்து சேரும். இனி இங்குநாமிருக்கலாகாதென்று இடம்பன் தன்மனைவிக்குச்சொல்லி, அங்குள்ளார் யாவரையும் நோக்கி நகைத்து, அங்கு நின்றும் தன்பரிவாரத்தோடும் நீங்கினுன். அந்தச்சமயத்தில் அகந்தைக்கு நாயகனுகிய அகங்காரன் காசிநகரத்தின் சமீபத்திற் செல்லும் போது அவ்விடத்தில் முநிவர் ஆசிரமம்போல் விளங்குகிற ஒரு மனையை எதிரேகண்டான். அந்தக்காசிநகரத்து வீதிகளில்உள்ளஎல்லாமனைகளினும் இந்த மனை உயர்ந்து விண்ணளவா யோங்கியிருந்தது. அது தர்ப்பையினுல் வேயப்பட்டது. ஓரமெல்லாம் பச்சிலையாற் பொதியப் பெற்றது. பகற்காலத்திலும் சந்திரகாந்தி யுண்டென்னும்படி சுவர்களெல்லாம் வெண் சுண்ணச் சாந்து தீற்றப்பெற்றது. அந்தச் சுவர்களெல்லாம் சித்திரங்கள் எழுதப்பெற்றது. எல்லாப் பக்கங்களிலும் பந்தலிட்டு மாந்தழைத் தோரணம் கட்டப் பெற்றது. வாசலிலே மூங்கிற் கம்பங்களிரண்டு ஆகாயத்தை யளாவிநிற்க அவற்றின் நுனியிலே பட்டுக்கயிற்றினுற் பூட்டப்பட்ட காவிக் கொடிகளையுடையது. ஓமாக்கிநியினின் றெழும்புகின்ற புகைபோல அமுது சமைப்பதனு லெழுகின்ற புகையும், காய்ச்சப்படுகிற நெய்யின் நறும்புகையும், நெருப்பிலிட்ட சாம்பிராணிப் புகையும் ஒன்றுய்க்கூடி இமயமலைக் கொழுந்துபோலத் தன்னிடத்தினின்றும் எழுந்து விண்ணிலேறப் பெற்றது. காமதேநுவை நிகர்த்த பற்பல பசுக்களைக் கழுத்திலே மணித்திரள்கள் கணகணவென் றெலித்திட அலங்கரித்துத் தாமணியிலே

வரிசையாய்க் கட்டிவைத்து அகவதருகிற பசுமையாகிய கோமயத்தைப் பற்பலரால் அடிக்கடி கொணர்வித்துக் கங்காதீர்த்தத்திலே கரைத்து மெழுகப்பெற்றது. யாகசாலேயும் தேவார்ச்சன சாலேயும், பாகசாலேயும், பண்டசாலேயும், ஜபசாலேயும், தியாகசாலேயும், வேதிகையும் மருவப்பெற்றதாய், சதுரமாகிய விசித்திரக் கோலங்கள் எங்குமிடப் பெற்றதாய், வாயிற் படிகள்தோறும் புஷ்பகந்த அக்ஷதைகளிடப் பெற்றதாய், செம்பு,தம்பிகை, கெண்டிகை,காசண்டி, செம்புக் கும்பம், வட்டகை, கொப்பரை, கடாரம், கும்பா, பொற்றளிகை, பொற்காளாஞ்சி, பொற்றும்பாளம், மயிலுருவமமைத்த தூண்டாக்குத்துவிளக்கு, தீர்த்தவேதி,வெண்சங்கு, தர்ப்பணம், தூபம், தீபம், கைம்மணி, பஞ்சபாத்திரம், ஆலவட்டம், சத்திரம், சாமரம் முதலிய தேவபூசைக்கேற்ற உபகரணங்களெல்லாம் பொருந்தப்பெற்றது. இவ்வாறு குறைவற நிறைந்து விளங்கிய அம்மனேயினிடத்தே பரிசாரகர்கள் விடிய ஐந்து நாழிகையுண்டென எழுந்து,கங்கை நீராடி, மௌன முடையராகி, வஸ்திரங் கட்டி, வாய்மூடி, தவளச் சாம்பலினுலும் புளியினுலும் மேற்சொன்ன உபகரணங்களேயெல்லாம் பொன்போல விளக்கி, உரல், உலக்கை, யந்திரம், சுளகு, ஆட்டுக்கல், யூபம், தீக்கடைகோல், அது கடைகயிறு, அக்ஷதை, நெற்பொரி, துடுப்பு, அம்மி, சகடம், மான்றேல், புலித்தோல், மரவுரி, அறுகு, முஞ்சி, தருப்பை முதலிய புல்லுகள், அரசு, பலா, எருக்கு, வன்னி, அத்தி, நாயுருவி, முட்கருங்காலி முதலிய சமிதைகள் ஆகிய யாகத்துக்கு வேண்டும் உபகரணங்களே யெல்லாம் இடையிடையே நிரப்பி, திருப்பள்ளித் தாமம், திருமஞ்சன தீர்த்தம்,அபிஷேக திரவியம்,துளசி, களபசந்தனம் முதலியனயாவும் கொண்டுவந்து கைகூப்பி எதிரில் வைக்க, அம்மனேக்கு அதிபனுகிய இடம்பன் காதுகளில் இரத்தினப் பொற்குண்டலங்களும் கைவி

ரல்களிலே பொற்பவித்திரங்களும் அணிந்து, மார்பில் பொற் பூணூலும் இடையிலே பொன்னரை ஞாணு மிலங்க, இருசெவிக்கு மிரண்டு, இருகைக்கு மிரண்டு, தலைக்கொன்று, இடைக்கொன்றாகத் தருப்பைப் புல் சாத்தி, வெண்பட்டுச் சோமனும் உத்தரியமும் தரித்து, மேலே இரத்தினக் குடை நிழற்ற, கால் நிலத்திலே சற்றே பொருந்தினும் அதனை யடிக்கடி நீரினாலே விளக்கவும் ஆசமனஞ் செய்யவும் பாத்திரங்களிலே ஜலத்தையேந்தி நான்கு பக்கமும் பரிசாரகர் சூழ, தன் நண்பினர்கள் வருங்கால் அவர் வீற்றிருக்க இரத்தினக் கம்பளம், வட்டப்பலகை, சதுரப்பலகை முதலிய ஆசனம் இருபக்கத்தினுங் கிடப்ப, சேமக்கலமும் கண்டாமணியும் இடைவிடா தொலிசெய்ய, தலைவாசலில் கட்டிய தூங்காமணி நிரந்தரமொலிக்க, யாககர்த்தாவாக வீற்றிருந்து, சூரிய யந்திரமொன்றை எதிரில் வைத்து, அதற்குப் புஷ்பமும் அக்ஷதையும் அறுகும் சொரிந்து, கன்னம் மார்பு தோள் இதழ் நாசி நெற்றி முழங்கால் முதலிய தானங்கள் மண்ணிலே பொருந்த வீழ்ந்தெழுந்து வணங்கி, கண்ட யாவரும் பரமபக்தனென்று காணிக்கைவைத்து அடிபணியும்படி நடிப்பவனாயினான்.

இவ்வாறு உலோபன் மகனாகிய இடம்பன் எண்ணில்லா வஞ்சம் புரிந்திருக்கின்ற காலத்தில், அகங்காரன் அந்த மனையைப்பார்த்து, இந்நகரில் இம்மனை யாவர்மனையோ, உண்மையாகிய விரதசீலர்கள் வாசஞ் செய்கின்ற மனைபோலிருக்கின்றதே! யாவராயினுமாகுக, இரண்டுதின மிங்கிருந்து அவர்பண்ணுவது பாவனைதானா, அன்றிப் பக்திதானா என அறிவேன் என்று கூறித் தனது தேவியோடும் அம்மனையிற் சென்றான். சென்ற அளவிலே, எதிரே சூரியவந்தனை செய்வான் போன்றுநின்ற இடம்பனைக்கண்டு அவனையடுத்து, ஐய! வாழிவாழி என்று ஆசிகூறினான். அதுகேட்ட இடம்

பன் அவனுக்கு அஞ்சலி செய்யாது முகங்கடுத்தான். அதுகண்ட அகங்காரன் ஆசிகூறிய எமக்கு அஞ்சலி செய்யாது கடுப்போடு கோபித்த இவன் யாவன்? இவன் தன்மையாது? இம்மனை துருக்கர் வாசஞ்செய்கின்ற மனைபோலும் என்று இகழ்ந்து, முன்வைத்த அடியைப் பின்வாங்கிக்கொண்டு அங்குநின்றும் பெயர்ந்தான். அங்ஙனம் பெயர்ந்த அவனை இடம்பன் பார்த்து அவனைச் செல்லாவண்ணம் கையமைத்து விட்டுப் பக்கத்திருந்த ஒரு சீடனைப்பார்த்தான். பார்த்தவளவில் அவனுள்ளக் கருத்தையறிந்த சீடன் அகங்காரனை நோக்கி, ஐயனே! காமதேனுவையுடைய வசிஷ்டமுனிவன்றானும் இங்கு வருவானாயின் வாயிலில் நின்று கால்கழுவியன்றிப் புகுதல் செய்யான், பிராமணர் முதலியோருக்கு ஏனைய ஆசிரமங்களில் கூசாது செல்வதியல்பாயினும் நம் ஆசிரமத்துக்கு வருதல் எளிதன்று. நமது குருமூர்த்தியினது ஒழுக்கங்களைக் குறித்து உமது நாட்டிற் கேட்டறிந்ததில்லையா? நமது மனையின் பரிசுத்தத்தைப் பார்த்தாயினும் இங்குப் புகுதல் தகுதியல்ல வென்பதுணர்ந்தி ரில்லையே? கால்கழுவாமல் இம்மனைக்கு வரின் யாவர்தாம் சகிப்பார். இத்திருமனையின் உள்ளும் புறமும் உண்டாகிய சுத்தியைக் கண்கூடாகக் கண்டும் துருக்கர்மனை யென்றீரே! இதுவோ உமதுபுத்தி, உம்மிடத்துண்டாகிய கோபம் போர்க்குரியராகிய க்ஷத்திரியரிடத்து முண்டாகாதே, உம்மிடத்திலே செம்பில்லையா? தண்ணீர்க்குப் பஞ்சமா? ஆசாரபரனாகிய உம்மிடத்தொரு செம்பில்லையாயின் வாயிலிலிருந்தபடியே எம்மையழைத்துச் சிறிது ஜலங்கொடு என்றால் கொடோமோ என்று கூறி, போனதெல்லாம் போகட்டும், நீர் எழுந்தருளும் என்று ஒரு செம்பிலே ஜலத்தை யெடுத்து அகங்காரன் முன்னே வைத்தான். அகங்காரனும் இது நன்றுநன்றென நகைத்து, அதனை வாங்கிக் கன்றிய மனத்தோடு சென்று கால்

கழுவி வந்தான். வந்து அங்கிருந்த ஓர் அலங்காரமான ஆசனத்தின்மீது உட்கார அதனையடுத்தான். அதுக்கு முன் மீண்டும் இடம்பன் அவனைக் கோபமுகத்தோடு நோக்கினன். அதுகண்ட முன்னையசிஷன் அகங்கார னைப்பார்த்து, ஐயா! யாதுசெய்கின்றீர். கையிலே ஒரு சிறிதானுங் கொண்டுவந்தீரா? அஃதன்றியும் உடம் பிலுள்ள வியர்வையைக் காற்றுமுகத்துச்சென்று நீக் குவோமென்றாயினு மெண்ணினீரா? ஒழுகுகின்றவேர் வையோடு நங்குருமூர்த்தி யெழுந்தருளுகின்ற பீடத்தி லேறப்போகின்றீரே. இஃதென்னை, முன்பின் யோசனை யின்றிப் பொருக்கெனச் சென்று பொற்பீடத்தின் மேல் இருக்க நினைக்கின்ற உமதுபுத்தி பேதைமையன் றோ? நமது குருமூர்த்தியின் குறிப்பை யுணர்ந்தன்றோ நீர் இருத்தல்வேண்டும். இது உமது அகந்தையோ? அன்றி அடங்காச் செருக்கோ? பெரியோராயின் இங்ங னஞ்செய்ய மனம் பொருந்தாரே என்றுகூறி, அவ்வா சனத்துக்குப் பக்கத்தில் ஓர் ஆசனம் அமைத்து, இங் கே எழுந்தருளு மென்றான். அதனைக் கேட்ட அகங்கா ரன் மனம் மறுகி, யாம் கவுதமர், வசிட்டர், காசிபர், மரீசி, முதலிய தவமுனிவர்கள் பலரோடும் பழகியறி வோம், அவரவர் நிஷ்டையும் அன்பும் இவ்வளவென்ப தும் அறிவோம், ஆயினும் இவரிடத்துக் கண்ட புது மையை எவரிடத்துங் கண்டதில்லை என்றான்.

இவ்வுரையைக்கேட்ட இடம்பன் சீடன் அகங்கா ரனை நோக்கி, நீர் அறிவதொக்கும், அதிற் சந்தேகமு முளதா? நங்குரு மூர்த்தியினுடைய பெருமை சொல் லுந் தன்மையதோ? இப்பூவுலகிலுள்ள சக்ரவர்த்திக ளெல்லாம் கையினுற் புஷ்பமெடுத்து அர்ச்சித்துத் தங் கள் பொற்கிரீடத்துடன் அவரது பாதங்களை வணங்கி, வெகு தூரத்தினின்று அவரது பாதுகைகளுக்குத் தூபதீப மிடுவரென்றால் இனிச் சொல்லவேண்டுவ தென்ன? எமது குருமூர்த்திகையில் திருநீறு வாங்

கும்பொருட்டு அவர்க்குப் பாத காணிக்கையாகப் பொற்பீடம், கம்பளம், இரத்தினமணி, பொன்னுபரணம், குதிரை, சிவிகை, விளைநிலம், பசும்பொன் முதலியன கொடாத அரசர் யாவர்? புண்ணிய தினங்கள் முதலிய பல காலங்கள்தோறும் நான்கு வருணத்துள்ளும் எண்ணில்லாத பலகோடி சனங்களாற் கொடுக்கப்பட்ட அவ்வளவு பொன் குபேரனிடத்து மில்லையன்றே? இம்மட்டோ, பலராலுங் கொடுக்கப்பட்ட பசு, எருமை, ஆட்டுக்கடா, பீதாம்பரம், நெல்மலை, முதலியவை சொல்லி முடியாவன்றே? என்று இடம்பனுடைய பெருமையையெல்லா மெடுத்துச் சொன்னான். சொன்னவளவில் அகங்காரன் தனது கைகளைப்புடைத்து, தோளும் தலையும் துளக்கி, நன்று! மிக நன்றென நகைத்து, வேத ஆகம புராண விதியாவையும் உணர்ந்து அவ்வாறடங்கி ஒழுகுத லொழிந்து, வருகின்ற அரசர்கள் தன்னைப்பணியச் செய்து, அவரிடம் பொருள் பறிக்குஞ் சூதுத்தொழில் பெரியோர் செய்கையாமோ? அன்பு அறிவு சத்தியம் உபகாரம் என்னும் பிராமணலக்ஷணங்கள் உள்ளபடி யமையப்பெறாது அவரைப்போல் பாவனைசெய்கின்ற மார்க்கம், பொன் போலிருப்பதாக மேற் பூச்சிட்டுப் பேதையர் அணிகின்ற ஆபரணங்கள் போலாகுமன்றே? என்றான்.

அதுகேட்ட சீடன் இணையற்றவராகிய எமதுகுருமூர்த்தியினது உண்மையையும் உள்ளன்பையும் பிரமாதிதேவர்கள் அறிந்துணர்வதல்லாமல் அவைஉம்மால் அறியப்படுந் தன்மையவோ எனமறுக்க, அகங்காரன் நம்மா லுணரப்படாத தொன்று எந்தப் புவனத்திலேனு முண்டோ? பிரமாதியர் தாமும் நம்மைப்போலொன்றை ஆழ்ந்துணரவல்லரோ? உன்வாசகம் இனிது இனிது என்று நகைத்தான். அவன் நகைத்ததைக் கண்ட இடம்பன் இவர்யாரோ மகா வேதியர்போலுமென்றெண்ணித் தன்னுடைய நியமத்தை விட்டு, ஓர்

ஆசனமமைத்து அவனையதிலிருக்கச்செய்து தானும்பக்கத்தில் ஒருயர்ந்த ஆசனத்தி லிருந்து அவனை நோக்கிக் கூறுவான்: என் மனைக்கு வந்த உம்மைநோக்குமிடத்து மிகப் பெரியவர்போற் றோன்றுகின்றீர்; என்நகர்க்கு நீர்வந்தது பெரியதொரு விசேஷமே; ஆயினும் என் மகத்துவமெல்லா வற்றையும் நன்குணராமல் அவற்றில் சிறிது இழுக்குரைக்கின்றீர் அதுநன்றன்று; ஆயினும் ஆராய்ந்துணரு மியல்பில்லாதவர்கள் பரிசுத்தரான பெரியோர்க்குப் பழுது சொல்வாராயின் அதில் என்ன தோஷமிருக்கிறது? என் பெருமையை நானே கூறுவது தக்கதன்று; ஆயினும் ஒருசிறிது எடுத்துச் சொல்வேன் கேளும்:—

பிரமன் ஒரு சமயத்திலே கன்மவிதி யொன்றில் சந்தேக முடையவனாகித் தன் அன்ன வாகனத்தை இங்கு அனுப்பி என்னைப் பிரமலோகத்துக்கு வரும்படி செய்தியனுப்பினான். அப்படி வந்த அன்னமானது கங்கையில் மூழ்கி என்னிடத்துக்கு வந்து பிரமன் சொல்லிய செய்திகளை என்னிடஞ் சொல்லி உம்மைச் சுமந்து போவதற்கு இங்கு வந்தேன் எழுந்தருளுமென்றது. யானும் நன்றென்று அதன் முதுகின்மேலேறித்தேவலோக வழியாகச்செல்லும்போது, எனது பிரயாணத்தைக் கேட்டுணர்ந்த இந்திரன் நெடுந்தூரம் எதிர்வந்து,இன்று இந்நகரில் எழுந்தருளி, இங்கிருந்து நாளைச் செல்லுதல் வேண்டுமென்று என்னை வணங்கி இரந்தான். அதற்கு யானும் இசைந்து அன்று அந்நகரில் எழுந்தருளி அங்கிருந்து அடுத்தநாள் பிரமலோகஞ்செல்ல எத்தனித்த பொழுது, இந்திரன் தனது ஐராவதத்திலேறி என்பின்னே தொடர்ந்தான். தொடர்ந்தவனோடும் பிரமலோகஞ் சென்றேன். அங்கே சனகாதியரும்யோகியரும்சப்தரிஷிகளும் ஏனைய தபோதனரும் மற்றைய பெரியோரும் தன்னைச் சூழப் பிரமன் எழுந்தருளியிருந்த சபையின் கண்ணே யான் சென்ற

அளவில், என்னைக்கண்ட முனிகணங்களெல்லாம் எதிரெழுந்துவர, யானும் அன்னத்தை விட்டிறங்கி அவரோடு முன்னேசெல்ல, அதுகண்ட பிரமனும் பொருக்கென வெழுந்து எனக்கு ஆசனமிடக்கருதி, அந்தோ! இங்குள்ள ஆசனங்களெல்லாம் முனிவராற் றீண்டப்பட்டன வாயினவே, இதற்குயாது செய்வேன் என்று ஒரு நொடியிற் சிந்தித்துத் தெளிந்து, நமது தொடையையே ஆசனமாக இடக்கடவோம் என்று துணிந்தான். துணிந்தும் நமது தொடையும் வாணியாற் றீண்டப்பட்டதாயிற்றே, ஆயினும் காமதேனுவினது கோமயத்தினுற் சுத்திசெய்து அதனை ஆசனமாக்குவேன் என்று கருதி, அங்ஙனஞ்செய்து தனது தொடையின் மீது எழுந்தருளுமாறு வேண்டினன். அதற்கு யான் உடன்பட்டதை முகக்குறிப்பா லுணர்ந்து பிரமன் தான் முதலில் தனது ஆசனத்தின் மீதெழுந்தருளி நின்ற என்னைக் கையினுற் பற்றித்தழுவித் தன் மடிமீ திருத்தி உபசார வார்த்தைகள் ஒன்றோ, பலவுரைத்தான் அங்ஙனம் யான் எழுந்தருளி அரை நொடியர்கு முன்னே பிரமன் தன் மனதிலெழுந்த சந்தேகம் நிவர்த்தியாகப் பெற்றுப் பேராச்சரிய வசத்தனுகி என்னைப் பார்த்து, குரு மூர்த்தீ, உமது இனிய அருளினுலே என் சந்தேகம் நிவர்த்தியாயிற்று என்று கூறிப்பலவாறு புகழ்ந்து, இனி நீர் இங்கிருக்கில் உமது நித்தியகரும நிஷ்டைக்குத்தாழ்வு செய்தவனுவேன் என்றான்.யானும் உண்மையே என்றேன்! அதுகேட்ட பிரமன் மீளவும் என்னைச் சுமந்து செல்லுமாறு தனது அன்னத்தை விடுத்தான். இப்படிப்பட்ட எனது பெருமைகளை எடுத்துக் கூறப்புகுந்தால் அவை எண்ணிலவாம் என்றான்.

அதுகேட்ட அகங்காரன் இதுபோலும் பொய் உலகத்தி லுண்டாமென ஆச்சரியமுற்று நகைத்து, பொய் யென்பது இவனிடத்திற்றான் உற்பத்தியாயிற்றோ? அன்றிப் பொய்தான் திரண்டு இவ்வுருவா

யிற்ரே? அதுவுமன்றிப் பேர்பெற்ற இடம்பன் இவன் ருனே? அல்லனேல் அவ் விடம்பனுக்கு இவன் குருவா யுள்ளவனே? எனப் பலவாறு சிந்தித்து, இவன் யாவ ஞயினு மாகட்டும். இவன் செருக்கைத் தொலேப்பேன் என அகங்கரித்து, இடம்பனேப்பார்த்து, இன்ன குலம், இவள் தாய், இவன் பிதா, இது நகரம் என்பதின்றி யும், தனதென ஒரு நகரமும் அதற்குப் பிரதிஷ்டையு மின்றியும், தன் மனேவியை நாவிலடக்கிக் காத்தும் அவள் பற்பலரிடத்தும் அன்புகாட்டிப் போயிருப்பது கண்டு நாணத்தால் முகம் வெளுத்தவனுகியும், நீண்ட காலம் தான் ஓதிய வேதத்தைப் பகுத்துணரும் பண் பற்றவனுகியும், சின்னுட்டொகுதியாகிய கற்பமொன் றிலே உயிர்தீர வருபவனுமாயுள்ள பிரமனுலே அழை க்கப்பட்டு அவனிடஞ்சென்ற உன்னே அவன் கண்டெ ழுந்து சற்காரஞ்செய்து தன் தொடையிலிருத்தி விடு த்த அப்பெருமை உன்போல்வாருக்குப் பெரிதாகு மன்றி நம் போல்வாருக்குப் பெரிதாகுமோ, ஆற்றினி டத்து வலேச்சி வயிற்றிற் பிறந்தவரும், நாணற் புதரி னிடத்துப் பிறந்தவரும், குடத்திற் பிறந்தவரும், வேர் வையிற் பிறந்தவரும், உள்ளத்துப் பிறந்தவரும், மான் வயிற்றிற் பிறந்தவரும், கிளி வயிற்றிற் பிறந்தவரும், ஆகிய இவர்கள் எதிர்சென்று கண்டதும், சரீரத்திற் பழிப்புடையவனுகிய இந்திரன் ஐராவதமேறி எதிர் சென்றதும் உன்மதிப்புக்குப் பெரும் பெருமையாயின போலும். இப்படி எத்தனே முனிவர், எத்தனே தேவர், எத்தனே இந்திரர், எத்தனே பிரமர், நாம் வாய்திறந்து அழைக்கா முன்னே அடியேங்கள் செய்யவேண்டிய பணி யாதென்று வந்து நம் வாய்மொழியைத் தங்கள் சிரமேற் கொள்வார்கள். பங்கமற யாம் செய்த பெருந் தவத்தின்பலத்தினுலே எத்தனேகோடி கற்பங்களே இது வரையிற் கண்டு களித்தோம். எமது கண்முன்னே எத் தனே பிரமாதியர் இறந்துபோயினர். அட்டகோணத்

தற்பங்கன், ரோமசன், தாலசங்கன் என்னுமிவர்கள் முடிவுங்கண்டோம். மேற்குலத்தார்க்கு இயற்கையாயுள்ள பௌருஷத்திலும் நம்போல்பவர் யார்? எல்லாத் தேசங்களினும் சிறந்தது கவுடதேயம். எந்நகரினும்சிறந்தது எமது தக்ஷணராடாபுரம். எக்குடியும் நிகராகாத எமது குடிகோத்திரப் பெயர் ஸ்ரீ சிரேஷ்டம். அப்படிப்பட்ட குடியிற்பிறந்த எல்லாரினும் எம் தந்தை சிரேஷ்டன். அவனுக்கு மக்களாயுதித்த அநேகருள்ளும் யான் சிறந்தவன். எம் தாய்குடிப்பிறப்பினும் எம் தாரத்தின் குடிப்பிறப்பு சிறந்தது. ஆதலால் எமது குணத்தை யறிந்தவர்கள் இவன் உத்தமனென்று புகழாது விடுவதில்லை. நம் பத்தினி குலத்திலவதரித்த ஒருவரை அவர்க்குப் பகையாயுள்ள ஒருவர் அசத்தியனென்றுகூறினமையால் அது உண்மையளவிற் பொய்யே யாயினும் அத்தோஷம் நம் பத்தினிமீதுசாராவண்ணம் அவளை அக்கினியில் மூழ்கச் செய்து அதன் பின்னரே விவாகஞ்செய்தோம். ஆசாரத்தினுலும், கொடையினுலும், அறிவினுலும், விவகாரத்தினுலும், அன்பினுலும், விசாலத்தினுலும், உயர்மதியினுலும், நிறைந்த சம்பத்தினுலும், சத்தியத்தினுலும், வடிவழகினுலும், பெரும் புகழினுலும், கம்பீரத்தினுலும் இப்பெரிய வுலகத்தில் எமக் கொப்பானவர் யாரென்முன்.

அதுகேட்டு இடம்பன் அவனைத் தன் மூதாதையென உணர்ந்து, பொருக்கென எழுந்து அவன் பாதங்களில் வீழ்ந்து பணிந்து, மீண்டுமெழுந்து தன் கைகைகளை மாறிக் காதுகளைத் தொட்டு, தொட்டகைகளை அவன் பாதங்களில் வைத்து அடியேன் இடம்பன் நமோ நம என்முன். இதனை அவன் தூரநின்று சொன்னமாத்திரத்தில், அகங்காரனும் மனக்கனிவுடையவனுகி அவனுக்கு ஆசிகூறி, ஐய! உன் பாவனையை நான் மெய்யென நினைந்து திகைத்துவிட்டேன். உலகமெல்லாம் ஒருசேர மயங்கும்படி நீ யல்லாது செய்யவல்ல

வர் வேறியாவரிருக்கின்றார். துவாபராந்தத்தில் உன்னை க்கண்டு நீ பாவனைபண்ணின இக்காலம்வரையில், என் னைமூப்பு வருத்தியபடியால் சிந்தை தளர்ந்தேன். உன் தந்தையாகிய உலோபனும், உன் தாயாகிய இச்சாதேவி யும், இவ்வூரில் சுகஜீவியரா யிருக்கிறார்களா? உன் மனைவியாகிய வஞ்சனதேவியும் உன் குமாரனாகிய அச த்தியனும் நன்றாக வாழ்கின்றார்களா? உனக்குப் புத் திரன் பிறந்த செய்தியைப் பலராற் கேள்வியுற்று நா னும் என்மனைவியும் அந்நாளில் மகிழ்ந்தோம், அவனைப் பார்ப்பதற்கு மிக்ககாதலுடையவனானேன். அவன் எங் கிருக்கின்றானென்றான்.

இடம்பன் அதுகேட்டு உன் மைந்தனும் என் தந் தையுமாகிய உலோபனும், என்னையீன்ற த்ருஷ்ணாதே வியும், மோகவேந்தனுடைய கட்டளையின்படி கேரள நாட்டில் வாழ்கின்றார்கள். யானும் என் மனைவியாகிய வஞ்சனையும் மைந்தனும் அரசனேவலால் இந்நகரில் அமர்ந்திருக்கிறோம், இப்போது உன்னால் காணப்பட்ட இந்த வஞ்சவேடத்தால் யாவரையு மயக்கிச் சுகித்திரு ந்து, இப்போது இங்குவந்து புகுந்த உன்னுடைய பா தசேவையும் கிடைக்கப்பெற்றேன்.

நகரங்களுள்ளே தலைமைபெற்ற இராடாநகரத்தை விட்டு இந்த நகரத்துக்கு வந்தது என் மாதவமேயாயி னும் நீ யிங்கேவந்த காரியம் இன்னதெனக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன் என்றான். அதுகேட்ட அகங்கா ரன் மகிழ்ந்து நமது மோகவேந்தன் வேற்றரசரால் மனங் கலங்கினானென்பது கேட்டு ஆற்றாமல் இவ்விடம் வந்தேனென்றான். அதுகேட்ட இடம்பன் நமது மோக வேந்தன் வாழ்கின்ற நகரத்திலும் பகைவர் ஓங்கியிரு க்கின்றார்களென்பதுபற்றியே, இவ்வுலகத்திலுள்ள எல் லாத் தலங்களினும் இந்தக் காசித்தலம் சிறந்ததென்ப தனாலும், ஸ்ரீ கங்காதரனும் தேவியும் இவ்விடத்தில் எழுந்தருளியிருந்து, யார் இறந்தாலும் அவர்களுக்குத்

தாரகப் பிரமநாமத்தை உபதேசித்து அவர்கள் முத்தி யடையும்படி செய்தலாலும், கொடிய மூடரையும் சிவ பெருமான் தமதுருவமாக்குதலாலும், மெய்த்தவஞ் செய்வோர் யாவரும் இந்தத் தலத்தை யடைவார்களெ ன்று நினைத்தே இன்ன தினத்தில் காசிக்கு வருவோ மென்று தான் இவ்விடத்துக்கு வருவதை ஓலையிலெ ழுதி ஒற்றர்கையிற் கொடுத்தனுப்பினான். ஆதலால் மோகவேந்தன் இன்று இவ்விடம் வருவது உண்மை யே, அவன் வந்தால் அவன் கருத்து இது, அவன் செய்யப்போகிற காரியமிது என்று அவனது செய்கை யால் வெளிப்படும் என்றான். அந்தச் சொல்லைக்கேட்ட அகங்காரன் இந்தக்காசியில் நம் பகைவனாகிய விவே கன் வரத்துணிவானானால் ஹரிபத்தி சிவபத்தி யென்கிற மாதர் அவன்மேல் அருள்புரிவார், அந்த மாதரருளை அவன் பெறுவனாயின், மோகனும் யாமும் அவனோடு எவ்வாறு போர்புரிந்து வெல்லுவது என்றான். அது கேட்ட இடம்பன் நமது காமனாதியர் போர்செய்வா ராயின் அந்த ஹரிபத்தி சிவபத்தியென்னும் யோகினிக ளுடைய அருட்பார்வை விவேகனுக்குக் கிடைக்கு மோ? ஆர்த்தராய் மனச்சுத்தியடையாதவர் புண்ணிய தீர்த்தங்களில் மூழ்கித் திருப்பதிகள்தோறும் போய் அவ்விடங்களிலுள்ள மூர்த்திகளைச் சேவித்தாலும் அவ ருக்கு நற்கதி கிடைக்குமோ, ஒருக்காலும் கிடைக் காது என்று சொல்லிமுடித்தான்.

இடம்பாங்காரச் சருக்கம்
முற்றிற்று.

---

## 12. மோகன்காசிபுகு சருக்கம்.

இப்படி அவரிருவரும் பேசிக்கொண்டிருக்க, அங்கே அவ்வித்தியாபுரத்திலிருந்த மோகவேந்தன்,

தன் மகனுக்கு முடிசூட்டி அவனை அங்கிருந்து அரசு செய்யும்படி வைத்துவிட்டு அவ்விடம்விட்டு நீங்கிக் காசிக்குச்செல்ல ஆலோசித்தான். மூத்தமனைவியாகிய துன்மதியும், இளையமனைவியாகிய பாஷண்டவிஞ்சையும் இருபுறத்திலுந் தொடர்ந்துவரவும், பெருஞ்சேனைகள் நாற்புறத்திலும் விஷம் படர்ந்து வருவதுபோலச் சூழ்ந்துவரவும், மருள் என்னும் யானைப்படையும், ஐம்பொறியாகிய குதிரைப்படையும், மநோரதமாகிய தேர்ப்படையும் திக்குக்களில் தாவிச்செல்லவும், பழியென்னும் பேரிகையானது கோடையிடிபோல் முழங்கவும், கொடி குடை சாமரம் என்பவைகள் எங்கும் நெருங்கவும், வஞ்சகம் பாவம் என்பவை முதலியவெல்லாம் கூடி யொருவடிவெடுத்தாற்போல வெளிப்பட்டுச்சென்ற மோகவேந்தன் தனக்கெதிரே நரையான், செம்போத்து, காகம் என்பவை வலத்திலிருந்து இடத்திற்செல்வதும், காடை, மயில், வலியன் என்பவை இடத்திலிருந்து வலத்திற் செல்வதும் கண்டும் அவை தீயசகுனங்களென்று அஞ்சாமல் விரைந்து வந்தான்.

அங்கே காசியிலிருந்த இடம்பனும் அகங்காரனும் இன்று நம்மரசனாகிய மோகன் இங்கு வரும்படியாய்க் குறித்த தினமாயிற்றேயென நினைந்து,காசியை விட்டுநீங்கி மோகனையெதிர்கொண்டு உபசரிக்கும்பொருட்டு இரண்டுயோசனை தூரம் போயினர். போய் மோகனைக்கண்டு இருவரும் வணங்க மோகனும் அவர்க்கு ஆசிகூறி நும்மனைமக்கள் சுகமாயிருக்கிறார்களா என்றுவினவ, அவர்களும் உமது அருட்டுணை யெமக்கிருக்கிறவரையும் எமக்கும் எம்மனைமக்களுக்கும் ஒரு குறையுண்டாகுமோ என்றார்கள். அவ்விருவருள் அகங்காரனை மோகன் நோக்கி உன்தேசம்விட்டு இங்கு வந்ததற்குக்காரணம் யாது என்றுகேட்க, அகங்காரன் அவனை வணங்கி உமதுவரவை ஒற்றராலறிந்து உம்மைக்காணும்பொருட்டு வந்தேன் என்றான்.

அதுகேட்ட மோகன் உன் நாட்டில் வேறு யாதும் விசேஷமில்லையா என அகங்காரனும் இல்லையென்றான். அதுகேட்டு மோகன் மகிழ்ந்து இங்கே பகைவர் ஒருபோது வருவார் என்னுஞ் சொல்லைக் கேட்டு நாமும் அதையறியும்பொருட்டு வந்தோம். அது உன்வாய்மொழியால் கானற்சலமாயிற்று.யாரோ உலகமுழுதும் இதொருபொய்யைப் பரவச்செய்துவிட்டு மறைந்தார். ஆண்சிங்கத்துக்குமுன்னே யானையும் வருமோவென்று சொல்லிச்சிரித்து, இப்பொய்யைக்கேட்பவர் அறிவிலராவரெனக்கூறி, பூமியிலிடமில்லை யென்னும்படி பலபடைகளும் நெருங்கி வர இடம்பனும் அகங்காரனும் முன்னே செல்ல தவமானது ஒதுங்கிப்போகும்படி அந்தக்காசிநக்ரை யடைந்தான்.

அலங்கரிக்கப்பட்டிருக்கிற அந்த நகரில் அப்பிரதக்ஷிணமாய்ப் பிரவேசித்து, பகற்காலத்தில் இங்கு இருளுண்டாயிற்றேயென்று யாவரும் திகைக்க,தனக்கென்று அமைக்கப்பட்ட மாளிகையிற் புகுந்தான். புகுந்து துன்மதிசமேதனாக அங்கிருந்த பொன்மணியாசனத்தின் மீதேறினபோது அங்கிருந்தார் பலரும் சரணம் சரணமென்று அவனைத் தொழுதார்கள். தொழுதவர்களைத் தன் சமுகத்திலே வரிசைபெற இருத்தி, அவர்களுக்கெல்லாம் கண்ணருள் காட்டி, பாஷண்ட விஞ்சையை மற்றொரு புறத்தில் தழுவிச் சுகித்திருந்தான்.

மோகன்காசிபுகு சருக்கம்
முற்றிற்று.

---

## 13. சாருவாகச் சருக்கம்.

இவ்வாறு மோகன் காசியில் இன்புற்று வாழுங் காலத்தில், முன்னே அவன் ஏவலின்படியே தலங்கள் தோறுஞ் சென்ற சாருவாகன் சீடர்தன்னைச்சூழ அவ்

வத்தலங்கள் தோறும் சிறிது சிறிது தங்கி, தன் வித்தைமுழுதும் அங்கங்கே நிலைபெறச்செய்து, அதனால் பரிசுத்தமாகிய விரதாதிகளைப் பங்கப்படுத்தித் தாழ்த்தி, வேதத்தை வெறுத்த சிந்தையனாகிய மோகவேந்தனுக்குத் தன் சித்தியை புணர்த்தும் பொருட்டுக் காசியைநோக்கி விரைந்துவந்தான். அங்கே அரசனுடைய மாளிகையிற் சென்று, வாயில் காப்பவனாகிய சுரோத்திரேந்திரியனைக் கூவி அரசனுக்கு நம் வரவையறிவிக்கக் கடவையென்றான். அவனும் அரசனிடஞ் சென்று வணங்கி அவன் வரவையறிவித்தான். அதுகேட்ட மோகன் மகிழ்ந்து அவனை இங்கு அழைத்துவாவென்ன, அவ்வாயிற் காவலனும் ஐயா, உம்மை அரசன் வருகவென்றான் என, இருண்ட அறிவினையுடைய சாருவாகன் விரைந்துவந்து அரசனுக்கு ஆசிகூறிப்புகழ்ந்து, கருணையோடும் பக்கத்திலிருந்த ஆசநத்திலிருந்து தான் செய்த காரியத்தைச் சொல்வானாயினன். எப்படியெனின், ஐயனே, உன் அருளின்படியே சென்று உலகத்திலிருந்த வேதமார்க்கத்தை விலக்கி என் விஞ்சைமார்க்கத்தில் எல்லாரும் மயங்கும்படி செய்து, கொடிய பகைவர் மார்க்கஞ் சிறிது தலையெடுக்க அதையுங் கலைத்து மீண்டுவந்தேன். பரிசுத்த ஸ்தலங்கள் தோறும் செல்லும்பொருட்டு என்னோடு வெளிப்பட்ட கலியனும் இன்று இவ்விடத்தில் வந்து சேர்வான் என்று சொல்லக்கேட்ட மோகன் அந்தச் சாருவாகனை நோக்கி மகிழ்ச்சியோடும் சாருவாகனே, உலகமுழுதும் உன் சொல்லைக் கேட்கும்படி செய்ததுஎவ்வாறென்று வினவ, சாருவாகனும் மோகனைநோக்கித்தான் வெற்றியடைந்துவந்த வரலாற்றைச் சொல்லுவானாயினன்.

எவ்வாறெனின், இவ்வுடலையல்லால் வேறாக ஒரு ஆன்மா வுண்டென்றும், இவ்வுடல் நீங்க அவ்வான்மா வேறோர் உடலிற்புகுந்து பரலோகத்திற் புசிப்பதுண்

டென்றும், அங்ஙனம் புசிக்கும்பொருட்டு இவ்வுலகில் அறஞ்செய்ய வேண்டுமென்றும் உலகத்தார் கொள்ளு கின்ற ஆசையானது, கைக்கு எட்டின ஒரு மதுரமான கனியை உண்ணுமற்றள்ளி, ஆகாயமத்தியிலே ஒருமர முண்டு, அதற்கு நீரைப்பாய்ச்சி அது தருங்கனியை அருந்திச் சுகிப்போம் எனச் செய்யும் விரதத்தை யொக்கும். மாதரது அநுபவத்தை விட்டு வாலிபம் வீண்போக உபவாசஞ் செய்தும், தாங்குதற்கரிய தவ த்தை முயன்று கனி காய் சருகு தின்றும், தாம்கெட்ட தோடும் அமையாமல் பிறருக்கும் கேடுண்டாக்கி உள் ளது சொல்பவனைப் பொய் சொல்பவனென்றும், கண் ணிற்றோன்றாத ஒன்றை உண்மையென்று சொல்பவனை மெய் உரைப்பவனென்றும் சொல்லித் திரிகிற துர்ப் புத்தி உடையவரைப்போற் கொடியவராவர்? நெடி தாகிய இவ்வுடலை இருகூறுகப் பிளந்து பார்க்குமி டத்து அதிற் சீவனிருப்பது தோன்றுமா? என் அன் பர்களே நீங்களே சிந்தித்துப் பாருங்கள். உடலை இரு கூறுகப் பிளக்குமிடத்து அவ்வான்மா நிற்குமோ என் பிராயின், அதுபோகும் வழியாவது கண்ணுக்குப் புல ப்படுமோ? விண்ணுலகத்தில் இவ்வான்மா போய்ச்சுகித் திருப்பதை யாவர்கண்டு வந்தார்? இவற்றில் எள்ளள வாயினும் ஓர் உண்மை யுண்டானுல் இன்றே என்சாரு வாகன் என்னும் பெயரைப் பரித்தியாகஞ் செய்து விடுகின்றேன். அத்துடன் என் விஞ்சைப் பிரசங்கக் கடையையும் கட்டிவிடுகிறேன். எவர்க்கும் இறப்பும் பிறப்பும் அவயவமும் ஒத்திருக்கின்றன. அப்படியா யின் வருணபேத மென்பது எப்படிகூடும். கூடுமாயின் மேல் வருணத்தார்க்கு உறுப்பு சில அதிகமுண்டோ? அவர் இவ்வுலகத்திலே பிறவாமல் ஆகாயத்தினின்றும் விழுந்தாரோ? நரை திரை மூப்பு சாக்காடு இவை அவரை அடுக்காவோ? உலகத்தில் ஆண்பெண் என் னும் வேற்றுமையன்றி வேற்றுருவங் கண்டவர் யாவ

ரோ? தன் மனைவி பிறன்மனைவி என்று பொறித்தகுறி வேறுபாடுண்டோ? தன் பொருள் பிறர் பொருள் என அவ்வப்பொருளில் எழுத்துவெட்டி யிருப்பதுண்டோ? வலியவருக்கு எப்பொருளும் தமதே ஆகும்; அங்ஙனம் வலியற்றவரே, இவள் பிறன் மனையாள், இது பிறன் பொருள், இதனை இச்சித்தால் பாவம், அதனோடு பழி யும் வரும், ஈற்றிலே நரககதியு முண்டென்று கூறுவர். பூதங்கள் நான்கே, இன்பமும் பொருளுமாகிய இரண் டுமே புருஷார்த்தம், மனம்முதலிய ஆறுமே பொறி கள், கண்ணுக்குப் புலப்படுகின்ற இவ்வுடலே ஆன்மா, இறப்பதே முத்தி, வேதத்திற் சொல்லப்பட்டதும் இதுவே என்று ஆதிநாளில் தேவகுருவாகிய பிரகஸ் பதி இந்திரனுக்கு உபதேசித்தானன்றோ? அமுதம் போலும் தெள்ளியநீர்வாவி தமது அருகிருக்கப் பெற் றும் அதிலேநீரருந்தித்தாகந்தணியாதுகானலைச்சிறந்த நீரென்றெண்ணி ஓடிஉழல்வார்போற்,கையிற்கிடைத்த இன்பத்தைத்தள்ளி இல்லாமையாற் கிட்டாத இன்பத் தைத் தேடித்திரிபவராகிய புத்தியீனர் பற்பலர் இர ண்டுங் கெட்டவர்களா யிருக்கக்கண்டு அவர்களும் இன்பமடைய இவ்விதமாக அவர்களுக்குப் புத்தியூட்டி நல்லவழியிற் பொருந்தும்படி செய்தேன். யாவராலுங் கற்கப்படும் பல கலையினுள்ளும் யான் இங்கே எடுத் துக்கூறுவதே நீதியாகும்; நீதிவார்த்தையாகிய சாஸ்தி ரமே நிலையுடையது. அதனைச் சாதியாதிருப்பதொரு சாதி உலகினுளதோ? குளிர்ச்சியுந் தெளிவும் இயல்பாக வுடைய கங்காசலத்தை உண்பவர்கள் அசுத்தமாகிய கிணற்றுச்சலத்தை உண்பார்களா? மகாயாகங்கள்செய் கின்றோமென்று அரிதில்தேடிய பொருளையெல்லாம் அதன்பொருட்டு இறைத்து உண்ணாமல் வயிற்றையும் உடலையும் வாட்டி, தம்மை யடுத்தோரையும் கெடுத்து, அக்கினியினிடத்துக் கிடந்து வெம்பி, புகையினாலே தியங்கி, பெண்கள் அநுபவமும்நீங்கி, சுத்த அறிவில்

லாதவராய், விழலுக்கு நீரிறைத்தவர்போல் பட்டவர்கள் பலருண்டு. இந்த அக்கிரமமுண்டோ? வேள்வியும், திரவியமும் இவ்வுலகில் ஒழிந்துபோன பிறகு விண்ணுலகிற்சென்று இன்பம்பெறுவோமென்பது, வேரோடு தீப்பட்டு வெந்ததொரு விருக்ஷமானது மீண்டும் தளிர்த்துவளர்ந்து கனிதர அதனை உண்ண நினைப்பதொக்கும். இறந்தவர்பொருட்டு உலகத்திலே அன்னதானஞ்செய்பவர்கள் அவ்வன்னதானத்தினால் வரும் புண்ணியத்தை அவ்விறந்தோர் அடைவரென்று கூறுவதும் உண்டன்றோ? அது உண்மையாயின், நெய் இல்லாமையால் தீபம் அணைந்துபோக அத்தீபத்தைக்குறித்து மற்றொரு தகளியிலே நெய்யையூற்றி நிறையச்செய்தால் அத்தீபம் பின்னும் பிரகாசிக்கவேண்டுமன்றோ? தம்முன்னோர் இறந்ததிதிகளிலே அறுசுவையும் பொருந்த அன்னமிடும்போது அப்பிதிரர் பசிதீருவர் என்பர். மேல்தளத்திலே ஒருவனைப் பசியோடிருக்கவைத்து அவன் பசியைக்குறித்துக் கீழே ஒருவனுக்கு அன்னமிட்டால் மேலிருப்பவன் பசிதீருத லுண்டாயினன்றோ அது உண்மையாகக்கூடும். எப்பொருள் எக்காலத்தில் எவ்வகையில்வந்தாலும் அதனை யிகழ்ந்து நீக்காமல் அப்பொழுதே அநுபவிப்பதே மெய்யாகிய பயனும். ஆதலால் இவ்வுடலே ஆன்மா; மாதர் போகமே முத்தி; கண்டதேகாட்சி உண்டதே உறுதி; இவற்றைச் சிந்தித்துத் தெளிந்துகைக்கொள்ளுங்களென்று பலர்க்கு மெடுத்துக்கூறுவதே எனது உபாயம் என்றான்.

இங்ஙனஞ் சாருவாகன் சொல்லக்கேட்டு, சந்தேகன் இவனைநோக்கி, “உண்டதே உறுதி கண்டதே காட்சி” என்று நீ கூறினால் பெரியோர் கிருச்சிரம் சாந்தபனம் முதலிய அரியவிரதங்களை அநுஷ்டித்தது யாதுபற்றியோ என்று வினவ, அதற்குச் சாருவாகன் அவனை நோக்கி, ஐயா! நன்று வினவினை. உலகமெங்

கும் நமது ஒப்பற்ற நூலையுணர்ந்து காதலரும் கன்னி யரும் கூடிச்சுகிக்கும் இனிய இன்பங்களைக் கண்டு மனம்பொறுமல், வேதமொழியென்றும் அதுமெய் வசனமென்றும் இன்பத்தை மாறுபாடு செய்யும் பாத கர்கள் வஞ்சனைசெய்து உலகில் பற்பலருக்கும் நீ சொன்ன அந்த துர்ப்புத்தியை யுண்டாக்கினர்கள். சிறு பொருளேனுந்தருமஞ்செய்தால் அது சுவர்க்கமளிக்கு மென்றும், பெண்ணாசையைத்துறந்தால் விண்ணுலகில் பெருஞ்சுகம் பெறலாமென்றும், அது எதுபோல் என் னில் மண்ணில் இடப்படும் வித்து அம்மண்ணிலே மறைந்து போயினும் மீண்டும் அஃதொன்றுமே அநந் தமாய்ப் பலன்தருவது போலென்றும் பலவாறுகத்து வர். அங்ஙனம் அவர் கத்துகின்ற வீண்மொழியை மெய்மொழியெனக்கொண்டு ஊணுதிகளைத் துறந்து காணுத தெள்ளமுதைக் கனவிலுண்பவர் போலக் கண்ணுங்கருத்துங்கெட்டு விரதங்களை அநுஷ்டித்து வாழ்நாளை வீணகப் போக்குவர் அநேகர். அழகிய பெண்களை யநுபவிக்குமின்பத்துக்கும், அக்கினிமத்தி யிலிருந்தும், விரதஞ்செய்தும், உபவாசமிருந்தும், பிச் சைக்காக எந்த வீடுகளிலும் பிரவேசித்தும் இப்படி வீண் துயரப்படுமவர்களது இடருக்கும் தாரதம்மியம் பார்த்தால் எவ்வளவாகும்? புவியில் எப்படிப்பட்ட மூடரும் இதை யறியாரா? என்று சொல்லினன்.

அது கேட்ட சந்தேகன் நீர் கூறியது ஒக்கும் இன்பமே உறுதி என்பீராயின் துன்பமும் இடை யிடையே வந்து தொடர்வது யாது காரணம்பற்றி என்று வினவ, அதற்குச் சாருவாகன், ஜலத்திலே நுரையும் நெல்லிலே உமியும் இருப்பதைப் பார்த்து அவற்றைநீக்குவாருண்டோ? வல்லவர்கள் துன்பத்தை அடக்கி இன்பத்தையே தேடுவர் என்று பதிலுரைத் தான். இவற்றைக் கேட்டிருந்த மோகவேந்தன் சா ருவாகனைநோக்கி, அமிர்தத்தை நீக்கி விஷத்தை யுண்

பவர்யாவர் ? நீ முன்கூறியவற்றிற்கு உத்தரமும் ஒன்றுளதோ ? என்றுரைத்து அவனையும் அவன் மொழிகளையும் மெச்சித் தன்னிருகரங்களாலும் அவனைத் தழுவிஅவனுக்குரிய வரிசை யெல்லாஞ்செய்துமகிழ்ந்திருக்குஞ் சமயத்தில்,கலியன் கபடிசமேதனாக அவன் சமுகம் வந்து தலைப்பட்டான்.

சாருவாகச் சருக்கம் முற்றிற்று.

---

## 14. கலிச்சருக்கம்.

---

அப்படி வந்த கலியன் மோகனை வணங்கி நிற்க, மோகன் அவனை அங்கு ஓர் ஆசனத்திருத்தி அவன் அகத்து நிகழ்ச்சியை முகத்தினாலுணர்ந்து, அங்கிருந்தவனையோரை யெல்லாம் புறத்தே போகச்செய்து, உற்ற செய்தியைச் சொல் என்றான். கலியன் எழுந்து வணங்கி, ஐயனே ! உமது ஆஞ்ஞைப்படி உலகெங்குஞ் சென்று தலங்கடோறும் கண்டகாட்சியை எவ்வாறு கூறுவேன்?ஸ்தலங்கள் தோறும் நம்பகைவரால்விளைந்த கேடுகள் பலவுள. முன்னே நம் ஒற்றர்கூறியது மெய்யேயன்றிப் பொய்யன்று. ஸ்தலங்கள் தோறும் யோகினிகளது அக்கினிக் கண்ணும் நெறித்தபுருவமும் அதிகரித்த கோபமும் கடித்தபல்லும் சூலப்படையும் எடுத்தகயிறும் விபூதிமேனியும் நம் கண்ணால் விழித்து எதிர்நோக்கப் படுவனவோ? வைஷ்ணவ ஸ்தலங்கள் தோறும் அரிபக்தியென்னும் யோகினியினது சங்குசக்கரம் வாள் கதை வில் தரித்த கரங்களும், இரணியனைக் கொல்ல எழுந்த நரசிங்கனது கோபம் போலும் கொடிய கோபமும், துளசிமணியும், ஊர்த்துவநாமமும் உயிர்களையெல்லாங் கொள்ளை கொள்ளுமே. விவேகனுதியரை யோகினிகள் மிக்க அன்போடு புத்திரரைப் போற் காக்கின்றார்கள். அந்தப்பலங்கொண்டே விவே

கனுதியர் நம்மவரைப் போல் உருமாறி, நம்மவர் இருக்குமிடந்தோறும் தாமுஞ் சென்று நமது சேனைகளில் அநேகரைத் தம் வழிப்படுத்திக் கொண்டனர். அது கண்டயான் அவரை மீட்டும் நம் வசந்திருப்புதற்பொருட்டுச் சென்றேன. சென்ற என்னை மார்க்கண்டேயரைப் பிடிக்கச் சென்ற யமனைச் சிவபிரான் எற்றவந்ததுபோல எற்றிக் கொல்ல முயன்றுன். அதனை யுணர்ந்த நான் உயிர்தப்பி ஓடிவந்தேன். முற்காலத்தில் அப்படிப்பட்ட யோகினிகள் வசப்பட்டிருந்த சிலரில் மக்களைக் கொண்டு தந்தையரையும், தந்தைதாயரைக் கொண்டு பிள்ளையையும் கொல்லுவித்தேன். அது எவ்வாறெனில், பிரகலாதனைக்கொண்டு இரணியனையும், சண்டேசுரரைக்கொண்டு அவர் தகப்பனையும், சிறுத்தொண்டரையும் அவர் மனைவியையுங் கொண்டு அவர்கள் பிள்ளையையுங் கொன்றது நூல்களில் பிரசித்தமன்றோ? தாழ்ந்த செய்கைகளைச் செய்து என்னைச் சேர்ந்திருந்த அஜாமிளன் இறக்கும் போது அவன் மக்களைக் குறித்து நாராயணன் என்னு முன்னே அரிபக்தியோகினி எமனும் அவனை யண்டாமற்படிக்குச் செய்துகொண்டாள். அங்கிலனென்னும் வேடனைச் சிவபக்தி என்னும் யோகினி காத்தது ஒரு கதையல்லவோ? இப்படி எந்த ஸ்தலங்களிலும் யோகினிகள் நிலைபெற்றிருந்து நம்மைச் சார்ந்தவர்கள் தம்மை யறியாமலே ஒரு செயல் செய்யினும் அது தம்மதாகக் கொண்டு அவர்கள் தம்மைச் சார்ந்தவரென்றும் செய்துவரும் அநியாயம் சொல்லுந்தரமல்ல. நான் சென்ற இடங்களிலே என்னை யெதிர்கொண்டு வந்து விரும்பி வணங்கினவர்களெல்லாம் இப்போது ஜப தபாதிகளை நியமமாக நடத்துமவர்களா யொழுகக் கண்டேன். என்னைக் கடைக் கண்ணாலேனும் நோக்குபவரையும் என்னோடு ஒரு வார்த்தையேனும் பேசுபவரையுங் கண்டறியேன். இன்னும் நமது ஒற்றர் கூறி

யவை எல்லாம் ஓர் அணுவளவேனுந் தவறாது நிகழ்கின்றன. சத்துருவசிரத்தை சிவபக்தி அரிபக்தி சாந்தி என்னும் நான்கு பெண்களும் உபநிடதையை விவேகனுக்கு மணமுடிக்குமாறு செய்கின்ற முயற்சியும் சிறிதன்று. இப்படி நம்பகைவர் செய்கின்ற பற்பல முயற்சியையும் உற்று நோக்குமிடத்து, இன்னும் சிறிதுகாலத்தில் அவர்கள் உலகெங்கும் பரந்துவிடுவார் என்று எண்ணற்கிடமாகின்றது. அப்படிப் பரந்து விடுமுன் நாம் செய்யவேண்டிய கிருஷியை இப்போதே செய்தல்வேண்டும். செய்யோமாயின் கேட்டுக்கு ஆளாவோம் என்பது திண்ணம் என்றான். அது கேட்ட மோகன் கோபமும் அச்சமும் அடைந்து, அவற்றையடக்கித்தனது முடியையசைத்து, கருமம் இவ்வாறாயிற்றோ? எங்கே தோற்றினாலும் நம் பகைவரை வேரறுக்காமல் விடுவேனோ? பாம்பு சினந்து படத்தை விரித்தாடினும் பறவைக்கு அரசாகிய கருடன் அவனை விடுவனோ? விவேகன் யோகினிகளது கிருபையைப் பெற்றாலும் பிரமன்புத்திரியாகிய உபநிடதையை மணந்தாலும் விவேகன் மனைவி சுமதியை அஞ்சேலென்று காத்தாலும் நான் சொல்வதை நீங்களெல்லோருங் கேட்டு ஒழுகுவீர்களாயின் அவனுயிரையான்தொலைப்பது நிச்சயம் என்று இவ்வாறுகூறி, அகங்காரன் இடம்பன் முதலாயினோரை யழைத்து, கலியன் சொன்னவற்றையெல்லாம் அவர்க் கெடுத்துக்கூறி இனிச்செய்வது யாதென்றான்.

அது கேட்ட அகங்காரன் மோகனை நோக்கி, பகைவரது முயற்சி எத்தலங்களிலும் வெளிப்படையானதைக் குறித்துச்சந்தேகித்தலாற்பயனில்லை. அவர் வலி ஓங்கு முன் அடக்கிவிடுவதே இனிச் செய்யத்தக்கது. நாம் யோகினியரை வெல்வது அரிதென்பதுஉண்மையே ஆயினும் அவர் அருள்கொண்டு அகங்கரித்து நிற்பவர்களான விவேகனாதியரிடத்து விடுதற்குரியவ

ரைவிடுத்துஅவரால் அவர்சுத்தியைக்கெடுத்துவிடுவோ மாயின் அவர்மேல் யோகினியர் வைத்த அருள் சுருங் கும். அதன்மேல் எத்திறமிருப்பினும் நமக்கு அது தொலைப்பது எளிதாம். அங்ஙனம் அவ்வருளைத் தவிர்ப் பது கூடாதாகுமிடத்து நமது படை எல்லாவற்றையும் ஒன்றுகூட்டிக் காமன் முதலானோரோடு நாமெல்லோ ரும் கூடி நெருங்குவோமாயின் நம்மோடு எதிர்ப்பவர் யாவர்? அப்பொழுதே அவர்கள் அரண் சூறையாய் விடும் என்று சுருக்கிச் சொன்னான்.

அது கேட்டு அங்கிருந்தவர்கள் யாவரும் நமது பகைவரை வெல்ல இதுவே உபாயம், இதன்றிவே றில்லை யென்று ஆர்த்தார்கள். அது கண்டு மகிழ்ந்த மோகனும் யான் நினைந்ததும் இதுவே என்று கூறி அங்கிருந்த ஒற்றரை அழைத்தான். அவர் வந்து தொழுது நிற்க அவரை நோக்கி, காமன், லோபன் கோபன், மதன், மானன், சங்கற்பன், மச்சரன், இரா சதன், அதன்மன்,அவமானன், வைரன், தாமதன், கல கன் முதலாயினோரை ஆங்காங்குச் சென்று தேடி இத்தனை நாட்களுக்குள் இங்குக் கொண்டுவாருங்க ளென்று ஆஞ்ஞாபித்து ஓலை கொடுத்துப் போக்கி னான். அவர்கள் போனபின் மேற்றிசையிலே வசிக் கின்ற மானனால் விடுக்கப்பட்ட ஒற்றன் ஓர் ஓலையோடு மோகவேந்தன் சமுகஞ்சென்று அவனை வணங்கி நின் றான், அவ்வோலையை அரசன் தன் பக்கத்திலிருந்த ஓர் அமைச்சனை வாங்கி வாசிக்கும்படி சொல்ல, அவ னும் அதை வாங்கி வாசிப்பானாயினான். "ராஜாதிராஜ னும் சர்வ நரேந்திரனுமாகிய மோகவேந்தனது திருச் சமுகத்திற்கு மீளா அடியனாகிய மானன் கைகூப்பி வரையும் விண்ணப்பம்:- நம் பகைவனாகிய தருமன் நம் மவரைப்போல வேடம்பூண்டு காஞ்சியையடுத்து அங் கிருந்து காமன் செய்கின்ற முயற்சிகளுக்கு மாறான செயல்களைச் செய்து அனேகரைத் தன் வசமாக்கி

ஞன். இன்னும் நம்மவர்களிருக்கும் ஊர்கள்தோறும் பகைவர்கள் பிரவேசித்திருக்கிறார்கள். சாந்திமாதும் அவள் தாயும் வாணியிடஞ் சென்று அவள் புத்திரி யாகிய உபநிடதையை மணஞ் செய்விக்க வேண்டு மென்று அவளை வசியஞ் செய்தலே தொழிலாக அல் லும் பகலும் திரிகின்றார்கள். இவை என் காதுக் குக் கிட்டிய செய்திகள். இனிமேல் யாது நிகழுமோ அறியேன்" என வாசித்து முடிக்க, அதைக் கேட்ட மோகன் அவ்வொற்றனை நோக்கி, சிறிதும் அஞ்சா மல் அத்தருமனை ஒரு நொடியிற் பிடித்துக் காலிலே தளையிட்டு இங்கு கொண்டுவரும்படி நாம் பணித் தோமென்று மானனுக்குச் சொல்லக் கடவாயென் றான். அவ்வொற்றன் சென்றவுடனே மோகன் தன்னைச் சூழ்ந்திருந்தவரை நோக்கி, ஈசன், அயன், திருமால் என்னும் மூவரும் தத்தம் தொழிலையன்றி இன்னும் சாந்தியையடைந்தாரில்லை. அங்ஙனமாகவும் விவேகன் பொருட்டுச் சாந்திமாது தூதுபோகத் துணிவளோ? அவள்தாயாகிய சிரத்தையைப்பிடித்து வரும்படி முன் னுஞ் சிலரையனுப்பி யிருக்கின்றேன். அவளைப் பிடித் துத்துன்பப் படுத்துவோமாயின் அவள் புத்திரியாகிய சாந்திக்கு உயிர்போவது நிச்சயம். அன்றியும் அகிர் த்தி புத்திரியைக் கொண்டும் ஒரு கணப்பொழுதில் அவளுக்குத் துன்பம் விளைவிப்போம். மித்தியா திட்டி யை இக்கணத்திற்றானே என் அருகிற்கொண்டுவாருங் கள் என்றுரைத்தான்.

கலிச்சருக்கம் முற்றிற்று.

---

## 15. மித்தியா திட்டிச் சருக்கம்.

இங்ஙனம் மோகன் செய்த ஆஞ்ஞையை விப்பி ரமை யென்பாள் ஒரு பாங்கி கேட்டோடி மித்தியா திட்டியை யடைந்து, உன்னை அரசன் வருமாறு பணித்

தான்என்முள். உடனே மித்தியாதிட்டிமனக்களிப்போ டெழுந்து, மணிச்சிலம் பொலிக்கச் சிவந்த பூப்போ லும் பாதங்களைப் பெயர்த்து அன்னமும் நாணி ஓட நடந்து, இடையைக்கண்டு ஆகாயத்து மின்னற் கொடி கள் வெட்கி வெளிப்படாது உள்ளடங்கக் கொடிபோ லத் துவண்டு செல்லும்போது, தன் பாங்கியைப் பார்த்து, நங்காய்! நெடுநாளாக அரசன் சமுகத்தில் செல்லாதிருந்தயான் இன்றுபோய்க் கைகூப்பினுலும், அவன் முன்போல என்னை வருக என்று ஆதரித்து அழைப்பானு வென்பது எனக்குச்சந்தேகம் என்முள். அதுகேட்ட பாங்கி, உன்னைக்கண்டும் உருகாத புருஷர் உலகத்திலுளரோ என்முள். அதற்கு மித்தியாதிட்டி என் அழகை இகழ்வது உனக்கு இயல்போ என்று மறுத்து வினவ, மன்னவன் செய்யும் வரிசையினல் எனது உண்மையைக் கண்டறியலாமே என்று விப்பிர மை மறுத்துரைத்து மீண்டும் அவளைப்பார்த்து, நீவழி தடுமாறி நடப்ப தென்னை? சென்ற இரவில் நீ துயின் றதில்லையா என்முள். ஒருவருக்கு ஒரு மனைவியா யுள்ளவருக்கே இரவில் துயிலுதல் அரிதாயிருக்க, உலகிலுள்ள புருஷர் எல்லோருக்கும் பொது மனைவி யாய் அவ்வவர்பாற் கலந்து வரும் தொழிலையுடைய எனக்கு நித்திரை அரிதாவது ஆச்சரியமோ என்முள். அதுகேட்ட விப்பிரமை அவளை நோக்கி, நீ புரியும் அத்தொழில் அரசனுக்குடன்பாடாகுமோ என்ன, அத ற்குமித்தியா திட்டி, யான் அங்ஙனஞ்செய்வது அரசன் அனுமதிகொண்டே என்முள். அங்ஙனமாயின் நீ அரசன் அனுமதிகொண்டு கலந்தபேர்கள் யாவரென்று விப்பிரமைவினவ, காமன்-அதன்மன்-குோபன்-அவன் மகன் கலகன் - ஆங்காரன் - உலோபன் - அவன்மகன் இடம்பன்-மானன்-மதன்-மச்சரன்-சங்கற்பன் முதலா கிய அக்குலத்தவர் யாவரும் என்புருஷர்களே என்று மித்தியாதிட்டி கூறினள். இது உண்மையாயின் அவ

ரவர் மனைவியருக்கு உன்னிடத்திற் கோபமுண்டாகா தோ என்று விப்பிரமை யுரைக்க, என்னை அவர்கள் கொண்டாடா தொழிவராயின் அவர்க்குத்தலைமையுண் டாவது எப்படி என்றாள். இவ்வாறு விப்பிரமை யோடு சல்லாபித்துச் செல்லுகின்ற மித்தியாதிட்டி, பார்த்த புருடர்கள் கண்ணும் மனமும் கவரும்படி அதிவிநோதமாக நடந்துவந்து மோகமன்னன் சபை யையடைந்து, அரசனை வணங்கி, மயிலென ஒதுங்கி, நந்தாவிளக்குப்போல ஒளிவிடும்படி நின்றாள். நின்ற அவளைக்கண்ட மோகன், நாளதுவரைக்கும் நன்கு வாழ்ந்தனையோ என்றான். அதற்கு அவள் உனது அன்பு எனக்கு உள்ளவரையிற் குன்றாத வாழ்வு அரி தாகுமோ என்றாள். அதுகேட்ட மோகன் அவளை நோக்கி, உன் முகதரிசனத்தால் வயசினால் முதிர்ச்சி யுற்ற எனக்கு இளமை வாய்த்ததே என்ன, அதற்கு மித்தியாதிட்டி, என் ஐயனே! உன்னைக்கண்டு களி கூராதகண்கள் நின்று விளங்குவனவாயினும் அவற் றால் யான் அடையத்தக்க சுகம் யாதோ என்று கூறி, என்னை இங்கே வரவழைத்த பணியாதென்று வினவ, அதற்கு மோகன், நங்காய்! விவேகன் உபநிட தையை மணம் புரியக்கருதி அவளிடத்துச் சத்துவ சிரத்தையைத் தூதாக விடுத்தான். அவளும் நீயும் ஒருவருக்கொருவர் எதிரிகளாதலின் இக்கணத்திற்று னே அவள் செல்லும் வழியிற் சென்று அவளைப் பிடித்துக் கொண்டுவரக்கடவை யென்றான். அதைக் கேட்ட மித்தியாதிட்டி, சத்துவசிரத்தையைப் பிடித் துக்கொண்டுவந்து உன்சமுகத்து விடுப்பது எனக்குப் பெரிதன்று; சுவர்க்கபதங்களிலுள்ள பகைவர்களது மனைவியரைக் கொண்டு வருக என்று நீ கூறினும் அங் குச்சென்று அவரைக் கொண்டுவரும் வல்லமை யுடை யேனென்பது அறிவாயன்றோ என்றாள். அதுகேட்ட மோகன் அவள் முகத்தில் தன் முகத்தைப் பொருத்தி

முத்தமிட்டு, நீ இப்பொழுது சொன்னஉறுதிமொழிப் படி சத்துவசிரத்தையைப் பிடித்துக் கொண்டு வந்து இங்கே விடுவாயாயின், விவேகனுக்கும் அவன் மனை மக்களுக்கும் அப ஜயங் கொடுத்தவ ளாவாய் என் றான். அவ்வளவில் மித்தியாதிட்டி அவனிடம் விடை பெற்று அங்குநின்றும் அகன்று விரைந்து நடந்து முன்னே புத்தனும் காபாலியும் சமணனும் சென்றவழி யே தனக்கும் வழியாகக் கொண்டு சத்துவ சிரத்தை யிருக்குமிடந் தேடிச் சென்றாள்.

மித்தியாதிட்டிச் சருக்கம் முற்றிற்று.

---

## 16 சிரத்தை போக்கிடையூற்றுச் சருக்கம்.

இங்ஙனம் முன்னாகச்சென்ற புத்தனும், காபாலி யும், சமணனும், பின்னாகச் சென்ற மித்தியாதிட்டி யும் முறையே முன்னும் பின்னும் சத்துவசிரத்தை யைக் கண்டு, அவள் ஒருகிளியாகவும் தாம் பூனைக ளாகவும் அவளை வளைந்தார்கள். வளைந்து நமது கரு மத்தை இக்கணத்திலே முடித்துவிடுவோம் என்பா ரும்,அவள்மேற பாய்வாரும்,எற்றுவோமென்றெழுவா ரும், தொடர்ந்து செல்வாரும ஆயினர். அதுகண்ட சத்துவசிரத்தை யானவள் மனந்தளர்ந்து, ஓடவாயி னும் பின்வாங்கவாயினும் காலெழாதவளாகி, பெருங் கடலினிடையே அகப்பட்ட சிறியமரக்கலம்போலவும், சாயாகிரகத்தால் மறைக்கப் பட்டுக் கலங்குவதாகத் தோன்றுகின்ற சந்திரன் போலவும் தடுமாறிநின்றாள். அதுகண்ட மித்தியாதிட்டியானவள் இதுதான் சமய மெனக்கருதி அவள் கூந்தலைப் பிடித்திழுக்கும் பொ ருட்டு அவளைக் கிட்டிவந்தாள். அப்போது சத்துவசிரத் தையானவள் யோகினிகளுடைய கிருபையின் வலியா லும், தருமத்தின் வலியாலும் மித்தியாதிட்டியினால் தொடப்பெறாதவளாய், யோகியரது உள்ளத்திலே ஓடி

யொளித்தாள். அதுகண்ட மித்தியாதிட்டியானவள், கனவினிடத்தில் திரவியக் குவியல்களைக் கண்டுகளித்து அவை கையிற் கிடைக்கவருங்காலத்தில் தூக்கமொழிந்து கண்விழித்தவர் அவற்றை நினைந்து நினைந்து வருந்துவதுபோல, கையிற் கிட்டியும் கிட்டாது சென்ற சத்துவசிரத்தையைநினைந்து புலம்பி நின்றாள். அவள் அப்படி நிற்க, சமணன் முதலானோரும் தனித்தனியே சிரத்தையைப்பற்றினோம் என்றுகூறி அவள்மேற்பாய்ந்தும் அவள் அவர்கள்கையில் அகப்படாமல் முன்போலவே மறைந்து போகக்கண்டு இதென்னமாயம் என்று திகைத்தார்கள். திகைத்துத் தெளிவடைந்த பிறகு அவள் எங்கேபோனாலும் அவளைநாம் தேடிப்பிடிக்காமல் விடுவதில்லை யென்று ஓடுவர்; ஒருவரையொருவர் அறியாமல் தேடுவர்; தேடிமயங்குவர்; மயங்கித் தியங்குவர்; தியங்கித் திகைப்பர்; அப்பால் புத்தன் ஒருபக்கஞ்செல்ல, காபாலி மற்றொரு பக்கம் நாட, சமணன் அப்பாலொருதிசை போக, மித்தியாதிட்டி தானும் ஒரு புறந்தொடர்ந்தாள். அச்சமயத்தில் இடம்பன் மகனாகிய அசத்தியன், சத்துவசிரத்தை சமணாதியர் கையிலகப்பட்டாள் என்று நாற்றிசையிலும் வெளியிட்டான். அது மெய்யென்று நம்பி யாவரும் துக்கசாகரத்தில் அழுந்தி, அந்தோ ஈதென்ன விபரீதகாலமோஎன்பார் சிலர், வேதவிரோதிகளாகியசமணாதியர் சத்துவசிரத்தையைப் பிடித்துத் துன்பஞ்செய்கின்றனரே யென்பார் சிலர், அவள் பாதங்களிலே தளையிட்ட பாதகரை என்செய்வோம் என்பார் சிலர், அப்புலையர் பெண்கொலை செய்வதற்குச் சிறிதும் அஞ்சாரே எனபார் சிலர், யாமெல்லோரும் இரக்கமற்றவன் கண்ணராயினோமே என்பார் சிலர், சிரத்தை கவரிமாவினுஞ் சிறந்த நாணுடையளாதலால் தானே தன்னுயிரை மாய்த்திருப்பாள் என்பார் சிலர். அவளோடுடன் பிறந்தவனாகிய தருமனிடத்துச்சென்று

இச்செய்தியைத் தெரிவிப்பார் யார் என்பார் சிலர், இதனை அந்தத் தருமன் கேட்கில் உயிர் தரியானே எனபார் சிலர், கல்நெஞ்சராகிய புலையர்கையில் அகப் பட்டுத் துன்பமடைவாயென்று பிரமன் உனக்கு விதித்தானே என்பார் சிலர், புத்திரியாகிய சாந்தி இதனை யறிந்தால் இறந்தொழிவளே யென்பார் சிலர், உன்னை அருமையாகப் பெற்று வளர்த்த தாயாகிய புனிதை யானவள் இதனை யறிந்தால் எவ்வாறு சகிப்பளோ என்பார் சிலர், வாணிபுத்திரியை விவேகராஜனுக்குத் தூதுசென்று மணம்பொருத்துதற்கு உரியவர் இனியாவர் என்பார் சிலர், இதனைக் கண்ணாரக்கண்டு அங்கிருந்து வந்தவர் யாவர் என்பார் சிலர், இது பகைவர் கட்டிவிட்ட பொய்யென்பார் சிலர், யோகினிகளுடைய கிருபா நோக்கம் அவளுக்கு மிகவும் உண்டென்பார் சிலர், உண்டாயின் அவளை ஒருவர் நெருங்குவது எளிதோ என்பார் சிலர், இந்தச் சிரத்தையைப் பிடித்து வருத்துவோர்க்குச் சாநகியைத் திருடிச்சென்ற இராவணன் முதலானோருக்கு உண்டான கெடுதியே உண்டாகும் என்பார் சிலர்.

சிரத்தைபோக்கிடையூற்றுச் சருக்கம்
முற்றிற்று.

---

## 17. சாந்திச்சருக்கம்.

---

இவ்வாறாகப் பற்பலர் மனந் தடுமாறி நொந்திரங்கும்போது, சத்துவ சிரத்தையினிடத்தில் பேரன்புடையவளாகிய அவள் புத்திரி சாந்தியின் காதில், இந்தச் செய்தியானது காய்ச்சின நாராசம்போலப் பிரவேசித்தது. பிரவேசித்தவுடனே உயிர் வெதும்பி, நிலைகுலைந்து, கீழேவிழுந்து, அறிவிழந்து துடித்துப் பிணம்போலானாள். சிறிது நேரத்திலே போன வுயிர் வரப்

பெற்றுப் புலம்புவாளாயினள். எப்படியென்றால், என்னை யீன்றெடுத்த அன்னைபோலத்தருமனுக்கு ஒரு தங்கையே, யாவருக்கும் இலக்குமியைப் பொருத்துகின்ற பூங்கொம்பே, தன்னையே யன்றித் தனக்கு உவமையில்லாதவளே, உன்னைப் பிரிந்து யான் ஒரு கணப்பொழுதும் உயிர் வாழ்வேனோ? சுகந்தங்களின் சுகத்தை யறியாத குறவரது குடியிற் புகுந்த நாவிபோலாயினையே! புலையர்கை வசப்பட்டு வேடர்கள் சிற்றாரிலே கட்டுப்பட்ட மானையும், மிலேச்சமனையில் அகப்பட்ட தலையீற்றுப் பசுவையும் நிகர்த்தனையே! பிரமன் முதலானோரும், வேதியரும், ஞானியரும், தபோதநரும் உன்னை யடுத்தல்லவா விளங்குவோராயினர்? இனி உன்னைப்போல அவரை விளக்க வல்லவர் யாவர்? தீயவர் உன்னைத் தீண்டிச் சிறையில் வைக்க நீயோ பொறுப்பாய், உன் நெஞ்சோ துயரப்படுவது, தூயவர்களும் உன்னைத் தோற்றுவிட்டாரோ, யோகியருடைய மனத்தைவிட்டு நீ யெவ்வாறு நீங்கினையோ, தெய்வத்தலங்களிலும், புண்ணிய வனங்களிலும், நதிகளிலும், தடாகங்களிலும், பரிசுத்த மலைகளிலும் பொருந்தி நீ உலாவிவர இனி யெப்பொழுது காண்பேனோ என்றிவ்வாறு தாயைப்பிரிந்த தலைக்கன்றுபோலக் கலங்கி, சமணுதியர்கையிலகப்பட்ட என் தாய் இனி மீள்வதில்லை; யானும் தீப்புகுந்து விண்ணுலகிற்சென்று அங்கு அவளைக்காண்பதே கருமம் என்று அப்படியேசெய்ய யத்தநித்தாள். அதுகண்ட கருணையென்பவள்அவள் கண்களின் நீரைத்துடைத்து மார்போடணைத்து வியர்வையைத் துடைத்துத் தேற்றுவாளாயினள். எப்படி யென்றால், பெறுதற்கரிய என் அமிர்தமே, துயரமானது மெய்யாக நமக்கு வருவதாயின் நற்குறிகள் காணப்படுமோ, தோளும் கண்ணும் புருவமும் உனக்குமாத்திரமா, எனக்கும் இடப்புறத்தில் துடிப்பதைப் பார். ஆதலால் உன்

அன்னைக்குச் சிறிதும் தீங்கில்லையென்பது திண்ணம். அன்றியும் அவளுக்கு ஒருதீங்கு செய்ய யாவராயினும் வல்லவராவரோ? தாயினும் சிறந்தவராகிய நண்பினர்க்கும் தீங்கு விளைவிக்கு மியல்பினராகிய நம்பகைவர் நம்மை வருத்தும்பொருட்டு இந்தப்பொய்ச்சொல்லைக் கட்டிவிட்டார். அதனை மெய்யென்று கொண்டாய், அது உன் பேதைமை. சுத்தமாகிய பளிங்கினிடத்தே எந்தெந்த வுருவங்கள் சார்கின்றனவோ அந்தந்த வுருவங்களை அதுகாட்டுதல் போல,உன்மனமும் ஒவ்வோர் சொல்லையும் நம்பித்துன்பத்தை யடைகின்றது. அந்தத்துன்பத்தை ஒழித்துவிடு, பரிசுத்த ஸ்தலங்கள்தோறும்போய் அங்கே உன்தாயைத்தேடி, அவள் அங்கேயில்லையாயின் அப்பால் சமணுதியர் இருப்பிடந்தேடிப் பக்கத்திலே மறைந்திருந்து, அங்கே உன்தாய் இருக்கிறசெய்தியை ஆராய்ந்தறிவதே இனிச்செய்யத்தகுந்த காரியம், ஆதலால் எழுந்திரு போவோம் என்றாள். அதற்குச் சாந்தியும் ஒருவாறு மனந்தெளிந்து போவோம் வாவென்ன,இருவருஞ்சேர்ந்துபோயினர். அப்படிப்போனஇருவரும் பற்பலநதித்துறைகளையும்,தெய்வஸ்தங்களையும், புண்ணியாரணியங்களையும், மலைச்சாரல்களையும் அடைந்து அங்கங்கே தேடியுங்காணுமையால் சாந்தி பின்னும் இரங்கிச் சோருவாளாயினள்.

என்தாயே, தருமஞ் செய்வோரிடத்து இருப்பாயென்று அவரிடஞ் சென்றேன், அவரையும் நீங்கிஞய். வேதியரிடத்துக் காணலாமென்று அவரிடத்துச் சென்றேன், அவரையும் துறந்தாய். மந்திரம் ஜெபிப்பவரிடத்திற் சேர்ந்தாயென்று சென்றேன், அவரையும் மறந்தாய், விரதங்காப்பவரிடத்து வசிப்பாயென்று பார்த்தேன். அவரையுங் கைவிட்டாய். அப்பால் வேள்விசெய்வோரிடத்து உறைவாயென்று நாடினேன், அவரிடத்துங் கண்டிலேன். பிரம சொரூபிகளாகிய முனிவரகத்திலே வாசஞ்செய்கின்ற உன்னைக் காணே

னே, இனி என்னுயிர் தரிக்குமோ,வாவென்று வாய் திறவாயா, என்று இவ்வாறு புலம்புகின்ற வளைக்கருணையென்பவள் தடுத்து, ஐயோ, நங்காய், ஆராயாது வாளா புலம்புகின்றனையே, சிரத்தை மாது பகைவர் கையில் அகப்படலாகா தென்று மறைந்து உபநிடதை யிடம் சென்றாள் போலும். அன்றாயின், யோகிநியரிடத்துச் சென்றிருத்தல் வேண்டும். அதுவுமில்லையாயின், பெரியோரிடத்திற் சென்றிருத்தல் வேண்டும். ஆதலால் இப்போது சாருவாகன் முதலியோரிடத்தும் நம் உருவைமாற்றிக் கொண்டுபோய்த் தேடுவோம். அங்கே எந்தச் செய்தியும் செவ்வையாய் வெளிப்படும் என்றாள்.

அவ்வாறே கருணையோடு சாந்தி செல்லும் போது, பித்தனோ அன்றிப் பேயோ என்று சந்தேகிக்கும்படி ஒருவனெதிர்ப்பட்டான். உடம்பை மூடிப் படர்ந்த தீராத அழுக்கும், மயிர்ச்சிக்கு நாற்றமும், நாசியினின்றும் ஒழுகுகின்ற சளி புகப்பெற்ற வெள் வாயும், அருவருத்த நிர்வாணமும், ஒரு கையிற் பிரம்பும், மற்றொரு கையில் மயிற்றோகையும், பாசிப்பல்லும், மெல்லப்பெயர்த்துவைக்கும் அடியும், பாழாகிய நெற்றியும், நீண்டு கூர்ந்த நகமும், நீலக்கரிபோன்ற நிறமும், திரண்டுகூடி உருவெடுத்தாற்போல நின்ற அவனைக்கண்ட சாந்தியானவள் துணுக்கிட்டுப் பேரச்சமுற்று, நரகமே இவ்வுருவெடுத்து வந்ததோ, இவன் யாவனென்று கருணையை வினவினாள். அதற்குக் கருணை, என் அம்மே இவன்றான் சமணனெனப்படுவோன், அவனிடஞ்சென்று உன்தாய் செய்தியை அறிவோம் வாவென்று சொல்லி யழைத்துக்கொண்டு, இருவரும் சமணனிடத்தை அணுகினார்கள்.

சாந்திச்சருக்கம் முற்றிற்று.

---

## 18. சமணதியர் சருக்கம்.

அந்தச் சமயத்தில் சமணன் என்பவன் தன் பாதங்களில் விழ்ந்து, மனமொத்து அன்போடு வணங்கின சீடர்களைநோக்கி, தனது திகம்பர சித்தாந்த மதத்தின் உண்மையை யெடுத்துப் போதிப்பானாயினன். எவ்வாறெனின், ஊனுண்ண வேண்டும் என்கிற விருப்பத்தாலே யாங்கள் செய்கிறோ மென்று பசுக்கொலை புரிகின்ற தீயோரைக் காணும் போதெல்லாம் கண்களை மூடிக்கொண்டும், அவர்கள் ஓதுகின்ற வேதவசநம் நமது செவியில் நுழையாதபடி செவிகளை யடைத்துக் கொண்டும், சக்ராயுதத்தையும் சூலப் படையையும் வேலையும் கையிலேந்திக் கொலை செய்வதற்கு ஆயத்தர்களாய்த் திரிகிற தெய்வங்களை இகழ்ந்துகொண்டும், சடாதாரிகளையும் நீறணிவோரையும் உருத்திராக்க மாலையைத் தரிப்போரையும் தரிசிக்காமல் பயந்தும், எவர்க்கும் எதுக்கும் துன்பஞ் செய்யாமையையே விரதமாகக்கொண்டும், சீவகோடிகளை யெல்லாம் நம்முயிர் போலக் காத்துக்கொண்டும், கொலைசெய்யா விரதமே எவற்றினுஞ் சிறந்த விரதமென்று சாதித்துக் கொண்டும், உடம்பை மூடி அழுக்குப்படர்ந்தாலும் நீரில் முழுகாமலும், கையினால் மயிரை ஒவ்வொன்றா யொதுக்கிக் கொண்டும், உறியிலே வாசஞ்செய்து கொண்டும், வாம நூலிலே விதித்தபடி ஒழுகுவோ மாயின், நமக்கு உலகத்திலே சித்தியாதது ஒரு பொருளுமில்லை என்பதும் பிறவும் சொல்லி முடித்தான். இவற்றைக் கேட்டிருந்த சீடர்களில் ஒருவன் எழுந்து வணங்கி, உலகத்தில் அவரவர் பக்குவத்துக் கேற்றதே ஒழுக்கமென் றறியாமல் எவராலும் போற்றப்படுவதாகிய வைதிகத்தை வாளா இகழ்ந்து கூறுதல் திருவடிகளுக்கு நன்றாமோ என்றான்.

என்றலும் சமணன் சினந்து அங்கு நின்ற சிரத்தையை நோக்கி, ஓ சிரத்தையே, இந்த அறிவிலியைப் பற்றுதற்கு இங்கே வருக வென்றான். அந்தச்சொல் முன்னே மாறு வேடந்தரித்து மறைந்து வந்து நின்ற கருணைமாதின் செவிப்பட்ட மாத்திரத்தில் மனம்புண் பட்டாள். மற்ற சாந்தி யென்பவளோ துணுக்குற்றுத் தம்பம்போ லசைவற்று நின்றாள். அதற்கிடையில் கருணையானவள் மனந்தெளிந்து அங்கு வருகின்றவளை யாரென வுற்று நோக்கி, தாமத சிரத்தையென் றறிந்து சாந்திக்குச் சொல்ல, சாந்தி கவலை யொழிந்தாள். ஒழிந்தபின் இரும்புக்கும் பொன்னுக்கும் பொன் என்பது பொதுப் பெயரானாற்போல அழகு வாய்ந்த என் தாய்க்கும், பிறைபோல நீண்டுவளைந்த பல்லும் மலைப்பிளப்புப்போன்ற பேழ்வாயும் உடைய இந்தக் குரூபப்பெண்ணுக்கும் இடப்பட்ட சிரத்தை யென்னும் பெயரன்றோ நம்மை மயக்கியதென்று அடங்கினாள். இவர்கள் செய்தி இவ்வாறாக, அங்கே தாமதசிரத்தை சமணன் ஏவலின்படியே சென்று அந்தச் சிடனைத்தழுவினாள். தழுவினபோது அவனும் அவள் வசப்பட்டு நமது சமண மதமே இனிய மத மென்று ஆநந்தக் கூத்தாடினான். அதுகண்டு சாந்தியும் கருணையும் அங்கு நின்றும் மீண்டு அப்பாற் சென்றனர்.

செல்லும்போது, பனம்பழம்போலத் தலையை முண்டித்துக்கொண்டும், மெல்லியதுவராடை யொன்றை மேலேபோர்த்துக்கொண்டும், ஒரு கையில் புஸ்தகமொன்றை யேந்திக்கொண்டும், நங்காய் நங்காய் பலியிடு என்று மனைகள்தோறுஞ் சென்று கூவிக்கொண்டும் எதிரேவருகிற ஒருவனைச் சாந்தி கண்டு, கருணையை நோக்கி, இவன் யாரென்று வினாவினாள், அதற்குக் கருணை இவன்றான் புத்தன், இவனருகே செல்வோம் வாவென்று சென்று அவனருகே அவ

ளோடும் நின்றாள். அப்போது பலர் அந்தப் புத்தனடியில் வந்து விழுந்துவணங்கி எழுந்தார்கள். அதுகண்ட புத்தன் அவரை நோக்கி, புத்திக்கு விஷயமாகிற எப்பொருளும் நீரோட்டமும் தீபச்சுடரும்போலத்தோன்றி நித்தியமாகாமல் அழியும்; நெறிதப்பாமல் ஒத்திருப்பது புத்தியே யல்லாமல் உலகில் வேறு யாதொன்றுமில்லை; விளக்கமாகிய புத்தியானது அகத்திலே யிருப்பதாயினும் பொருள்களெல்லாம் அதனிடத்தே வெளிப்பட்டு நிற்கும் பற்பல வாசனைகளால் அந்தப் புத்தி பற்பலவாய் நிற்பதல்லாமல் வேறில்லை. ஆதலால் பலவகைப்பட்ட வாசனைகளும் விடயச் சார்பும் நீங்குமாயின் புத்தியானது ஒழுங்குபட்டு அசைவற்ற தீபம்போல விளங்கி நிற்கத்தலைப்படும். இவ்வாறு நிறுத்துதற்கு முயற்சி செய்வதே தகுந்த காரியம். இதுவே சௌகத சித்தாந்தப் பொருள் முடிபு என்று கூறினான். அதைக்கேட்டு அங்கு நின்றார் யாவரும் உண்மை உண்மையென்று வணங்கும்போது, சமணன் அந்தப் புத்தன் முன்னே வந்து என் வினவுக்கு விடைகூறு, இங்கு வாவென்றான்.

அதற்குப் புத்தன், சமண மூடா! யானோ உன்னிடத்துக்கு வருவது, நீ இங்கே வாவென்றான். இவ்வாறு இருவரும் ஒருவரோடொருவர் கோபித்து உரையாடுகையில், கரியமேகத்தை யூடு பிளந்து ஒளி வீசுகின்ற மின்னற்கொடி போலக் கையிலே வாளொன்றை ஏந்திச் சுழற்றிக்கொண்டும், என்பு மாலையை மார்பிலே தரித்துக்கொண்டும், மத்தப்பூ எருக்கம் பூவைத் தலையிலே சூடிக்கொண்டும், மயானத்துச் சாம்பரை எடுத்து உடம்பெங்கும் பூசிக்கொண்டும், கையிலே தலையோ டொன்றை யேந்திக்கொண்டும், என்புக்குண்டலங்களைக் காதிலே அணிந்து கொண்டும், கள்மயக்கினாலே சோர்ந்துநடந்து பிதற்றிக்கொண்டும், கபாலி அங்கு வந்தடைந்தான். அவனைக்கண்ட

சமணன் அவனைக்கூவி, மயானம் எல்லாம் ஒன்று திரண்டு உருவெடுத்து வருவதுபோல வருகின்ற, ஏ கபாலி! உன் வரலாறு என்னை, உன் நெறி என்னை, எனக்குச் சொல் என்றான். அதற்கு அவன் இவ்விரதம் காபாலிகம் எனப்படும்; எனக்குத்தெய்வம் வைரவன்; எனும் புடனே தலையோட்டைத் தரித்து மயானத்திலே சாம்பரை வாரிப்பூசி அங்கிருந்து உபவாசஞ்செய்து அன்போடு வைரவம் என்னும் ஓமத்தை அமைத்து நரபலியிட்டு விலா ஊனை எடுத்து மதுவைக்கலந்து அபிசாரஞ்செய்து ஓமமுகத்திலே ஆகுதி பண்ணிப் பின்பு நமது உதரத்திக்கு மதுவைவார்த்துத் தலையோட்டிலே உண்டுகளிப்பது பாரணமாகும்; இதுவுமல்லாமல் ஒரு நரனை நங்கடவுளர் எதிரே நிறுத்தி அவன்கண்டத்தை அறுத்து அவன் இரத்தத்தையும் தசையையும் எடுத்துப் பூசை செய்வதுமுண்டு. இதுவே வைரவவிரதம் என்றான். இதனைக் கபாலி சொல்லுந்தோறும் புத்தனும் சமணனும் தம் இருகாதுகளையுங் கைகளாற் செம்மி, அடிக்கடி தங்குரு நாமத்தை உச்சரித்துக் கொண்டு கபாலியைநோக்கி, இஃதொரு விரதமென்று உனக்குப் போதித்து இப்பாதகத்தை உன்னைச் செய்யுமாறு ஏவிய பாவிபாவன்? அதனைக் கைக்கொண்டு யாது செய்தனை? அந்தோ கொடுமை! கொடுமை!! என்றார்.

என்ற மாத்திரத்தில், கபாலி கண்களிலே தீப்பொறி சிந்தச் சினந்து அவரை நோக்கி, சோதிக்கொழுந்தாகிய கண்ணுதலை அடையும் வழியை உபதேசிக்கின்ற நங்குருவாகிய ஞானதேசிகனைப் பாவி என்று கூறினீர். எனக்குபதேசித்த விரத பலத்தினால் எவ்வரிய செயலையும் யான் செய்ய வல்லவன். அது பெரிதன்று, நமது குருநாதன் சங்கரனோடு எத்தேவர்களையும் இவ்வுலகில் அழைக்க வல்லவன். ஆகாயத்திலே சூரிய சந்திர நக்ஷத்திரங்களைச் செல்லாது த

டுக்க வல்லவன். நீரிலே உலகமுழுதையும் நிரப்புவன். அந்தநீரை ஒரு இறைப்பொழுதில் உண்பன். உலகெங்குஞ் சென்று ஒரு நொடியில்மீள்வன். மண்ணை விண்ணுக்குவன், விண்ணை மண்ணுக்குவன். இவையன்றி இன்னும் எத்தனையோ பேரதிசயங்களைச் செய்ய வல்லவன் என்றான்.

அதுகேட்ட சமணன், மாயையினாலே உன்னை வஞ்சித்து இவ்விந்திரசாலத்தை உனக்கு அக்குருதோற்றுவித்தான்போலும் என்றான். என்றலும் கபாலி அவனைச் சினந்து நோக்கி, எம்பிரானே இவ்விந்திர சாலஞ் செய்பவன்? சிவத்துரோகியாயினை ஆதலால் இவ்வாளினால் உன்னைக் கூறு செய்து என் வைரவக் கடவுளுக்குப் பலிகொடுத்து விடுவேன் என்று கூறி முழங்கிக்கொண்டு, வாளையுருவிப் பூதகணங்கள் கொக்கரித்துப் பின்னே செல்ல முன் சென்றான். அது கண்டு சமணன் அஞ்சி ஓடிப் புத்தனைத் தழுவினான். அப்போது கபாலி ஈசனை நிந்தித்த உன்னைக் கொலைபுரியாது விடேனென்றான். புத்தன் கபாலியை நோக்கி, ஐயனே! உனது விரத நீதியை விசாரிக்கப் புகுந்த ஒருவனைக் கொல்வது தருமமோ! தருமமாகாதே என்ன, கபாலியும் எடுத்தவாளை உறையிலிட்டான். அது கண்ட சீஷர் கபாலியைநோக்கி, எடுத்தவாளை உறையிலிட்டால் நாம் முத்தியடைவ தெப்படியென்றார்.

அதுகேட்ட கபாலி, கபாலாதிகள் தரித்துஈசனைப்போல உருக்கொண்டு கௌரியைப்போல ஒரு பெண்ணைத்தழுவுவதே முத்தியாகும்; சங்கரன் மொழிந்ததும் இதுவே யென்றான். அது கேட்ட சீஷர் மீண்டும் அவனை நோக்கி, துறவிகளுக்கு முத்தியே யன்றிப் பெண்களைச்சேர்ந்து இன்பம்அநுபவிப்பவருக்கு முத்தி உண்டென்பீராயின், யார் தாம் அதனை உண்மையெனக்கொள்வர் எனமறுத்தார். அதற்குக்கபாலி அதனை உண்மையென ஒப்பி மௌனஞ் சாதித்து, இவரை மய

க்குவதே தகுதியென்றெண்ணி, சிரத்தாய், இங்குவருக என்முன். அதுகேட்ட சாந்தி கருணையோடு கவன்று நின்முள். அதற்கிடையில் இறந்தவர்களுடைய எலும்பு மாலை மார்பிலே விளங்க ஒருகையிலே கபாலமும் மற்றொருகையிற் சூலமுந்தரித்துக் குரூபியாகிய இராசத சிரத்தை அங்குவந்து வெளிப்பட்டாள். அவளைக்கண்ட கருணை, இவள் இராசத சிரத்தை, உன் தாயாகிய சத்துவ சிரத்தையல்லள் என்று சாந்திக்குச் சொன்னுள். அப்பால் அவ்விராசத சிரத்தை கபாலியைத்தொழுது, யான் இங்குச்செயற்பாலது யாதென்று வினவ, கபாலி அவளை நோக்கி இங்கு இச்சீடரை உன் வசமாக்கக்கட வையென்முன். அவ்வாறே அவளும் அச்சீடரைக் கடைக் கண்ணுல் நோக்கிய அளவில், அவரும் ஒந்தி முற்பட்ட மயிலென்ன மனஞ்சுழன்று, தம்வயந் தப்பி, அவள் வசமாயினர். அப்பால் அச்சீடர்கள் கபாலியை நோக்கி, ஐயரே நன்று போதித்தீர், உமது மதத்தில் இன்பத்தைக் கைமேற் கனியாகக் கண்டோம், இதுபோல மற்றெம்மதத்திலும் நாம்கண்டதில்லை என்று பன்முறை அவனைப் போற்றி அன்பு கூர்ந்து, இதுகாறும் யாம் செய்துவந்த தீமைகளுக்கு யாதேனும் பிராயச்சித்தம் செய்தருளல் வேண்டுமென வேண்டி நின்முர். அதற்குக் கபாலியு மிசைந்து ஓர் ஓட்டை எடுத்து மந்திரித்து அதிலே கள்ளை நிறையப் பெய்வித்து அதைத்தன் வாயிலே வைத்துச் சிறிதுண்ட பின்பு அம்மிச்சிலை எடுத்துக் கபாலத்தோடுசிரத்தை கையிற்கொடுத்து இது தேவருக்குங் கிட்டத்தக்க தொன்றன்று, மூப்பை நீக்கி மரணத்தைப் போக்கிப் பாசபந்தத்தை அகற்றும். இவ்வாறு சிறந்ததாகிய இதனை நாம் உன்மீதும் ஏனைய சீடர்மீதும் வைத்த அன்பின் மிகுதியினுலே கொடுக்கின்றேம், உண்ணுக வென்முன். அதனை அச்சிரத்தை ஏற்றுத்தானும் சிறிதுண்டு சேடத்தைத் தன்னுற் றழுவப்பட்ட சீடருக்

குக் கொடுத்தாள், அதனைவாங்கி உண்ட சீடர் பேரா னந்த முற்றவராய்க் கபாலியை நோக்கி, முன் அநேக வேசியர் வாயெச்சிலை உண்டறிவோம், ஆயினும் இது போலும் அதுமதுரந்தந்ததில்லை. இதனைத் தேவர்கள் உண்பார்களாயின் தாம் முன்உண்டது அமிர்தமன்று ஆலாகலவிஷமேயா மென்பர். இச்சிரத்தையினதுமொ ழியிரசம் இதிற்கலந்தமையினாலோ அன்றி அவள் அதர சம்பந்தத்தினாலோ இம்மது இவ்வாறு தித்திப்பது அன்றி இம்மதுவி னியற்கை இதுவேயோ! இதற்கு மகிழின் கந்தமுமுண்டோ! எவ்வகைக் கனியையும் இது பழித்துவிட்டதே! இம்மதுவை நாம் புசித்தமாத் திரத்தில் உடம்பெங்கும் பரபரத்து உள்ளங்களித்து உருகி இன்பம் பெருகி ரோமஞ் சிலிர்த்து விட்டதே என்று கூறி, இஃது என்னை அற்புதமென்று கரங்கள் கொட்டிக் கண்டவர்கள் நகையாடுமாறு ஓர் ஆடலாடி னார். விழிசிவத்து, வாய்வெளுத்து, மொழிதழுதழுத்து, மெய் சோர்ந்து, தலைசுழன்று, கோபத்தோடு நகைத் து, அகங்களித்து, முகம் வேர்த்து எழுவார்; இடறி விழுவார்; இங்ஙனங் கண்டவர் நகைக்க மயங்கி ஆடிய இருவரும் மெய்ம்மறந்து மண்ணில் வீழ்ந்து கண்ணு றக்கமெய்தினர்.

அது கண்டகபாலி சிரத்தையைநோக்கி, நமது தொண்டர்கள் உடம்பயர்ந்து வீழ்ந்து உறங்குகின்ற கம்பீரத்தைப் பார்த்தனையா? என்று கூற, அவர்களும் வெறிதெளிந்து எழுந்து கபாலியைத்தொழுது ஐய னே! எனவிளித்து, நாம்புகுந்த இம்மதத்திலே உள்ள இன்பம் தேவரும் அடைதற்கரியது. மது என்று மனத்திலே எண்ணுகினும் அது கொடுக்கின்றஇன்பம் இணையற்றது என்றால், அதை உண்ணுமிடத்து அது தருகின்ற இன்பத்தை எவ்வாறு கூறுவோம்! அவ் வின்பத்தை இன்று உமது திருவருளா லடைந்தோம் என்றனர். அதற்குக் கபாலி அவர்களைப் பார்த்து,

தொண்டர்காள்! இவ்விதமாகச் சிறந்த மது யாவர்க்குங் கிட்டத் தக்கதொன்றன்று : இனி உமக்கு அட்டமா சித்தியும் பலிக்கும், தேவஸ்திரிகளும் நினைக்காமுன் வந்து உம்மைச் சேருவர் என்று கூறினன். அதைக் கேட்டுப் பக்கத்தில்நின்ற சமணன் கபாலியைநோக்கி, யாமிதுகாறும் வீண்காரியம் புரிந்து விட்டோம். உமக்கு அட்டமாசித்தியும் பலிப்ப துண்மையாயின், யாம் இதுகாறும் தேடி அலைந்த சிரத்தையை இங்கிருந் தபடியே வரவழைப்பீராக வென்றான். கபாலி அவனை நோக்கி, சிரத்தை இருக்கின்ற இடம் இது வென்று உமது கணிதநூலினு லுணர்ந்து சொல்வீராயின், உமக் கெதிரேதானே இவ்விடத்தில் வரவழைப் போம் என்றான். அதற்குச் சமணன், இக்கணத்திற் றனே சிரத்தை இருக்குமிடத்தைச் சோதிடத்தினுல் ஆராய்ந்து கூறுகிறேன், வாருமென்று அம்முறைப்படி எண்ணத்தொடங்கினன். அப்போது மானன் என்பவன் தருமனைத்தேடி அவ்விடத்தை அடைந்தான். அங்ஙனம் அடைந்த மானனைச் சமணன் நோக்கி, நீ இங்குவந்தகாரணம் யாதென்று வினவ, அவன்மோகராசனது ஏவலின்படி தருமனைப்பிடித்து விலங்கிட்டுப் போக வந்தேன். உலகத்தில் யானவனைத் தேடிப்போகாத இடமில்லை. அவ்வாறு தேடியும் அவன் இருக்கின்ற இடம் எனக்குப் புலப்படவில்லை. ஆதலால் சோதிடத்தில் ஆராய்ந்து அத்தருமன் இருக்கிற இடத்தை எனக்குக்கூறல்வேண்டும் என்றான். அதற்குச்சமணனும் இசைந்து, அவ்வாறே பார்த்து உனக்குக் கூறுகிறேன் சற்று நில் என்றான். அங்ஙனங்கூறிப் பல கரைகொண்டு, வாரம், திதி, நக்ஷத்திரம், இராசி முதலியவைகளை எண்ணிக் கிரகநிலைகளை ஆராய்ந்து, அவற்றின் பலன்களைநாடி, அவ்வழியே இருவரும் மறைந்திருக்கின்ற விடங்களை ஊகித்துணர்ந்து, கபாலியை நோக்கி ஐயனே, சத்துவசிரத்தை என்பவள் யோகினி

களது அருள்பெற்றுத் தபசிகளது உள்ளத்திலே மறைந்து வாசஞ் செய்கின்றாள். அப்பால் தருமன் இருக்கின்ற இடத்தை ஆராயுமிடத்து அவன் புண்ணியஸ்தலங்கள், தெய்வநதிகள், மலைச்சாரல்கள், தபோவநங்கள் முதலிய இடங்களி லெல்லாம் தன் தங்கையாகிய சிரத்தையைத் தேடிக் காணுமல் சரீரம்வாடி, இறுதியில் தவசியினது மனத்திலே அவளிருப்பதை யறிந்து, தானும் அங்கே சென்று வாழ்பவனுயினுன் எனப்புலப்படுகின்றது என்று கூறினுன். இவற்றைச் சமணன் கூறுதலும் பக்கத்திலிருந்து கேட்ட சாந்தியும் கருணையும், சேமித்து வைத்த வுரிய திரவியத்தை யிழந்து துன்புற்றுப் பின்னர் அதனைக்கண் டடைந்தவர்போலக் களிப்புற்றுச் சிரத்தையைக்குறித்து அவர் மனத்திலுண்டான ஐயம் நீங்கி, சோதிடத்திலே இவ்வளவு நுட்பமாக ஆராய்ந்துசொன்ன இந்தச்சமணன் நம்மையும் ஒரு போது ஆராய்ந்தறிவன்; ஆதலால் இவ்விடம் விட்டு நீங்குவதே நல்லகாரியமென்று இருவரும் அவ்விடம் விட்டு நீங்கினுர்கள். அப்பால் கபாலி சமணுதியரை நோக்கி, சிரத்தையும் தருமனும் யோகிநியரது அருட்காவல் பூண்டு தவசிகளது மனத்தில் வாசஞ்செய்வது உண்மையானுல் அங்கே போய் அவ்விருவரையும் பற்றவல்லார்யார்? ஆயினும் என் அன்னையாகிய வைரவியை வரவழைத்து, அவளை விடுத்து அவ்விருவரையும் கொணரும்படி செய்வேன் என்று கூறி, வைரவியை மனத்தில் நினைத்தான். அவளும் கபாலத்தையும் சூலத்தையும் கைகளிலே தாங்கி, எலும்புமாலைகள் பூண்டு, கண்களிலே நெருப்புப்பொறிசிந்த அட்டகாசஞ்செய்து பிரசந்ந மானுள். அதுகண்ட கபாலி அவள்பாதங்களில் வீழ்ந்துவணங்கி, தருமனையும் சிரத்தையையும் இந்தக்ஷணத்திலேசென்றுபற்றிக்கொணர்ந்து விடும்படி நீ திருவுளங்கொள்ள வேண்டுமென்று அவளைப் பிரார்த்தித்தான்.

சமணுதியர் சருக்கம் முற்றிற்று.

---

## 19. வைராவிவதைச் சருக்கம்.



அதுகேட்ட வைரவியென்பவள், விஷமெல்லாம் திரண்டு உருக்கொண்டு நின்றாற்போல எழுந்து நிமிர்ந்து, உலகங்களெல்லாம்குலுங்கும்படிநடந்துசென்று, சிரத்தையும் தருமனும் இருக்கின்ற இடந்தேடி அவர்களைக் கண்டாள். கண்டபிறகு இவர்களைப் பற்றுதற்குரிய வுபாயம் யாதென்று சிறிது நேரம் சிந்தித்து, முடிவில் இவ்வாறு செய்வேனென்று துணிந்து, தன் உருவைமாற்றி வேற்றுருவைத் தாங்கி, உயிர்களைக் கவரச் செல்கின்ற காலனைப்போலமாயமாகச்சென்று, யோகியரது மனத்திற் புகுந்து, அங்கிருந்த சிரத்தையையும் தருமனையும் ஒரு சேரப்பற்றி, சிறு பறவைக் குஞ்சுகளைப் பருந்து பற்றிக்கொண்டு ஆகாயத்திற் சென்றாற்போல வெளிப்பட்டாள். அப்போது அந்த யோகியரது மனமானது, வேடர் பறவையைப் பிடித்துக் கொண்டுபோக அதனால் வெறுமை யடைந்து பாழாகிய சேக்கைபோலவும் யானையுண்ட விளங்கனி போலவும் அந்து உண்ட நெற்பதர்போலவும் பாழாயிற்று. அதுநிற்க, மாயாரூபம் கொண்ட வைரவி அவ்விருவரையும் தன் இருகைகளிலும் இடுக்கிக்கொண்டு, சந்திர சூரியர்களைக் கவர்ந்தெழுகின்ற ராகுவைப் போல எழுந்து வாயுவேகமாகச் சென்றாள். சென்றபோது சத்துவ சிரத்தையானவள் அவ்வைரவிகையிலகப்பட்டபடியே பேர்வாள், யான்செய்ததீவினை யாதென்பாள், நடுங்கி உலைவாள், தருமன் பொருட்டுக் கவலைப்படுவாள், கருத்தழிவாள், சோர்வாள், துவண்டுவிழுவாள், காற்றாடிபோலச் சுழலுவாள். இவ்வாறு உடம்பு வெதும்பியும் மதிகலங்கியும் வெயர் வரும்பியும் கூந்தல் அவிழ்ந்தும் வளைகள் தகர்ந்தும் கைகள் நடுங்கியும் துன்புற்று நிற்க, அதனைக் கண்டவர், ஐயோ! இவளுக்கு இப்படிப்பட்ட துன்பம் வர

லாமோவென்று பெருமூச் செறிந்தார்கள் இப்படிப் புலிவாயிலகப்பட்ட மான்போல வருந்துகின்ற தங்கையைத் தருமன் பார்த்து, என் அம்மே! தளராதிரு என்று தேற்றி, வைரவியின் கைப்பிடியினின்றும் வழுவிப்புறத்திலே சென்று நின்று, அவள் போக்கைத் தடுத்து, என்கையி லிருக்கிற வாளினுல் இவளுடைய அவயவங்களைக் கொய்து கொல்லுவேன் என்றுமனத்திற் குறித்துக்கொண்டு நின்ருன். அப்போது மற்ருெரு கையினுல் இடுக்கப்பட்டிருந்த சிரத்தைபொறுத்தற்கரிய துன்பத்தை யடைந்து,யோகிநிகளை நினைந்து, என்னைக் காக்கும்படி உறுதி கூறிய உமது அருள் வாக்கு வீணுயிற்ருே? இந்தக் கொடுமையாகிய துராத்மாவின் சாமர்த்தியத்துக்கு அவள் முன்னே தனித்து நிற்கின்ற என் தமையனுகிய தருமனது பலம் ஒரு பொருளாகுமா? இதற்கு என் செய்வேன் என்பாள், அன்போடு என்னை வைத்து வளர்த்த பெரியோரே இது உமக்கு முறைமையோ என்பாள், யோகிநிகள் சதிசெய்வதும் உண்டோ என்பாள், விதியோ இது என்பாள், முன்ஞெருகாலத்திலே கஜேந்திரன் முதலைவாயில் அகப்பட்டபோது அவனைக் காப்பாற்றியருளினவன் நீயல்லவோ வென்று அரிபத்நியைக் கூவுவாள், துரௌபதை மானபங்கமடைய நின்ற காலத்திலே அவள் மானத்தை அன்றுகாத்தருளினவன் நீயல்லவா என்பாள், பிரகலாதனைக்காக்கும்பொருட்டுத் தூணிலே நரசிங்கம் தோன்றும்படி செய்தவன் நீயல்லவா? என் உடம்பு இவ்வாறு உருகியொழியப் பூமியில் யாவரயணைந்து சுகித்திருக்கின்றனையோ, இந்தக் கொடியவள் என்னைத் தன்கையிலிடுக்கி என் எலும்புகள் நெரிய வருத்துகின்ற இச்செய்தியைப் பாராதிருப்பது என்ன பராமுகமோ என்பாள். இப்படிப் புலம்புகிற சிரத்தையின் எதிரில் ஒரு சோதி தோன்றிற்று. அந்தச் சோதியானது தருமனது தடையையும் சிரத்தையின் தடை-

யையும் விடுவித்து வைரவியைக் கொன்று, தருமன் முன்னே வீசியெறிந்துவிட்டுப் போயிற்று. இச்செய்தியை நோக்குமிடத்தில், பொல்லாதவர் நன்மையையடைவதும் நல்லோர் தீமையை யடைவதும் பழவினையால் ஒருபோது நேர்ந்தாலும் நெடுங்காலம் நில்லாது என்கிறபெரியோர் வாக்கியார்த்தத்தை நன்கு விளக்காநின்றது. இப்படி வெல்லுதற்கரிய வைரவியானவள் இறந்ததை நோக்குமிடத்தில், இதுபோலவே இனிமோகனுடைய வாழ்வும் அழியுமென்பதற்குச் சந்தேகமில்லையென விளங்குகின்றது. அதன்பிறகு சிரத்தையும் தருமனும் இரவெல்லாம் நித்திரைசெய்து நித்திரை நீங்கினவுடன் எழுந்து வருபவர்போல வரக்கண்ட தபோதனர்களெல்லாம் பேராநந்த மடைந்து அவர்களைத் தொடர்ந்தார்கள். அதுகண்ட அவ்விருவரும் அரிபத்தியே எம்மைக் காத்தது, அவர் அருளைப் பெற்ற நமக்கு எவ்வகைத் தீமையுண்டானாலும் அந்தத்தீமை விளக்கை யெதிர்த்த விட்டில்போல மாய்வது உண்மையென்பது இன்று விளங்கக்கண்டோம் என்று சொல்லி யோகினியரை நாடி விரைந்து சென்றார்கள்.

வைரவிவதைச்சருக்கம் முற்றிற்று.

---

## 20. சிரத்தை மீட்சிச் சருக்கம்.

அவ்வாறு சென்ற இருவரும் அரிபத்தி யென்னும் யோகினியின் பாதங்களை வணங்கி, தீயவளாகிய வைரவி கையிலகப்பட்டு புலிவாயில் அகப்பட்ட மான் போலக் கலங்கி நின்ற எம்மை உன் கருணை நோக்கத்தாலே ரக்ஷித்தருளினாய், உன்னைப்போலத் துன்பத்தை நீக்குவோர் யார் என்று புகழ்ந்தார்கள். அதனைக் கேட்டு மகிழ்ந்த யோகினி அவ்விருவரையும் நோக்கி, யானே விவேகனுக்கு மணம் செய்வித்து அவனுடைய

பகைவரை வேரறுத்து அவனுக்கு முடியுஞ்சூட்டிவைப் பேன் ஆதலால் நீங்கள் எதற்கும் அஞ்சாதிருங்கள் என்றுள். அதுகேட்ட சிரத்தை உன்னை ஆதரவாகக் கொண்டயான் இனித்தளரேன், யான் அஞ்சத்தகுவ தும் யாதுமில்லையென்றுள். மறுபடியும் யோகினியான வள் அவளைநோக்கி, இப்போது நீயடைந்த துன்பத்தை நினைந்து எடுத்தகாரியத்தைச் சோரவிடாது அதனையே நாடிச் செல்வாயாக,உன்பிறகே நானும் துணையாகவரு வேன் என்று சொல்லி, அவளை உபநிடதையிடம் அனு ப்பினுள். பிறகு தருமனை நோக்கி, நீயும் உன் காவலிற் போகக்கடவை யென்றுள். அடளிடத்தில் விடைபெற் றுச்சென்ற தருமன் சிரத்தை என்னுமிருவரும் சிறிது தூரம் கடந்து செல்லுகையில்,சாந்தியென்பவள் வந்து சிரத்தையைப்பேரன்போடு கட்டித்தழுவினுள். கருணை மாதும் தனது நாயகனுகிய தருமனைத் தழுவினுள். அவர்களும் முறையே எதிர்தழுவித் தமதுகவலைதீர்ந்து களிக்குமளவில், கருணையென்பவள் தனக்கும் சாந்திக் கும் நடந்தவற்றை யெல்லாம் எடுத்துச் சொன்னுள். அதைக்கேட்ட சிரத்தை பெருமூச்செறிந்து மீண்டும் சாந்தியைக் கட்டித்தழுவி, என் கண்மணீ! இவ்வளவும் வருந்தினையோ வென்று உச்சிமோந்து, கண்ணீரில் முழுக்காட்டி, கவலையும் களிப்புமுடையவளாய்ச்சிறிது நேரம் அடங்கியிருந்து, யோகினியின் கிருபையிருக்கிற வரைக்கும் நமக்குத் துன்பம்வரினும் அது சூரியனைக் கண்ட பனிபோல நீங்கும் என்கிற துணிவினுல் தேறி னுள். அப்பால் தருமனைநோக்கி, நீயும் உன்தேவியோடு உனது நகரத்திற்குச் செல்லக்கடவை, நானும் என் புதல்வியாகிய சாந்தியும் உபநிடதையிடம் போவோ மென்று சொல்லி அவர்களைப் பிரிந்து மகளுடன்விரை ந்து நடந்தாள். அப்படி நடந்தவள் சத்தியலோகத்தை யடைந்து வாணியைக் கிட்டிக் கைகூப்பிவணங்கி நின் றுள். அதுகண்ட வாணி அவளை உபசரித்து உன்

வருகைக்குக் காரணம் யாதென்று வினவ, அதற்குச் சிரத்தை வாணியை நோக்கி, அம்மே! யான் விவேகராஜன் விட்ட தூதாக இங்குவந்தேன், என்பேர் சிரத்தை, உன் புதல்வியாகிய உபநிடதையை விவேகராஜன் மணம்புரியக் கருதினன் ஆதலால் அவளை நீ அந்த விவேகராஜனுக்கே தரல்வேண்டும் என்றாள்.

அதுகேட்டவாணி அவளைநோக்கி, விவேகவேந்தனுக்குச் சுமதியென்னும் மனையாளிருக்கவும் நீ பெண்கொடுக்கவேண்டுமென்று கேட்பது அறியாமையாலல்லவா? மனையாளிருக்க வேறொரு பெண்ணைக் கொள்வாருமுண்டோ? அப்படி உண்டாயினும் நாங்கள் அது செய்வது தகுதியாமோ? அன்றி யாம் பெண்கொடுத்தோமாயினும் இரண்டு மனைவியரும் மனமொத்து வாழ்வாரோ என்று வினவி மறுத்தாள்.

அதுகேட்ட சிரத்தை அந்த வாணியைநோக்கி, சுமதிதேவி தன்வயிற்றில் புத்திரோத்பத்தியில்லாமையாலும், தனது நாயகன் துணைவலியின்றிப் பகைவரால் நலிகின்றதனாலும், பின்வருவதை முன்னமே அறியுந் திறமுடையளாதலாலும், தன் னாயகன் இரண்டாம் விவாகம் செய்துகொள்வது ஆவசியகந்தானென்று மனம்பொருந்தி யிருக்கிறாள். சிவபெருமானது இடப்பாகத்தை இடமாகக்கொண்டருளிய உமாதேவி அவர் தலையை இடமாகக்கொண்டருளிய கங்காதேவியுடன் மனம்பொருந்தி அன்பாயிருக்கவில்லையா? திருமாலின் மார்பை இடமாகக் கொண்டருளிய லக்ஷ்மீதேவி தன்னாயகனைப் பின்னே மணஞ்செய்துகொண்ட பூமிதேவியோடு வேற்றுமையின்றி வாழவில்லையா? ஆதலால் உத்தமியாகிய சுமதியும் உன் பெண்ணுக்கு மேம்படாதவளாயினும், அவளோடு உயிர்க்குயிராய் அன்புகொண்டொழுகுவளென்பதற்குச் சிறிதும் ஐயமில்லை யென்றாள்.

இந்தவார்த்தைகளைக் கேட்ட வாணி அகமகிழ்ந்து, முகமலர்ந்து, தனது நாயகனுகிய பிரமனுக்கு இந்தச் செய்தியெல்லாஞ் சொல்லி, பிறகு தன் மகளுக்குஞ் சொல்லி, அவ்விருவர் மனக்கருத்தையும் உடன்பாட்டையும் பெற்று மீண்டுவந்து, சிரத்தையை நோக்கி, ஆர்பெற்ற நன்மகளும் என்மகளுக் கிணையாக மாட்டாள், அவளுக்குத் தகுந்த சீர்பெற்ற நாயகனும் அந்த விவேகவேந்தனே யன்றி வேறில்லை. ஆதலால் உன் கருத்துக் கிசைந்தேன். இனி நீ சிறிதுநேரமும் தாமதியாமல் விரைந்துசென்று விவேக வேந்தனை யடைந்து, அவனை இங்குக் கொணர்வாயாக என்றுள்.

அந்தமொழியைச் சிரமேற்கொண்ட சிரத்தை வாணியை வணங்கி விடைபெற்றுத்தன் புதல்வியோடும் அங்கு நின்றும் நீங்கி, அகத்துமகிழ்ச்சி முகத்து நிகழ்ச்சியாக விவேகவேந்தன் இருக்குமிடத்தை நோக்கிச் சென்று அவ்விடத்தை யடைந்தாள். அவளை வழியிற் கண்டவர்கள் பார்த்து, வந்து சேர்ந்தனையா என்று மகிழ்ந்து அவளைத் தழுவிக்கொள்வார் சிலர், உன்வரவைக்காட்டிய இந்தத்தினம் நற்றினம் என்பார் சிலர், உன்னையாரோ பிடித்துச் சிறையிட்டாரென்று கேள்விப்பட்டு நொந்தநோய் இன்றுதான் தீர்ந்ததென்பார் சிலர், முன்னே நாம் கேள்விப்பட்ட வார்த்தைகளெல்லாம் பொய்யாய்விட்டனவென்பார்சிலர், இவள்அங்கே சிறைப்பட்டு மீண்டதுண்டானல் அவளுடைய முகம் பூர்ணசந்திரன்போல் விளங்குமோ என்பார் சிலர், சாந்தியானவள்போய் இவளை யெவ்விடத்துக் கண்டனளோ என்பார் சிலர், இவள் மனவருத்தம் ஒழிந்ததே நமக்குப் பெரும் பாக்கியம் என்பார் சிலர். இவ்வாறு யாவரும் தங்கள் தங்களுக்குத் தோற்றினவற்றையெல்லாஞ் சொல்லி மிகுகளிப்படையா நிற்க, சிரத்தையும் விவேகவேந்தனை யடைந்து அவனை வணங்கினுள்.

அதுகண்ட விவேகவேந்தன் அவளை வாழ்த்தி, நீ யிவ்விடம்விட்டு நீங்கின நாள்முதலாக இன்றளவும் நடந்தவற்றையெல்லாம் எனக்குச் சொல்வாயாக என்றுகேட்க, அவளும் நடந்தவை முழுதும் ஆதியோடந்தமாகச் சொன்னாள். விவேகன் அவளடைந்த துன்பத்தைக் குறித்துத் துக்கித்து, பிறகு அவள் முடித்த காரியத்திற்காக மனமகிழ்ந்து மெச்சி, அவளை நோக்கி என் தங்காய், அரிபத்தி, சிவபத்தி என்னும் யோகினிகளுடைய அருள் நம்மிடத்திலுண்டு. புண்ணிய ரூபியாகிய நீயும் நம்மிடத்திலிருக்கிறாய், தருமனும் நம்மிடத்தில் இருக்கிறான்; ஆதலால் சுமதியோடுகூடி யான் ஆராய்ந்து செய்யுங்காரியம் முடியாமற் போவதில்லை. பெருங்கடலிலே மரக்கலமேறிச்செல்லும்போது அடைந்த துன்பமுழுதும் மனவலியினால் பொருள்படுத்தாமல், கடலைக் கடந்து நாட்டை யடைந்து அங்கே அருமையாகிய திரவியங்களைச் சம்பாதித்து மீண்டுவந்து அந்தத்திரவியங்களை வறியோருக்குத் தருமஞ்செய்வார்போல, நீ வருந்திச்சென்று மீண்டுவந்து செய்த இந்த உதவிக்கு யான் செய்யத்தகுந்த கைம்மாறொன்றில்லை. இதனை நீ சொல்லுகிற அளவில்தானே எனக்கு இவ்வளவு மகிழ்ச்சியுண்டாயிற்றே! இனி நான் உபநிடதையை மணம்புரிந்து மோகனுதியரை வெல்லுவதில் ஐயமும் இல்லையென்று இவ்வாறு விவேகவேந்தன் அவளுக்குப் பல இன்சொற்கள் கூறி மனமகிழ்வித்துத்தானும் மனமகிழ்ந்திருக்கும்போது, நியாயன்வந்து அவ்விடத்தையடைந்தான்.

சிரத்தைமீட்சிச்சருக்கம் முற்றிற்று.

---

## 21. விவேகன் போதகரை வரவழைத்த சருக்கம்.

அவ்வாறு வந்து வணங்கி நின்ற மைத்துனனாகிய நியாயனை விவேகவேந்தன் நோக்கி, நம்பகைவனாகிய

மோகனும்அவன் சேனைகளும் செய்கிறகாரியங்களையும், நமது பக்கத்தார் தெய்வத்தலங்கள் தோறுஞ்சென்று அங்கிருந்து செய்யுந் தொழில்களையும் எனக்குச்சொல்லக்கடவையென்று பணிக்க, அவனும் சொல்லத்தொடங்கினன். ஐயனே, நமது படைவீரராகிய நிருபகன் முதலானோர் தெய்வத்தலங்கள் தோறும் வேற்றுருத்தாங்கிச் செய்கிற செய்திகளை ஒற்றாலறிந்த மோகராஜன் கலியனையும், சாருவாகனையும் அழைத்து, கலியனைத் தெய்வத்தலங்கள் தோறுஞ்சென்று நம்மவரைப் பற்றி வருமாறும், சாருவாகனை உலகமுழுதுஞ்சென்று தான் கற்ற மித்தியாபோதனை களைப்பு கட்டிவருமாறும் அனுப்பிவிட்டுத்தானும் க்ரசியை யடைந்தான். அங்கே சத்துவசிரத்தை உபநிடதையிடம் தூதுசென்ருள் என்பது கேட்டு, அவளைத்தடுக்கும்பொருட்டு மிச்சாதிட்டியையும் புத்தன் முதலானோரையும் அனுப்பினன். அப்பால், சோமநாதத்திலே தருமன் செய்கின்ற வீரச்செய்கைகளை மோகன்கேள்விப்பட்டு, அவனையும் விலங்குபூட்டிக்கொண்டு வரும்படி மாநனை அனுப்பினன். இப்படி மோகனேலேவப்பட்டுச்சென்றவருள்ளே கலியன் என்பவன் தெய்வத்தலங்கள் தோறுஞ்சென்று நம்மவரை வருத்தத்தொடங்கியபோது, அவனை அரிபக்தி சிவபக்தி என்னும் யோகினிகள் எதிர்த்துச்சாடியோட்டிவிட்டார்கள். ஓட்டப்பட்டகலியன் நாணம் மேற்கொண்டு மோகனை யடைந்து, அரி சிவபக்தியரது அருள் நம்பகைவர்க்கு மிகவும் உண்டாயிருத்தலால் அவரை வெல்லுதல் யார்க்கும் அரிதென்று கூறினன். அதுகேட்ட மோகன் ஏவலாளரை யழைத்து, காமன் முதலிய படைவீரரையெல்லாம் கொண்டுவாருங்களென் றனுப்பினன். அந்தச்சொல்லைக்கேட்ட காமனுதியர் மோகனிடஞ்செல்ல வழிக்கொண்டார்கள். மற்றைச் சமணதியர் செய்தி இந்தச் சிரத்தையின் வாயிலாகக் கேட்டாயல்லவோ?

சாருவாகன் மதமும் இனித்தலையெடுப்பதில்லை; ஆத லால் இனிச்செய்யத்தகுந்ததாகிய காரியம் உன் திரு மணமே; அதற்குத் தடை யாதேனுமுண்டானால் திரு வுளம்பற்றல் வேண்டுமென்று சொல்லி முடித்தான். முன்னேசிரத்தைவாயிற்கேட்ட அமிர்த வசனத்துடன் இந்தநியாயன் சொன்ன இனியமொழியும் விவேகனது செவிவழியே புகுந்து அவன் மனத்திலுண்டாகிய கா மாக்கினிக்குநல்ல நெய்யாக, அந்தக் காமாக்கினி சுவாலி த்துஓங்கியெழுந்தது. அப்போது அவன் மந்திரத்தலைவ ராகியஎண்மருள் ஒருவனாகியநியமன்என்பவன்எழுந்து கைகுவித்து விவேகராஜனை வணங்கி, அண்ணலே! தெய்வகடாக்ஷத்தால் மோகனாதியர் வலிகுறைந்தார் கள் என்பதில் ஐயமில்லை, நம்மவர்கள் எந்தத்தலங்க ளிலும் வலிமிகுந்து வெளிப்படலுமாயினர், கொடி யோராகிய காமன், கோபன், மதன், மச்சரன் என் போரும் நெடுங்காலமாகத் தாம்தாம் பற்றிநின்ற ஸ்த ல்ங்களையும் விட்டு நீங்கினார்கள், அப்படி நீங்கினவர் கள் மோகவேந்தனை யடைந்து போருக்கு ஆயத்தமா குமுன்பே நீ உபநிடதையை மணந்தருளல் வேண்டும், ஆதலால் நிருபகன் முதலாகிய நம்மவர் யாவரையும் அழைத்துவரும்பொருட்டு அவரவரிடங்களுக்கு ஒற் றரை யனுப்பவேண்டும் என்றான். அதைக்கேட்ட விவேகராஜனும் நன்று சொன்னாயென்று மகிழ்ந்து அவனைநோக்கி, ஒற்றர்கையில் திருமுகங்கள்கொடுத் து அவரை அவ்வவ்விடங்களுக் கனுப்பி நிருபகாதி யரை விரைவில் வரவழைக்கக் கடவையென்றான். அப் படியே அவனும் ஒற்றரைக்கூவி, இந்த ஓலைகளைக் கொண்டு விரைந்துசென்று நிருபகன் முதலானோரை யடைந்து அவர்களைஇங்கேயழைத்துவாருங்களென்று கட்டளையிட்டான். அந்த ஒற்றரும் அவனது கட்டளை யைச் சிரமேற்கொண்டு, வாயுவினும் அதிவேகமுடைய வராய்ச் சென்று நிருபகாதியரை யடைந்து திருமுகங்

கலைக்கொடுத்து வாய்மொழியாகவும் செய்திசொன்னார்கள். அந்தத்திருமுகங்கண்ட நிரூபகாதியர் மழைமுகங்கண்ட பயிர்போல்விளங்கி, ஆடுவார் பாடுவாராகி பேராநந்தப் பெருஞ்சோதியைச் சும்மா பீடித்துத் துன்புறுத்திய பாவங்கள் தாழவும் நம்மவர் வாழவும் காலம் வந்ததேயென்றுகளித்து, பரஞ்சோதியாகிய தமது பாட்டனாரை வாழ்த்தி, நிரூபகன், பொறையன், நிச்சயன், சத்தியன், தருமன், சமன், தமன், சத்துவன், அவிரோதன், தவன், விராகன், சந்தோஷன் முதலான யாவரும் தத்தம் மனைமக்களோடு வழிக்கொண்டு காதல்முன்செல்லத் தாம்பின்சென்று விவேகனையடைந்து வாழ்த்தி, அவன்பாதங்களை வணங்கினார்கள். விவேகனும் அவர்களை முகமலர்ச்சியோடு நோக்கி ஆசிகூறி, சூழ உட்காரும்படிநியமித்து, நமது மனைமக்களும் நீங்களும் தீங்கின்றி வாழ்கின்றீர்களா என்று வினவ, அவர்களுள்ளே தலைவனாகிய நிரூபகன் எழுந்து வணங்கி அண்ணலே! ஆத்யந்தமாக யோகிநியரது அருளும் உன் ஆதரவும் எம்மிடத்துள்ளவன்றோ, அப்படியிருக்க எமக்குக் குறைவற்ற வாழ்வு அரிதாமோ? என்றான். அந்தமொழியைக் கேட்ட விவேகன் மிகவும் மனமகிழ்ந்து, சிரத்தையைத் தூதுவிட்டது முதல் வாணி தன்மகளைக் கொடுக்கச் சம்மதித்தவரைக்கும் நடந்த செய்திகளெல்லாம் எடுத்துச்சொல்லி, தான் மணமுடிக்க யத்தினஞ்செய் திருப்பதையும் விளங்கக்கூறினான். அதுகேட்ட யாவரும் பேராநந்தமுடையவராய் விவேகனை நோக்கி, இறைவனே! உன் மணக்கோலத்தை நாம் காண்பதே எங்களுக்குப் பெறுதற்கரிய பெரும்பயனாகும். அந்தப்பயனை யெமக்குத தருதற்கு நீ தாமதிப்பது என்னென்றார். அது கேட்ட விவேகன், நன்று கூறினீர்! மணத்துக்கு வேண்டுவனவெல்லாம் சேகரிக்கக் கடவீர் என்று சொல்லித்தானும் மணக்கோலஞ் செய்வானாயினன்.

விவேகன் போதகரை வரவழைத்த சருக்கம்

முற்றிற்று.

---

## 22. உபநிடதை வேள்விச் சருக்கம்.



தன்னைக்கோலஞ் செய்துகொள்ளத் தொடங்கின விவேகன், சற்சங்கம் என்கிற பல ஆபரணங்களை யணிந்து, அந்தச் சாது சங்கசகவாசம் என்கிற நல்ல பரிமள சந்தனாதிகள் உடம்பின்மீது பூசி, விஷ்ணு சரிதாமிர்தம் சிவ சரிதாமிர்தம் என்கிற இரண்டின் கேள்வியாகிய ரத்ந குண்டலங்களை இரண்டு காதுகளிலும் தரித்து, அழகிய மார்பில் வியாச சூத்திரம் என்கிற செம்பொற் பூணூல் தரித்து, புலவரது இதயங்களென்கிற வண்டுகள் மொய்க்கப்பெற்ற மலர்தல் குவிதலில்லாத நல்லறிவென்கிற மலர்மாலை யணிந்து, தீமைகளை யார்தனக்குச் செய்யினும் அவற்றை உடனே மறந்து விடுதலாகிய பாதுகையைப் பாதங்களில் தொடுத்து, பிறர் செய்யும் அற்ப நன்றியையும் மறவாமையாகிய ரத்நகிரீடம் கவித்து, கொலைத்தொழிலையுடைய பகைவர்வந்து உயிரைக் கேட்டாலும் மனவைரத்தை யொழித்து ததீசிமுநியைப்போல அன்போடு உடலுயிர்களைக் கொடுத்தலென்கிற பொற்கங்கணத்தைக் கையிலே தரித்து, மோகனதியர் வலியை நீக்கும் வன்மையென்கிற வாகுவலயத்தைத் தோளிற் பூண்டு, உலகத்திலுள்ளவர்க்கு அபயப் பிரதானஞ் செய்தலென்கிற மோதிரங்களை விரலிலே யணிந்து, நித்திய நைமித்தியங்களைக் கைவிடாது பருவத்தில் முடித்தல் என்கிற நெற்றிப் பட்டங்கட்டி, பெருங்குணமாகிய வெண்பட்டாடையைத் தன் அரையில் விளங்குகின்ற உத்தரியத்தோடுஞ் சேர்த்துக்கட்டி, அரிசிவன் என்பவர் மீது வைத்த அன்பும் அது காரணமாக அவர்கள் திருவருள்கண்டு பொழியும் ஆநந்தக் கண்ணீரும் பிறர் துன்பங்கண்டு சகிக்கலாற்றாது நெஞ்சம் நெகிழ்ந் துருகிச் சொரியும் கருணைக் கண்ணீரும் ஆகிய முத்துமாலையை மார்பிலணிந்து, பழிபாவங்கட்கு அஞ்சி நாணுகிற

நாண் என்னும் அரை நாணை இடையிலேதரித்து, மயக்கமாகிய இருளைக்கடிந்து உயர்ந்தோங்குவதாகிய வியாபகம் என்னும் சந்திரவட்டக்குடை நிழற்கீழிருந்து, விசாரணை மாதும் வாஞ்சைமாதும் இருபக்கங்களிலும் நின்று சாத்திரங்களென்கிற வெண்சாமரத்தை வீசிக் கொண்டிருக்கவும், வேதமாகிய குதிரையும் சத்தியன் என்னும் பாகனும் செலுத்துகிற தத்துவமாகிய தேரிலேறி, பத்தியாகிய குலஸ்த்ரீகளின் பார்வை எல்லாப் பக்கங்களிலும் பொருந்த, சுத்திக்கு உயிர்போன்றவளாகிய சுமதி பின்னே தொடர்ந்து செல்ல, மோக்ஷவாஞ்சை ஒரு பக்கத்தில் வர, எந்தத்திக்கிலும் நிருபகன் முதலிய இனத்தார் சுற்றிவர, இயமன் நியமன் முதலிய எண்மரும் தன்பக்கத்தில் வந்து நெருங்கவும், ஆசாரன் அத்துவிதன் சுசீலன் தருமன் முதலானோர் சூழ்ந்துவர, ஒரு பூர்ணசந்திரனைச் சூழ்ந்துசெல்லுகிற பல நக்ஷத்திரங்கள்போல நிவிர்த்தி கருணை முதிதை உபேக்ஷை மயித்திரி நீதி முதலாகிய மாதர்கள் நல்வழியில் நடந்துவர, இத்தன்மையவாகிய பல சிறப்புக்களோடு விவேகராஜன் எழுந்தருளுகிற மேன்மையை ஆலோசித்து மனமகிழ்ந்த பிரமன் வாணிக்குச்சொல்லுதலும், அவள் தன் மகளாகிய உபநிடதையை அலங்கரிக்கும் விதத்தைச் சொல்லுவோம். எப்படியெனின்:

தாரகமே திருமுகமாகவும், நாதமே நீண்ட கூந்தலாகவும், சுருதிகளே காதுகளாகவும், விதியே நாசியாகவும், அர்த்தவாதமும் நீதியுமே இருகருங் கண்களாகவும், சற்குண நிர்க்குணங்களே இரண்டு கைகளாகவும், சிவபரங்களே தனங்களாகவும், அறிதற்கரிய மகாவாக்கியமே சிற்றிடையாகவும், அருமையாகிய பிறகரணங்களே மலரடிகளாகவும், பஞ்சகோசங்களே பஞ்சப்பிராணன்களாகவும், சச்சிதாநந்தமும் உபபத்தியுமே மனமும் சிவனுமாகவும், உபக்கிரமம் உபசங்காரம் என்பவைகளே நடையாகவும், மீமாஞ்சையும் மகாவாக்கிய

மூமே மென்சொல்லும் கண்டமுமாகவும், அகரமுத லாகிய வடமொழி ஐம்பத்தோ ரக்ஷரங்களே மற்ற அவயவங்களாகவும் வாணிதேவி தான் பெற்றெடு த்த உபநிடதையைக் கிதையென்னுந் தோழியைக் கொண்டு பேருவகையென்னுந் தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்வித்து, பக்குவமென்னும் பட்டாடை யுடுத்தி, செந்தொடர் மொழியாகிய மாலைசூட்டி, வருணமென் னுங் கலவைச் சந்தநம் பூசி, அலங்காரமாகிய திருப் பணிகளைப்பூட்டி, பிரமாணமாகிய மையைக் கண்களில் எழுதி, விந்துவென்னுந் திலகத்தை நெற்றியிலிட்டு, சுத் தியும் பூர்வஞானமுந் திரண்டுருப் பெற்ற உபநிடதை க்கு இவ்வாறுகிய பல அலங்காரங்களைச் செய்தார்கள். இச்செய்திகள் அந்தப்புரத்தில் நிகழாநிற்க, அத்தாணி மண்டபத்திலிருந்த பிரமனும் விவேகனுக்கு இருப்பி டம் அமைக்கவேண்டி, மாதவரது உள்ளமாகிய தாம ரைமாளிகையும், அதனுள்ளே அன்பென்னும் மெல்ல ணையும், கற்கப்படுகிற கல்வியாகிய கலைவிதாநமும், சொற்றொடராகிய பூமாலைத் தொங்கலும், கருணை யென்னுந் தீபமும், இன்னும் வேண்டியவற்றையெல் லாம் அமைத்து, விவேகனது வரவை யெதிர்பார்த் திருக்கும்போது, சிரத்தை மாது சென்று பிரமனை வணங்கி விவேகனது வரவைக்கூறினள். அதுகேட்ட பிரமன் முகமலர்ந்து தனது முதன் மந்திரியாகிய அன்பைநோக்கி, நீ விவேகவேந்தனை யெதிர்கொண் டழைத்து வாவென்றுன். அந்த அன்பும் அவ்வாறே சென்று உபசரிக்க, விவேகராஜனும் நிரூபகன் முதலா கிய தன் பரிவாரங்களோடு நகரை யடைந்து பிரம னது பாதங்களை வணங்கினன். அப்போது பிரமனும் முனிகணங்களும் பிறரும் ஆசிர்வாதம் செய்தார்கள், அது நிற்க,

விரத்தி, விராகன், தருமன், கருணை, சமன், சாந் திமுதலியோரும், இயமன் நியமன் முதலிய பேர்களும்,

விவேகனுடன் பிறந்த தங்கையரும் தாயாரும் ஏனைய ரும் திருமண மண்டபச்சிறப்பை நோக்கி மிகவுமன மகிழ்ந்து பரவசப்பட்டார்கள். நிர்மலவொளியாகிய தற்பரம் பொருளிலே அருவமாகியும், அயன் அரி அரன் என மூவுருக்கொண்டமையும், அயன் நான்கு திருமுகங்களோடுகமலாசநத்திலே இராசதகுணத்தோ டெழுந்தருளி, சராசர ஜீவராசிகளெல்லாவற்றையும் படைத்தமையும், சங்கசக்ரபாணியாய்ச் சத்துவகுணத் தோடு திருப்பாற்கடலிலே யெழுந்தருளிய அரியான வர் அந்த அயன்படைத்த உயிர்களையெல்லாம் காத்து வருகின்றமையும், அந்த அரியே அடியார்கள்பொருட் டுத் தசாவதாரமெடுத்தமையும், பார்த்தனுக்கு இப்பி றப்பின் தன்மை யிதுவென்று தெரிவிக்கும்பொருட்டு விசுவரூபங்கொண்டு உண்மையாகிய அர்த்த விசேஷங் களையெல்லாம் பகவத்கீதாரூபமா யருளிச்செய்தமை யும், தேவர்களுக்கு அமிர்தம் பகிர்ந்தமையும் முதலிய பல திறங்களும், அப்பால் அரன் சூலம் மான்மழுக் களைத் தாங்கி, தாமதகுணத்தோடு கைலையில் எழுந் ருளி, தேவர்குறைநீக்க விஷபாநம் பண்ணினமையும், காலனைக்காய்ந்து மார்க்கண்டனைக் காத்தருளினமை யும், காமனை யெரித்துச் சநகாதியர்க்கு உபதேசித்தரு ளினமையும், அப்பர்முதலிய மூவருக்கும் திருவாதவூ ரடிகளுக்கும், அறுபத்துமூன்று நாயன்மாருக்கும் முத்திகொடுத் தருளினமையும் ஆகிய இவைபோன்ற திருவிளையாடல்களையெல்லாம் நினைந்து நினைந்து, இவர் கள் திருவருளிருந்தபடியென்னை யென்று மனமுருகிப் பரம்பொருளை நாடத்தொடங்கினர்கள். அதற்கிடை யில், அகண்டபரிபூர்ணமாகிய பரம்பொருள் திருவுள மிரங்கித் திருவருளே திருமேனியாகக்கொண்டு சற்கு ருவாய் அங்கேவந்தார். அங்கிருந்த யாவரும் நெருப்பி லிட்ட மெழுகுபோலுருகி அவரை வணங்கினர்கள். வணங்கின பிரமன்முதலானோரையெல்லாம் உட்காரும்

படி நியமித்து, தாமும் ஓராசநத்திலெழுந்தருளி, பிரமனை நோக்கி மணவேள்விக்கு வேண்டிய திரவியங்களோடு உன் கன்னியையும் இங்கே கொண்டுவாவென்றார். அதுகேட்ட பிரமன் யாகத்துக்கு வேண்டுவனவெல்லாம் அமைப்பித்துவிட்டு, கிதையை விளித்து உபநிடதையை இங்கே யழைத்துவாவென்றான். அந்தச்சொல்லைச் சிரசா வகித்துச்சென்ற கிதையானவள் வாணியை யடைந்து, நமது தலைவன் உபநிடதையை யழைத்துவரச் சொன்னான் என்று சொல்ல, அவளும் தன் புதல்வியாகிய உபநிடதையோடும் வேதமாதரும் சாஸ்திரமாதரும் சூழப் புறப்பட்டாள். முன் சென்ற உபநிடதையின் பாதங்களைக்கண்டு தாமரைகள் நாணவும், நடையிலே அன்னம் அன்னம் எனச் சிலரும் அல்ல அல்ல எனச்சிலரும் சொல்லாநிற்கவும், வஞ்சிக்கொடிபோ லெழுந்து அசைந்து புஷ்பப்பாயலின்மேல் நடந்து சபையையடைந்து, மயில்போலநின்று குருபாதங்களை வணங்கி, இயல்பாகிய நாணத்தால் முகங்கவிழ்ந்து தந்தைபக்கம் போய்நின்றாள். அங்கிருந்த முனிவரர் அவள் வடிவைக்கண்டு சித்திரப்பாவை போல அசைவற்று நின்றார்கள். பெண்கள்கண்டு மதுவுண்டு மயங்கியவண்டுகள் போலானார்கள். இவ்வாறானால் இனி விவேகன்செய்தி சொல்லவும்வேண்டுமோ? யான் எனது என்பவை நீங்கி, அவனலாதில்லையென்னும் அறிவை யுண்டாக்குதற்கு அம்மாதன்றி யில்லையென்பது யாவர்க்கும் வெளியாகவே, தேசிகனார் பிரமனை யழைத்து நீ காலைச் சுத்திசெய்து கொண்டு வாவென்று கட்டளையிட்டு, விவேகனை யழைத்து நீ இந்த மணப்பீடத்தில் உட்காரக் கடவையென்று அமைத்து, அப்பால் பிரமன்வந்தவுடனே அவனைநோக்கித் தாரைவார்ப்பாயென்று கட்டளையிட்டு, அவன் அப்படியே செய்தபிறகு ஞானமாகிய ஓமாக்கினிமுன் வைக்கப்பட்ட மாங்கல்ய சூத்திரத்தை விவேகன் கையிற்கொடு

த்துக் கன்னிகையின் கழுத்திற் பூட்டுவாயாகவென்று, பலவகை வாத்தியங்கள் முழங்கவும், தேவர்கள் மலர் மழை பொழியவும், மங்கல்யதாரணம் செய்வித்துப் பாணிக்ரஹணமும் செய்வித்தருளினர். அப்பால் மற்றக் கிரியைகளையும் முறைப்படியே செய்வித்து, அந்த வதூவரர்களை ஆசீர்வதித்து அன்பென்னும் தக்ஷிணை பெற்று அங்கிருந்து நீங்கினர்.

அதன் பின்னர், விவேகன் உபநிடதையோடு பிரமன் வாணி என்னு மிருவரையும் அடிவணங்கி அவர் வாழ்த்துப்பெற்று, அப்பால் தாயாகிய நிவிர்த்தியை வணங்கினன். அவள் மகனையும் மருமகளையும் மார்போடணைத்து ஆசிகூறி, இனி நம்பகைவராகிய மோகன் முதலானோரைவென்று வாழக்கடவீரென்று தான் செய்யவேண்டிய கிரியைகளையும் செய்தாள். அப்பால் இருவரும் தம்மிடத் துண்டாகிய ஆசையினெல்லைகண்டு ஒருருவாயினர்கள்.

இவ்வாறு இருவரும் ஞானபோகந் துய்த்துவரு நாளிலே, விவேகனுக்குத் தன் இராச்சிய நினைவுண்டாகலும், அவன் பிரமனையும் வாணியையு மடுத்துத் தனது தேவியோடும் வணங்கி நின்று, வாசஸ்தலஞ் செல்ல விடைதருதல் வேண்டுமென்று கேட்டான். அது கேட்ட முனிகணங்களும் பிரமனும் வாணியும் முகமலர்ந்து அன்பென்னும்சீதனம் அளப்பிலகொடுத்து விடையருளினர். அப்போது வாணி தனது புத்திரியை மார்புறத் தழுவி, கீதை என்பாளை அவளுக்குப் பாங்கியாகக்கொடுத்து அவளுடன் போக்கினள். மூவரும் புறம்போதர ஞானமாகிய மதயானைகளும் சேனைகளும் மங்கல வாத்தியங்களும் புடைசூழ, பிரமனாதியருடைய மனமும் பின்சென்று தொடர, தத்துவமாகிய தேரிலேறி அதிசம்பிரமமாக வீற்றிருந்து கண்டோரெல்லாங் களிபெரு மகிழ்ச்சி கொள்ளப் பூவுலகடைந்து சுமதி யொருபாலும் உபநிடதை மற்றொருபாலுமாக முருகவேளென விளங்குவானாயினன்.

உபநிடதை வேள்விச்சருக்கம்
முற்றிற்று.

## 23. சக்கரதீர்த்தச் சருக்கம்.

சில நாள் கழிதலும் நியாயன் என்பவன் வந்து விவேகனை வணங்கி, ஐயனே! உனது வலியானது சிற்றிளம்பிறை நாள்தோறும் வளர்ந்து வருதல்போல வளருகின்றது, மோகன் வலியோ அபரபக்கத்துச் சந்திரனாயிற்று. மோகனாதியராகிய இருளிலமுந்தித் துன்புறும் மனுகுலமாகிய சகோரபக்ஷிகளுக்கு உனது ஞானமாகிய தண்ணிலவைக் கொடுத்து அவற்றின் பசிநோயைத் தேறுதல் செய்யாது அவை வாளா வருந்த நீ சுகித்திருத்தல் நன்றாமோ! அன்றியும் நீ மனுகுலம் தளர்வது கண்டும் அவர்க்கு நின் உபதேசமாகிய கொம்பிற் பழுத்திருக்கும் ஞானக்கனிகளைப் படைக்கும் அன்புகுன்றியிருத்தல் உனக்கழகாகுமோ!

பருவம் நோக்கி வான்மழை பொழிந்திடுவதும், பகலோன் இருள் துரப்பதும், தண்புனல் நதிகள் மற்றெவையும் பெருகுவதும், ஒப்பிலா நற்குணப் பெரியோர் அருள் சுரப்பதும் தமக்கொருபொருள் குறித்தன்றே.

ஆதலால் இனி நீ சிறிதுந்தாழ்க்காது இக்கணத்திற்றானே நம்மவரோடுங் காசியை யடைந்து மோகனாதியருடைய வலிமை வேரோடுகளைந்து வெற்றிமாலை சூடுதல் ஆவசியகமாயிற்று; இதுவே ஏற்றபருவம் என்று கூறினன்.

அப்போது நியமன் என்பவன்எழுந்து விவேகனை வணங்கி, விறல் வேந்தே எனக்கூவி, நியாயன் உரைத்த வாசகங்களைத் தழுவித் தானுஞ் சிலசொல்வானாயினன். இது காறும் நீஎண்ணியவைகள் இடையூறின்றி முடிந்தமையால் வல்லவராகிய உனது படைவீரர் பின்னர் வரும் போரிலும் பகைவரைக் கடைபோகக் கடத்தல் நிச்சயம். இனி கல்லும் முள்ளும் பயிலும்

இக்காட்டைவிட்டு நம் படைவீரர் யாவரோடும் புறம் போந்து நம்பகைவீரர் வசிக்கும் பதியை நெருங்காது ஒரு புண்ணிய ஸ்தலத்தை அடைந்து, ஆதியில் சுயோதனனாலே காட்டுக் கோட்டப்பட்டவராகிய பாண்டவர் அவ்வனவாசம் விட்டுநீங்கி ஸ்ரீகிருஷ்ணனைத் தூது போக்கித் தமதுரிமையைக்கேட்க, சுயோதனன் மறுத்தபோது போருக்கெழுந்தமைபோல, நாமும் ஒரு தூதுவனை மோகன் பால்விடுத்து நம்முரிமையாகிய பூமியை நமக்குக் கொடுவென்று கேட்டு அவன் மறுப்பானேல்யுத்தத்திற்கு ஒருப்பட்டோமென்பதையுணர்த்துவோம், அதுவே முறையாமென்றான்.

அதுகேட்ட விவேகன் இதுவே தக்க சூழ்ச்சி என்று அவனுரையை மெச்சி, நியாயனை நோக்கி, நம் படையெல்லாம் சென்று வைகுதற்கேற்றதொரு புண்ணிய ஸ்தலம் சொல்வாயென்ன, நியாயனும் அவனை வணங்கி, ஐயனே, கங்காநதிச் சார்புடையதாகிய கவுடதேயத்தின் கணுள்ள ராடாபுரத்திலே சக்கரதீர்த்தமென்ப தொன்றுளது; அதுபோலும் புனிதமுடைய தீர்த்தம் சத்தியலோகத்திலுமில்லை; அதன் சார்பிலே அளவிடலாகாப் பெருஞ்சோலையொன்றுளது; அங்கே நம் படைவீரரோடு நாமும் செவ்வேவாசஞ் செய்யலாமென்றான். விவேகனும் நன்றெனத் தனது சேனாவீரரோடு நாட்டின் கண்ணுள்ள நோயைத் தீர்த்தற்குக் காட்டின் கணுள்ள மூலிகை கால்பெற்றெழுந்தாற் போல, காட்டைவிட்டு நீங்கிநாட்டின் வழியாகச்செல்வானாயினான். அச்சமயத்திலே அங்கே மோகனாதியர்க்கும் அவர் பத்தினியர்க்கும் இடந் துடிப்பதாயிற்று. அதுநிற்க, அங்ஙனம்போவானாகிய விவேகன் நாடுகளையெல்லாந்தாண்டி ராடாபுரத்தை யடுத்துச்சக்கர தீர்த்தக்கரையை அடைந்து அங்கே தனக்கும் படைகளுக்கும் பாசறைகளமைப் பித்து வைகுவானாயினான். அடுத்தநாள் நியாயனை நோக்கி, இது தகும் இது தகாது

என்னு முணர்வும் அஞ்சாமையு முடைய வீரன் நீ யன்றி வேறில்லை, ஆதலின் மோகன்பாற்றூது போதற் குரியை நீயே ஆக; இன்றே மோகன்பாற் சென்று நமது கருத்தை யவனுக்கு அஞ்சாதுணர்த்தி, அதற் கவன் பொருந்துவனேல், சிவஸ்தலம் விஷ்ணு ஸ்தலம் புண்ணிய நதி புண்ணியவன முதலியவற்றையெல்லாம் நீங்கி, துருக்கர் பப்பரர் எயினர் சோனகர் முதலிய கீழினத்தர் வசிக்கின்ற நாடுகளை யடைந்து, அங்கே தனதரசியலை நடாத்துமாறு சொல்வாயாக; அதற்கு டன் படானேல், நாளை யுத்தபேரிகை முழங்குமென் றுணர்த்தி மீள்வாயென்றான். அவ்வாறே நியாயனும் அப்பணியைச் சிரமேற்றாங்கி மோகன் வசிக்கின்ற காசியை நோக்கி நடந்தான்.

சக்கர தீர்த்தச் சருக்கம் முற்றிற்று.

## 24. காமனுதியர் சருக்கம்.

முன்னே காசியினின்றும் மோகனிடம் விடை பெற்றுப் போன தூதர் ஆங்காங்குச் சென்று காம னுதியர்க்கு நிருபங்களைக் கொடுக்க,அவரவரும் அவற் றைச் சிரத்திற் சூடி எடுத்து வாசித்து நிமிர்ந்தெ ழுந்து, இருள் பரந்ததோ, விடமெலாம் திரண்டெழுந் தவோ,கொடியவினைகள்யாவும் ஒருபுடையடர்ந்தவோ, நோயெல்லாம் உருப்பெற் றெழுந்தனவோ என்று தவத்திக ளெல்லோரும் மருண்டஞ்சுமாறு தத்தம் படையோடும் போய்க் காசியை யடைந்தார். பெரும் பாரத்தால் முடியயர்ந்தும் முதுகுளுக்கியும் முறையே வருந்திய ஆதிசேடனும் பூமிதேவியும் காமனுதியர் படை வரவைக்கண்ட மாத்திரத்தில், கொடிய பாவங் கள் யாவற்றையும் சுவடறத் தொலைக்கு மியல்பினதா கிய இக்காசியில் இக்கொடியர் வந்தமையால் இனி மீளாது மாள்வர் என்பதில் ஐயமில்லை, நந்துயரமும்

நீங்கிவிடும் என்று களித்தார். அது நிற்க, மோகனிடம் தூதர்சென்று காமனாதியரும் மனைமக்களும் படைகளும் வந்தனர் என்றுகூற, மோகன் அவரை இங்குவர விடுமின் என்றான். அவ்வாறே, காமனாதியரும் தத்தம் மனைமக்களோடு சபையிற் புக்கு அவன்றனை வணங்கினர். அவரையெல்லாம் மோகன் முகமலர்ந் தாசிகூறி அவரவர்க்கு ஏற்க ஆசனமிடுவித்து இருத்தி, நீவிர்யாவரும் செவ்வே வாழ்கின்றீரா வென்றான். அதற்குக் காமனாதியர் எம்மனக் கோயிலின் எழுந்திடையறாது விளங்குகின்ற நீ எம்மைவிட் டகலினன்றோ எமது வாழ்வுக்குக் குறைவருவதென்றார். நன்றென்றரசனும் மகிழ்ச்சி காட்ட, காமன் எழுந்து அரசனைவணங்கி ஐயனே, உனது அவித்தியாபுரத்தை விட்டு இங்குவந்து வசிப்பதும் எம்மையெல்லாம் வரவழைத்ததும் யாது பற்றியோ என்றான்.

அதுகேட்டங்கிருந்த அகங்காரன் நகைத்து, நன்றிருந்த துன்வாசகம் என்றுஎழுந்து, மன்னவன் முன்னேகூசாமல் நின்று, நெஞ்சு கொதித்து, அங்கிருந்தாரை நோக்கி விளித்து, நமது பகைவராகிய விவேகன் படைவீரர் தங்கள் மெய்யுருவை மறைத்து வேற்றுருத் தாங்கி உங்கள் நகரங்கள்தோறும் வந்து புக்கிருந்த துணரீர்போலும். ஆங்கவர் முயற்சியால் உங்கள் நாட்டில்எக்காலுமில்லா தொழிந்துபோய்க்கிடந்த தவம் தானம் ஓமம் செபம் முதலியன மீளவும் தலையெடுத்ததறியீர்போலும். அச்செய்தியை பொற்றராலுணர்ந்த நமதரசன் தனது நகர்விட்டிங்கு வந்தது குறியீர் போலும். வந்தபின்னர்ச் சூழ்ச்சிசெய்து மறைந்து, பகைத்தொழில்புரியும் பகைவரைப்பற்றி யடக்குமாறு கலியனைப் போக்கியது புலங்கொண்டிலீர்போலும். அவ்வாறே சென்ற கலியன் யோகினியராலடைந்த துன்பங்களை நுஞ்செவியிலிட்டார் யாருமிலர் போலும். அப்பால் அப்பகைவர் வெளிப்பட்டு நிற்பதுகாணீர்

போலும். அதுகண்ட நமதரசன் ஏவலிற் சென்ற சாரு வாகன் நாடெங்குஞ் சென்று பெண்கள் போகமே முத்தியாமன்றி மற்றில்லை யென்று போதித்து வந்த துங் கேட்டிலீர்போலும். உபநிடதையை விவேகனு க்கு மணம் பொருத்துமாறு சென்ற சிரத்தையைப் பிடித்து வரும் பொருட்டுப் புத்தன் கபாலி என்பாரோடு மிச்சாதிட்டி சென்றதும் வினவிலீர் போலும். மானன் தருமனைப்பற்றி வருமாறு போன தும் அறியீர்போலும். நன்றிருந்தது நுஞ்செய்தி! இவையெல்லாம் நிகழ்வ துணராது மங்கையரோடு மலர்ச்சயனத்திலே துயில் கூர்ந்தீர்போலும். நன்று! நன்று! நும்காவல் மிகச்சிறந்தது! என்று கூறினன்.

இங்ஙனம் அகங்காரன் கூறியவற்றைக் கேட்ட காமன் முடிதுளக்கி நகையாடி,அச்சபையில் எழுந்து, ஓ நந்துணைவரே! நம்பகைவர் உருமாறி நமதுநாட்டிற் பிரவேசித்தனராம்; உபதேசித்தனராம்; உபதேசமொ ழியைக் கைக்கொண்டு சிலர் நடக்கின்றனராம்; அஃதுணர்ந்தே அரசனுர் இங்கு வந்தனராம்; யான் சித்தசனுகவும் எனக்கறிதற் கரியனவு முளவாம். இவற்றைக் கலியனுர் கண்டறிந்தனராம். யோகினியாரது வலிமையைக் கண்டனராம். அவருக்கஞ்சி மைத்துனனுர் அரசனை யடுத்தனராம். பெண்கள் சுகத்தை அநேகர் துறந்து விட்டனராம். ஆ! ஆ! பேராச்சரியமே! வெந்த பருப்பு முளைத்துக் காய்த்தகதைபோ லிருக்கின்றதே. நம்மோடு எதிர்க்கும் ஆற்றலின்றிப் பெண்களைச் சரணடைந்து ஒடி மறைந்து திரிவாரோடு சமர்செய்யப் புகுவார் யாவர்! புகினும் அஃதாண்மையாமா! உபநிடதைபாற் றூதாகச் சென்ற சிரத்தையைப் பற்றி வருமாறு மிச்சாதிட்டியைப் போக்கியதோ டமையாது புத்தனையுஞ் சமணனையும் உடன் போக்கியது அறுபது கலசத்தை எழுபது குலாலர் ஒருவர்க்கொன்றுகக் கணித்துத்தூக்கப் புக்கதுபோ லாயிற்றே.பகை

வர் மீறிவந்து ஓங்குகினும் அவரை யடக்குமாறு என் போல்வாரொருவனை யழைத்து, இது செய்யவென்று ஏவித் தனது நகரிலிருந்து அரசாள்வதைவிட்டு இங்கு வந்தது அரசனுக் கழகாகுமா! இவ் வகங்காரனார் தம துநாட்டைவிட்டு இங்குவந்து அரசனுக்குறவுபாராட்டி மற்றெவரினும் தாமே விவேகியென மதித்து, இது தகும் இதுதகாதென்பதின்றி இத்துணைச் சிறந்தபுத்தி கூறியது வியக்கற் பாலதே! இதைவிட இனிவேண்டப் படுவதுயாது என்று சொல்லி, எதிர்நகைத்துச் சினந் தான். அதுகண்ட அரசன்சிங்கேறுபோலும் உனதுவலி வெளிப்படின் எதிர்நிற்றற் குரியவர்யாவர்? அகங்காரன் கூறியது அவன் இயல்பேயாகும்; ஆதலின் அதனைப் பொருட் படுத்தலாகாது என்று காமனைத்தணிவித்துத் தானு மிவை சில சொல்வானாயினன்.

ஏ! காமா! பெண்டிரைத் துணையாகக் கொண்டு போர் கடக்க முயல்வாரோடு போர்புரிய முயல்வார் என்றனையே! முற்காலத்தில் மகிடாசுரனையும் தாருகா சுரனையுங் கொன்று வெற்றியடைந்தவர் பெண்டி ரன்றோ? சிவபக்தி ஹரிபக்தி யென்னும் யோகினிகளு டைய கிருபையுண்டானால் தோள்வலி யில்லாராயினும் பகைவரது போர்க்களத்தில் சிங்க ஏறுபோலச் சிறப்படைந்து நிற்க மாட்டாரா? ஆதலால் நமது பகைவர் அந்தப் பக்திமாதரது கிருபையை ஒருங்கே பெறுவதற்கு முன்பே யாமெல்லாம் திரண்டுசென்று அவரை வெல்லமாட்டோ மாயின் பிறகு முடிப்பது கஷ்டமல்லவா? அது பற்றியும் இந்தக் காசிநகர் யாவர் க்கும் நற்பதவியைக் கொடுப்பதாகலானுமே நான் பகைவரது செல்லுகை இங்கே பொருந்தாவண்ணமே வந்து நும்மனைவியரையும் இங்கே வரும்படி கட்டளை யிட்டதாகும். சிரத்தையைப் பிடிக்கச் சென்ற மிச்சா திட்டி, காபாலி, புத்தன், சமணன் என்பவர்கள் இன் னும் வராமல் தாமதிப்பதற்குக் காரணமும் யாதோ

அறியேம். தருமனைப் பிடித்து வரப்போனவன் செய்தியும் உணர்ந்திலேம். இடம்பன் குமாரன் அசத்தியன் சிரத்தை சமணுதியர் கையில் அகப்பட்டானென்று சொன்னதை நம்பக்கூடுமோ? அவன் சொல்லை யார் நம்புவார். முன்னே நம் கலியனைவாட்டிய யோகியர் கையில் அகப்பட்டாரோ என்னவோ அறியோமென்று கூறிச் சிந்தாகுலங் கொள்வானுயினன்.

இந்தச் சமயத்தில், அங்கே காபாலி தன் தெய்வமாகிய பைரவி மீண்டு வரத்தாமதித்ததுகண்டு சமணனை நோக்கி, சோதிடத்திலாராய்ந்து என் தாய்க் குற்றத்தைக் கூறுகவென்று வேண்ட, அவனும் சோதிட நூலைக்கொண்டு ஆராய்ந்து நடந்ததைச் சொன்னுன். அதுகேட்ட காபாலி உள்ளம்பதறி அறிவு குன்றி வாடி விழுந்து மீண்டெழுந்து, என் தெய்வமானவள் இப்படி மடிந்தாளென்ருல் அந்த யோகிகளுடைய அன்பு பூண்ட பகைவரை யாவர் வெல்வாரென்று அதிசயித்து, இனி இங்கிருக்க லாகாதென்றெழுந்து யாவரோடுஞ் சென்று காசியை யடைந்தான். அங்கே சூரியனுக் கெதிர்ப்பட்ட சந்திரன் போல முகப்பொலி விழந்து நின்ற காபாலி, மிச்சாதிட்டி, சமணன், புத்தன் என்பவர்களைக் கண்ட கிங்கரர் அரசனிடத்தே சென்று அவர்வரவை யறிவிக்க, அரசன் அநுமதிகொண்டு அவரும் அவன் சமுகஞ் சார்ந்து அவன் பாதங்களை வணங்கிநின்று, நடந்த செய்தியையும் தாமடைந்த துன்பத்தையும் சொன்னுர்கள். அவற்றைக்கேட்ட மோகன் மனம் பதறிக்காபாலியை நோக்கி, வயிரவியைப் போக்கினது உண்மைதானே என்று கேட்க, அவனும், ஐயனே! அவள்போனதும் அநுமனுல் இலங்கைமாகாளி மடிந்ததுபோல மடிந்ததும் உண்மைதான் என்ருன். அது கேட்ட மோகனும் மற்றையரும் ஜீவநாதாரமாயிருந்த கைப்பொருளைப்பறிகொடுத்தவர் போலத்துயரமதிகரித்துக்

கலங்கினார்கள். அப்போது சேநாபதிகளுக்கெல்லாம் முதன்மை யடைந்திருக்கிற காமன் எழுந்து மோகன் முகத்தை நோக்கி, ஐயனே, அற்பகாரியத்தின் பொருட்டு நீ வருந்துதல் அழகல்ல. வாயுவின் வலியாலே பூர்வகாலத்தில் மேருமலையானது தன் ஆயிரமுடியில் ஒன்றை யிழந்த துண்டாயினும் தன் வலியை யிழந்து அவ்வாயுவை வணங்கினதுண்டோ? அதுபோல, நமது காபாலியால் ஏவப்பட்ட வயிரவி மாண்டதனால் நமது வலியெல்லாம் ஒருமிக்கப் போய்விட்டதோ? அடியேன் வலி ஒருபுறமிருக்க, அண்டாண்டத்தையும் ஒருங்கே வெல்லவல்ல கலகனும் கோபனும் இருக்க, அகங்காரனும் உலோபனும் இருக்க, மதன் டாாகன் சங்கற்பன் என்னும் மூவருமிருக்க, மேலும் மச்சான் முதலானோருமிருக்க, இன்னும் உன் பணியைச் சிரமேற் சூடி நச்சரவம் பாய்ந்து செல்வதுபோற் சென்று பிரமாதியரையும் பிடித்துப் பித்தராக்கி மீளவல்ல சதுரரும் உன்னைச் சூழ்ந்துநிற்க, ஐயனே! உன்னை வெல்லவல்லவர் உலகில்யார்? இருளெல்லாம் திரண்டு ஒரு கடவுருவாய் வந்தாற்போன்ற நமது சேனையில் ஒவ்வொருவனே திரிலோகங்களையும் வெல்லமாட்டானோ? அது நிற்க, ராஜாதிராஜனே! எனக்காயினும் விடைதருவாயாக, சிரத்தை போய்ச்சேர்வதற்கு முன்பே நான்போய் உபநிடதையைமணம் புணரவொட்டாமல் விவேகனைத் தடுத்து, அவன் மீதுள்ள ஹரிபக்தி சிவபக்தி என்னும் யோகினியரது கிருபையையும் விலக்கி, அவனைச் சிற்றின்ப வாழ்விற் புகுத்தி ஒருநொடியில் மீள்வேன் என்றான்.

அதுகேட்ட மோகன் நன்றென்று கூறி, சிறிது படைத் துணைகொண்டு செல்வாயாகவென்று அவனுடனே அனுப்பும்படி சில படைத்தலைவரை யழைக்க நினைத்தான். நினைத்தபோது அவன் சபையில் ஒரு ஒற்றன் வந்து வெளிப்பட்டு, ஐயனே, விவேகராஜன் உப

நிடதையை மணமுடித்துக்கொண்டு பெரிய சேனைக ளுடன் ராடாபுரத்தைவந் தடுத்தான் என்று கூறினன். அந்தச்சொல்லைக் கேட்ட மோகனுதிய ரெல்லோரும் இடிமேலிடியிடிக்கக் கேட்ட பாம்புக் கூட்டம்போலா யினர். அவருள்ளும் மிகவும் பயந்து மனமயர்ந்தமோ கன் அங்கிருந்தவரை யெல்லாம் நோக்கி,ஒவ்வொருவ ராக எனக்கு விடைதரக் கடவீரென்று கட்டளையிட்டு, விவேகனுதியரிடத்தில் அருள் செய்து நிற்கிற ஹரிசிவ பக்திகளாகிய யோகினிகளை விலக்கினேமல்லேம்; சிர த்தை தூது சென்ற காலத்திலாயினும் அவளைப் போய்ப் பிடித்து வந்தேமில்லை; அப்பால் விவேகனை மணம்புரிய வொட்டாமல் தடுக்காமலு மிருந்துவிட் டோம்; இவையாவையும் இதுவரைக்கும் நோக்காதி ருந்தநாம் இனிமுயற்சி செய்தால் உண்டாகும் பயன் யாது? இனிமுயற்சி செய்தோமாயினும் தடங்கரையை யுடைத்துப் பரவிப் பாய்கின்ற வரிக்குக் கரைகோலு வதை நிகர்க்குமேயன்றி வேறென்ன பயனைத்தரும்? விவேகனுதியர் செய்த முயற்சியெல்லாம் முடிவுறப் பெருகின; நமது முயற்சியோ பரந்தவெள்ளம் வடிவது போலாயிற்றே யென்றிரங்கி யுரைத்தான். அப்போது காமன் எழுந்து அரசனை வணங்கி, அரசரேறே,யாதுக் குத் தளர்கின்றீர்? விவேகன் உபநிடதையை மணம்புரி ந்துகொண்டமையால் பேராண்மையனுகி விட்டானே? அவன் என் புஷ்பபாணத்துக்கு எதிர் நிற்கவும்வல் லனே? மழைக்குக் குடைபிடித்துப் பிழைத்தவர் இடி க்கும் குடைபிடித்துப் பிழைத்தல் கூடுமோ? விவேகன் புரிந்தமணம் என் மோகனுஸ்திரத்துக்கு என் செய் யுமோ? காடு பசுமையுடையதாயினும் அதிலுள்ளவற் றின் தளிரில் நெருப்புப் பற்றுமாயின் அந்த நெருப் பானது அந்தக்காடு முழுமையும் எரிக்காமல்விடுமோ? என்று கூறினன். அந்தச் சொற்களைக் கேட்ட மோ கன்,நன்று கூறினை,நமக்கெதிர் நிற்கமாட்டாமல் ஓடிக்

காட்டை யடைந்த விவேகனுதியர் இன்று நம்மூர்ப் புறத்தை யடைந்தனரென்றால் இனி நாம் பேசவேண்டுவதென்ன? இன்னும் நமக்கொரு வீரமும் அதைநாம் கேட்பது முளவோ? ஆயினும் இனிச்சும்மா விருப்பது தகாது, தகுந்தபடி செய்வதே கடனென்றுகூறி, இடம்பனை யழைத்து நீ உன் துணைவரோடு இவ்வூரெங்குஞ் சென்று விஷம்போலப் பரவி விவேகனுதியரது படையைச் சூழ்ந்து அவர்கள் வெளிப்படாதபடி காக்கக் கடவையென்று அவனுக்குக் கட்டளை யிட்டான். அவன் போனபிறகு அநாசாரனை யழைத்து, நீ கங்காதீரத்திற் சென்று விவேகனுதியர் அத்துறைகளிலே படராவண்ணம் அவற்றைப் போய்க் காத்திருக்கக் கடவையென்றான். அப்பால் அவயாநனைக்கூவி, நீ காசி தேசத்துக்கு அப்பாற்சென்று விவேகனுதியரது துணைவர் காட்டைவிட்டு வெளிப்படாதபடி அவர்கள் வரும் வழிகளைக்காவல் செய்வாயாக வென்று கட்டளையிட்டான்.

காமனுதியர் சருக்கம் முற்றிற்று.

---

## 25. நியாயன் தூதுச் சருக்கம்.

இவ்வாறு மோகன் இன்னுஞ்சிலரை அங்கங்கே சென்று வழிகளைக் காக்கும்படி யேவினபிறகு மேலே செய்யத்தக்கது யாதென்று மந்திரிகளோடு ஆலோசிப்பானாயினன். அப்போது முன்னே விவேகனுதியரால் அனுப்பப்பட்டு வழிக்கொண்ட தூதனாகிய நியாயன் மோகனது நகரையடையக்கண்ட வாயிற் காவலர் மோகனிடஞ் சென்று, நியாயனென்பவ னொருவனிருந்தகோவத்தோடு நாகத்தின் மேற்பாய்கின்ற கருடன்போலப் பகைக்கஞ்சாமல் இன்று நம் கடைவாசலில் வந்தானென்று வணங்கிக் கூறினர். அதுகேட்ட மோகன் நன்றென்று தலையசைத்து அவனைப் போயழைத்து வாருங்களென்றான்.

அவ்வாறே வாயிற் காவலரும் விரைவிற்போய் நியாயனுக்குச் சொல்ல, அவனும் அஞ்சாமல் மோகன் முன்னேசென்று அவனைக் கைகுவித்து வணங்க, அவனும் எதிர்வணக்கஞ் செய்து ஏவலரால் ஆசநமொன் றிடுவித்து தனக்கெதிரே யிருத்தினான். இருத்தி நீ யிங்கே வந்ததற்குக் காரணம் யாதென்று வினவ, நியாயன் அவனை நோக்கி, ஐயனே! உனக்கஞ்சிக் காட்டில் வசித்த உன் தம்பியர் யாவரும் தீதின்றி இந்த நகர்ப் புறத்தை யடைந்தார்கள், உன் தம்பியாகிய விவேகன் சொன்னவற்றை உனக்குச் சொல்லவந்த தூதுவன் யானென்றான். அது கேட்ட மோகன் அவற்றைச் சொல்லக் கடவாயென்ன, அவனும், ஐயா! கேள்என்று சொல்லத் தொடங்கினான். எப்படியெனின், மாநதன் இவ்வுலகமுழுதும் உனக்குக் கொடுத்து குற்றமற்ற எமது மூதாதையைச் சிறையிட்ட காலத்தில் சிறிதும் இரக்கமில்லாமல் நமது வேந்தனைக் காட்டுக்கு ஓட்டி அவனை அங்கே சரீரம்வாடி அலையும்படி செய்தாய். அவனை அப்படி செய்ததுமன்றி அவன் தாயாகிய நிவிர்த்தியையும் மற்றவுறவினரோடு குலையும்படி தாக்கி அவர்களுக்கு அளவற்ற பிழைகளைச் செய்தும் இன்னமும் செய்துகொண் டிருக்கிற உன் போல இரக்கமில்லாதவர் யார்? அதுநிற்க, உன்னால் அளவற்ற துன்பங்களை விவேகன் அடைந்தானாயினும் பக்திமாதரது கருணையால் உபநிடதையை மணம்புரிந்து தன்துணைவரோடும் வெல்லுதற்கரிய படைவீரரோடும் இன்று இந்நகர்ப்புறத்து வந்தடைந்தான். அப்படி வந்த விவேகன் அறிஞரால் புகழப்படுகின்ற அரும்பெருந் தருமசீலனாதலால் இன்னும் உன்மீது கருணை யுள்ளவனாய், நீ செய்த பிழைகளுக்கு மாறு செய்யக் கருதாமல்என்னை உன்னிடத்துக்கு அனுப்பினான் என்றறியக் கடவை. இதுவரைக்கும் இவ்வுலக முழுதும் உன்னதென்று கட்டி அரசுசெய்த செல்வத்தை இனி நீ விட்டு நீங்கி

உயிர் பிழைக்கவேண்டி உன் துணைவரோடும் விவேக னது அருட்பணியைச் சிரசாவகித்து, கானகவேடரும் கள்வரும் கடற்கரை வலையரும் சோனகரும் துருக்க ரும் பப்பரரும் சாதியீனரும் ஆகிய இவர்கள் வாழ் கின்ற இடங்களை நாடிச்சென்று அங்கே வசிக்கக் கடவை.

தம்பியர்க்குத் தசரதராமனும் வீடமெனும் தமக் குரிய அரசைமனம் பொருந்திக்கொடுத்ததை அறிவா யல்லவா? ஆதலால் நீயும் உன் தம்பியின் அரசுரிமை யைக் கொடுத்தல்முறைமையாகும்.அப்படி செய்வாயா னால் எந்நாளும் உன்னை அவனுக்கு மூத்தோனென்று உலகத்தார் புகழ உன் பரிவாரத்தோடு நீயும் உன்மனை மக்களும் இவ்வுலகில் வாழ்ந்திருக்கலாம். அப்படிசெய் யாமல் மறுப்பாயானால் அங்கதன் ராமதூதனாய்ச் சென்றுகேட்க மறுத்த ராவணன்போலவும், கிருஷ் ணன் பாண்டவர் தூதனாய்ச் சென்று கேட்க உடன் படாத துரியோதநன் போலவும் உறவினரோடு நசிப் பது உண்மையென்றான். அதுகேட்டமோகன் நகைத்து தலையசைத்து, மிகவும் நன்றுநன்றென்று கூறி நியா யனை நோக்கி, என் தந்தை உனக்கே முடிசூட்டி விவே கனைக் காட்டுக்கு ஓட்டினன் என்று சொல்லாநின்ற நீயே என்னை நோக்கி உன் தம்பிக்கு அரசாட்சியைக் கொடுவென்று கேட்பாயாயின் உன்னையா நியாய னென்று சொல்லுவது? நன்று சொன்னாய்!என் தந்தை விவேகன் முதலியோரை ஒரு கணமேனும் தரிக்க இடங்கொடாமல் ஓட்டிவிடக் கடவாயென்று எனக் குச் சொன்ன சொல்லைக் கேட்டும் சிறிது கருணை வைத்து அவரை காட்டுக்குப் போகவிடுத்த என்னி டத்தில் மீண்டுவந்து தன்னுரிமை கேட்கத்தூதுவிடுத்த விவேகனோ நீயோ உம்மில் யாவர் துணிந்தவர்? கலி யன் முதலானோர்க்குத் தப்பினர்களென்றும், உபநிட தையின் மணம் பெற்றார்களென்றும், அரசுரிமையைத்

தம்பியர்க்குக் கொடுப்பாயென்றும் வலிமையும் வழக்கும் பேசவல்லவர் உன்னையன்றி வேறுயாருளர்? நன்று நன்று! என் தந்தை அவ்விவேகனையும் அவன் தாயையும் புத்திரனும் பத்தினியும் அன்றென்று துறந்துவிட்டானென்றால் பிதுர்த் துரோகியாகிய அவ்விவேகன் எவ்வாறு எனக்குத் தம்பியாவன்? உன்னாற் சுட்டப்பட்ட ராமனும் வீடுமனும் அன்று தமது அரசுரிமையைத் தம்பியர்க்குக் கொடுத்தது தந்தையர் பொருட்டோ அன்றித் தம்பியர்க் கிரங்கியோ அதனைச் சிந்தித்தாயில்லை! இந்த நன்னாடெல்லாம் தனக்காகக் கட்டிக் கொள்வதற்கும் ஈனர் வசிக்கிற நாட்டை எனக்குக் கொடுத்தற்கும் விவேகன் செய்த ஆலோசனை நன்றாயிருக்கின்றது. இளையவனாதலால் அவன் பிழையை இன்னமும்பொறுத்து மீண்டும் அவனுக்குக் காட்டைக் கொடுப்பதேயன்றி இந்த நன்னீர்க் கழனி நாடுகளை நான் கனவிலும் அவனுக்குக் கொடுப்பதில்லை. பக்திமாதரது அருள் தனக்கு உண்டென்றும் உபநிடதையை மணம்புரிந்து கொண்டேனென்றும் செருக்கடைந்து இந்தநாட்டில்வந்து அவன் சொல்லியவன்மையெல்லாம் நான் கோவித்தெழுந்தால் வேரோடு அழிந்துபோகாவோ என்றான். அது கேட்டுப் பக்கத்திலிருந்த குதர்க்கன் எழுந்து மோகனைப் பார்த்து, பிரமாதிதேவரும் உன் வலியால் தவநிலை யழிந்தனரென்றால் உனக்கு எதிர்நிற்கவல்லவன் சிறியவனாகிய விவேகனோவென்று கூறி நகைத்தான். பின்னும் அவன் நியாயனைநோக்கி, நீதித்தலைவனே! பிணைமானொன்று தன்கலைமானுக்குக் கொம்பு முளைத் தோங்கினதைக் கண்டு புலிக்கெதிரே சென்று இவ்வனமுழுதும் நமது கலைக்குக்கொடுத்து நீகாட்டைவிட்டு நீங்கக்கடவையென்று கூறியதுபோல நீயும் இங்கே வந்து சிலபுன் சொற்களைச் சொன்னாய் என்று கடுத்துக் கூறினான். அவன் அப்படிக் கூறி முடித்தலும் உலோபனெழுந்து மோக

வேந்தன் முகத்தை நோக்கி, பூலோகத்தில் ஒரு எள்ளளவிடமும் விவேக னுதிபருக்குக் கொடுக்க நினைப்பாயாயின் உன் தந்தையாகிய மானதனுக்குப் பகையாகி அவனால் நீ நீக்கப்படுவா யென்பதற்குச் சந்தேகமில்லை. முடிவில் அவனும் புத்திர சோகத்தால் மாள்வதற்கும் சந்தேக மில்லையென்று கூறினன். இப்படிப் பலவாறு கூறிநிற்குஞ் சமயத்தில், அக்கிரமன் அதர்மனேடுமோகன்முன்னேவந்துவணங்கி நின்று, ஐயனே! ஒரு எலியானது அஞ்சாமல் பாம்பின் கூட்டத்திற் புகுந்தாற்போல இங்குவந்து உரிமைகேட்ட இந்த நியாயன் என்னும் பித்தனைப்பிடித்து விலங்குபூட்டிச் சிறைப்படுத்தாமல் இத்தனை பேரும் காலதாமசம் பண்ணுதற்குக் காரணமின்னதென்றறியேன் என்றான். அவனுக்கிணங்க அதர்மனும் அரசனைப்பார்த்து, இந்த நியாயனை யெப்படிசெய்தாலும் தகும் என்றான். இவற்றைக்கேட்ட நியாயன் அங்குள்ளாரெல்லோரையும் நோக்கி, இங்கே என்னைக் கைப்பற்ற வல்லவீரரும் உளரோவென்று கைகொட்டி நகைத்து அதர்மனைநோக்கி, என்னைப்பிடிப்பதற்கு நீங்கள் ஒவ்வொருவராய் வருகிறீர்களா? அன்றி எல்லீரும் ஒருங்கே திரண்டு வருகின்றீர்களா? வாருங்கள், ஒரு நொடியிலே உங்களையெல்லாம் யமபுரத்திற் சேர்க்கின்றேன் என்றான். அதுகேட்டுக் கோபன் மனங்கொதிக்க, வாய்துடிக்க, மீசைநிமிர, உயிர்பொங்க, கண்கள் தீப்பொறி சிந்த எழுந்து, நியாயன் உயிரை ஒரு நொடியில் உண்பேனென்று மோகனைநோக்கி, பக்திமாதரது அருளுண்டென்று தருக்கிக் குதிக்கின்ற இந்தத் தூதனைக் கொல்லுதற்கு இந்த அக்கிரமன் ஒருவனே போதும். ஆயினும் தூதரைக் கொல்லுதல் தகாதென்று பெரியோர் கூறினராதலால், இவன் உயிர் பிழைத்தான் என்றுகூறி, நியாயனைப்பார்த்துச் சினந்து இந்தச் சபையைவிட்டு அப்பாற்போவென்றான். அவன்

சொன்னவுடனே நியாயனும் எழுந்து எமது வல்லமையை நாளையறிவீரென்று கூறி மீண்டுபோய் விவேகனிடஞ்சார்ந்தான். அவன் போனபிறகு உலோபன் அரசனைநோக்கி,இந்தச்சபையில்வந்து நம்மையெல்லாம் மதியாது தருக்கின்ற தூதனைப்பற்றிச் சிறையிடத் துணிந்து எழுந்தவர் நம்மில் ஒருவரையுங் கண்டிலேம் என்றால் இனி விவேகன் போருக்குவருங்காலத்தில் அவனோடு போர்செய்யத் துணிவோர் யாவரோ வென்றான். அப்பால் மானன் என்பவனெழுந்து அரசனைநோக்கி, துரியோதனனிடத்திலே ஐவர் தூதுவிட்டுப் பெற்றது யாதேனுமுண்டோ? ஆதலால், பிறகு பகைவர் நம்மை வெல்வது நிச்சயமாயினும் ஆகட்டும்; அவருக்கு நாம் இடங்கொடுத்தல் அழகல்ல வென்றான்.

நியாயன் தூதுச்சருக்கம் முற்றிற்று.

---

## 26. காமனுதியர் வீராலாபச் சருக்கம்.

அந்த மானன் என்பவன் இம்மொழிகளைக் கூற, அங்கிருந்த மோகவேந்தன் தனக்கருகே நின்ற காமனுதியரை நோக்கி, பகைவர் வலிமையையும் அவர் முயற்சியையும் அழிக்கும்படியான உபாயம் இன்னதென்று உங்கள் மனத்தில் ஆராய்ந்து சொல்லுங்களென்றான். அதுகேட்ட காமன் அந்த மோகவேந்தனை அடிபணிந்து, நமக்குமுன்னே நம்பகைவர் வலி நிற்குமோ, பல மின்னல்கள் மின்னினும் அந்த மின்னலொளிக்குக்காடாந்தகாரம் அஞ்சுமோ வென்றான்.

மேலும், அழகிய மாதர்மீது ஆடவர்க்கு ஆசையுண்டாக்குவதே யென் வடிவாகி, அவரவர் மனங்களிற்றோன்றி, அவர்களுக்குத் துன்பத்தையுண்டாக்குகிற என்னாலும், என்மனைவியாகிய இரதியாலும், என் சின்னங்களாகிய குயில் முதலானவைகளாலும், மோகமடைந்து சிற்றின்பமாகிய வலையிலகப்படாதவர் எவ்வு

லகத்திலுமில்லை. உருவமில்லாத பிரமப்பொருளொன்று நீங்கலாக, உருவமுள்ள எந்தத் தேவர்களாயினும் என் கையிலுள்ள ஒரு புஷ்பபாணத்தால் தமது அறிவு முழுதும் நீங்கி, உன்மத்தராகி பித்தேறப்பெற்று, இன்சொற்சொல்லி, உடை தயிர்போல மனஞ்சுழன்று, செயல்மறந்து, அந்தப்பேதையரினும் பேதையராய்த்திரிந்து அவர்க்குப்பின்னே செல்லுவார்கள். கடல்சூழ்ந்த இவ்வுலகத்தில் என்னை வெல்லுவோர் யாவர்? ஒருவருமில்லை. திரிமூர்த்திகளும் என் புஷ்பபாணத்துக்குஆற்ருதவர்களாய் உலையிலிட்ட மெழுகுபோலுருகி ஒருவன் வெள்ளிமலைமேலேறிக்கொண்டான்; ஒருவன் கடலிற்சென்ருெளித்துக்கொண்டான்; வேரெருருவன் சத்தியலோகத்திலேறிக்கொண்டான்; இம்மூவரும் இவ்வாறுசென்ருெளித்தாலும் அந்த மலைமுதலாகிய இடங்களிலும் என் புஷ்பபாணம்போய் அவர்களை வருத்தாமல் விடாது. பிரமன் முகம் வெளுத்ததும், திருமால்மார்பு சிவந்ததும், சிவன் பாதியுடல் கறுத்ததும், இந்திரன் முகத்திருகண் பற்ருமல் உடம்பில் ஆயிரங்கண் பெற்றதும் எதனாலே? என்பாணத்தாலன்ரே! என்பாணத்துக்கு லக்ஷ்யமாகாதவர் யாவர்? ஒருவருமில்லை. வேதமுதலாகிய அறுபத்துநாலுகலைகளும், சரசுவதியானவள் அதிசயித்துக் கேட்கும்படி ஓதியுணர்ந்தும் பிறருக்குச் சொல்லியும், உயர்ந்த பெரியோர்களுக்கும் உண்டாயிருக்கிற விவேகமானது, மாதரது கண்களாகிய அம்பு பாயுமளவுமே நிற்பதன்றிப் பாய்ந்தபின்னும் நிற்பதுண்டோ? செவ்வல்லி மலர்போலும் வாயினையும் அதரத்தையுமுடைய மாதராசையை யெவர் கடக்கவல்லார்? அந்த மாதர்கண் பார்வையால் எவர் மனமுருகாதவர்? இவ்வுலகத்தில் என் பேருள்ளளவும் மாயமாகிய இரவைக்கடந்து ஞானக்கண்ணை விழித்து நோக்குவோர் யாவர்? மாதர்கண் பார்வையைக் கடந்தவர்போலச் சபையில்வந்து விரக்

திவார்த்தைகள் பேசுவோர் யாவரும் அந்த மாதரைத் தமது மனத்தினின்றும் நீக்கினவரில்லை. ஒரு நெருப் புக்கணையால் சதுரங்க சேனைகளும் பஞ்சுபோல நீரு வது காண்கிறோமல்லவா? அதுபோல எப்படிப்பட்ட மஹாவீரரும் என் பூங்கணை யைந்திஞல் மாய்வார்கள். அக்கினிதேவியை அன்று யமனுண்டதும், சந்திரன் தன் குருபத்நீ கமநம் செய்ததும், இந்திரன் மகனுக்கு இரண்டுகண்களும் ஒன்ருனதும், பஞ்சபாண்டவர் ஒரு மனைவியை மணந்ததும், சூரியன் ஒரு கன்னியைப் புணர்ந்து கன்னனைப்பெற்றதும், வருணனும் சூரிய னும் குடத்தினுள்ளே தம் வீரியத்தை விட்டதும், மேலும் கண்டோர் நகைக்கும்படியான இத்தொழில் களையெல்லாம் எப்படிப்பட்டவரும் செய்து தாழ்வ டைவதும் எனது ஆண்மையாலல்லவா? அன்றியும் என் மனைவியாகிய இரதியானவள் யாவர்க்கும் கலவி யின்பத்தை யுண்டாக்குவதை எவர் கடந்தேறுவார்? என் சின்னங்களாகிய எக்காளமுதலிய ஐந்திலும் ஆட வர் ஐம்புலன்களும் அடங்கிப்போதலால் எவ்வுலகத் தாரையும் வெல்லுதற்கு எனது சின்னங்களே யமை யும். எனக்குதவியாயிருக்கிற வீணையும், மேடையும், சோலைகளும், நதிகளும், கலவைச்சந்தநமும், மணற் குன்றுகளும், பஞ்சவாசங்களும், மணமுள்ள மலர்க ளும் உள்ளளவும் அறிவுள்ளவரென்று சொல்லப்படு வோர் யாவர்? முற்காலத்தில் திருமாலானவர் விருந் தையென்னும் பெண்ணை விரும்பிப் புணரச்செய்தவ னும் என் புதல்வஞகிய விடயாநந்தனல்லவா? என்று இவ்வாறு காமன் தன் பிரதாபங்களையெல்லாம் சொ ல்லும்பொழுதில், கோபன் என்பவன் எழுந்துபோய் மோகவேந்தனுக்கெதிரேநின்று, இனி என் பராக்கிர மத்தைக் கேட்கக்கடவாயென்று சொல்வாஞயினன். மனத்திலுண்டாகிற விருப்பமானது பலிக்காமல் தடை ப்பட்டால் எழுகின்ற கோபமே யுருவாகப்பெற்ற என்

னையும், என் மனைவியாகிய கொலையையும், என் மகனாகிய கலகனையும் வெல்லுவோர் யார்? கங்காதரனாகிய சிவபெருமானது நியமத்தை நிலைபழியச்செய்ததும், என் தேவியாகிய கொலையைக்கொண்டு இந்தக் காமனது உடம்பை நீறுக்குவித்ததும் அறியாதவர் யார்? துடிதுடித்து கண்கள் நெருப்புப்போலச் சிவந்து, படபடத்த சொற்களையுடையவராய் உடல் பதைத்து, மனங்கொதித்து எழுகின்ற கோபக் கொதிப்பைப் பொறுப்பவர் எவ்வுலகத்திலுமில்லை. தெளிவழியவும், கலைத்தேர்ச்சியழியவும், மனவிரக்கமழியவும் மிகவும் வருத்தி, அறிவுடையாரையும் குருடராகவும் செவிடராகவும், கொடியராகவும் செய்து பிறரால் இகழச்செய்வேன். பரிசுத்தமாகிய மனமும், தருமமார்க்கநிச்சயமும் உளவாயினும் கொடிய கோபமுண்டானால் கற்றறிந்தோர்களும் தாய்தந்தையர், மூத்தோர், நண்பினர் என்றெண்ண விசையுமோ? கோபம் எனப்படுகிற கொடியேன் உண்டானல் யார்தான் நிலைகெடாதவர்? நிவாததீபம்போலசைவற நிற்கும் மனத்தையுடைய தபோதனர்களும் கோபம் உண்டானபோது அயலார் பதைபதைக்கச் சாபங்கொடுத்துத் தாம் வருந்திச் செய்த தவத்தையும் இழந்துவிடுவார்கள். வசிட்டன் மக்களை விசுவாமித்திரன் வேடராகும்படி சபிக்கச் செய்து, சகரன்மக்களைக் கபிலமுனிவரைக்கொண்டு உயிர்வாங்கினவளும் என் மனைவியாகிய கொலைமாதல்லவா? மேலும், சிவனிடத்திலடைந்து அவனைக்கொண்டே முப்புரத்தை யெரிப்பித்ததும், யானையை உரிப்பித்ததும்,இராவணனுடையஉடலை நெரிப்பித்ததும்,பிரமனை ஒரு சிரங்கொய்வித்ததும் அறியாதவர்யார்? திருமாலும் இரணியனைக்குடர்பறித்து,இராக்கதரைக்கொன்று, இராவணனை முடிதகர்த்துத் துன்புறுத்தினதும் என் மனைவியாகிய கொலைமாதுதானே. க்ஷத்ரியருக்குப் பகைவனாகிய பரசுராமனைக்கொண்டு அவன் தாயா

கிய ரேணுகாதேவியைக் கொல்லுவித்ததும், இந்திரனைக்கொண்டு விசுவரூபன் என்னுங் குருவைக்கொல்லுவித்ததும் அந்தக் கொலைமாதின் கொள்கையேயாம். ஆதலால், பொறுமையும் விவேகனும் இசைந்து வாழ்கின்ற இடமும் வெந்தொழியும்படி யெரித்து, மோகனையன்றி எவ்விடத்தும் வேறொருவரில்லையென்னும்படி பறையறைவிப்பேனென்று படபடத்துச் சொல்லினான்.

இவ்வாறு கோபன் சொல்லி முடித்தவுடனே மோகவேந்தன் மனமகிழ்ந்து, தான் நினைத்தகாரியத்தை முடித்தவன்போல நிற்குஞ் சமயத்தில் உலோபன்என்பவன் வந்து அரசனைவணங்கி, ஐயனே! என் சாமர்த்தியத்தையும் சற்றுக் கேட்கக் கடவையென்று சொல்லத்தொடங்கினான்.

கிடைத்தபொருளைப் பற்றிக்கொண்டு ஒருவருக்கும் கொடாமையே உருவாகக் கொண்ட என்வெற்றியும், கிடைக்காத பொருள் மேலுண்டாகிற வாஞ்சையென்கிற என் மனைவியும் போர் செய்யத் தொடங்கினால் கற்றறிவுடையவரானாலும் எங்களை ஜெயிக்கமாட்டார்கள். நமக்குப் பகைவராகிய விவேகன் முதலானோரும் சுவர்க்கபோகத்தை அநுபவிக்க நினைத்து விரத முதலியவற்றை யநுஷ்டித்து ஐம்புலன்களையும் ஒடுக்கி யாகாதிகளைச் செய்வதும் என் இச்சாரூபத்தின் தொழிலல்லவா? தேவகி புத்ரனாகிய ஸ்ரீகிருஷ்ணன் பிரசேநன் என்னும் வேந்தனை யடுத்து சமந்தக மணியைத்தர வேண்டுமென்று கேட்டபோது அவ்வேந்தன் என்னிடத்தில் மணியில்லை நீ போவென்று சொல்லும்படி செய்ததுயார்? முற்காலத்தில் ஸ்ரீகிருஷ்ணன் பாண்டவர் தூதனாய்த் துரியோதநனிடத்துக்குப் போய் பாண்டவர்க்கு அவரது உரிமையைத் தரவேண்டுமென்று கேட்டபோது அந்தத் துரியோதனன் ஒரு எள்ளளவு மண்ணுங் கொடேன் என்று சொல்லச் செய்ததும்

என் சொல்லல்லவா? பிரமனும் என் மனைவியேவலாற் பிச்சைக்குப் புறப்பட்டான், சிவனும் பிச்சை யெடுத்தான், விஷ்ணுவும் மாவலியிடத்திற் சென்று மூவடி மண்ணையாசித்தான். உலகத்திலுள்ள மனிதர் யாவரும் இரவும் பகலும் காடு மலை கடல் முதலிய இடங்களில் உழல்வதும் என் இச்சையின் தொழிலல்லவா? மதயானையோடு எதிர்த்துப் போர்செய்வதும் கம்பத்தின் மேலேறி நடிப்பதும் பாம்பைப் பிடித்தாட்டுவதும் முதலாகிய தீத்தொழில்களைச் செய்வதும் என் மனைவியேவலாலன்றோ? கஷ்டப்பட்டாயினும் வஞ்சனைசெய்தாயினும் பொருள் சம்பாதித்து அதைக்கொண்டு மகிழ்ந்து இந்தப்பொருள் போதுமென்று திருப்தியடைந்திருப்பவர் இவ்வுலகத்தில் யாருளர்? என் மனைவியான இச்சையானவள் பெருக்கமடைந்த காலத்தில் பரிசுத்தரான பெரியோரும் தமக்கினியவரிடத்தும் அருள் செய்யாதிருத்தற்குக் காரணம் யார்? அவளே யல்லவா! உலகத்திலுள்ள விறகையெல்லாம் உண்டும் பசியாறுத நெருப்புப்போல அண்டபகிரண்டங்களை யெல்லாம் உட்கொண்டும் என் மனைவிக்குத் திருப்தி யுண்டாவதில்லையென்றான்.

இந்தப்பிரகாரம் லோபன் சொல்லி முடித்தவுடனே, அவன் மகனாகிய இடம்பன் எழுந்து அரசனை வணங்கித் தன் வல்லமையைச் சொல்லத் தொடங்கினன். எப்படியென்றால், மறுமைக்கொரு துணையாகிய நல்லொழுக்கத்தை முழுதுமறந்து பிறர்மதிக்கும்பொருட்டுச் செய்வதாகிய தொழில்களையே உருவாகக் கொண்ட என்னை மறைக்க ஏற்பட்ட என் மனைவியாகிய வஞ்சனையை யார் வெல்லவல்லார்? என்பேர்கொண்டவர்களுக்கு அவர் விரும்பின பொருளைக் கொடாதவர்யார்? முற்காலத்தில் தோலாடையைத் தரித்துவந்த சிவனுக்கு விஷத்தைக் கொடுத்த பாற்கடலானது பொன்னுடையைத் தரித்துவந்த திருமாலுக்குக்

கௌஸ்துப மணியைக் கொடுத்தது. அன்றியும் இவ்வுலகத்தில் உள்ள மனிதராயினும் மேலுலகத்திலுள்ள தேவராயினும் என்னை யடையாதவர் மதிப்பற்றவராய் அவிவேகியர் என்று சொல்லப்படுவார். வஞ்சனையும் நானும் கூடிப்போர்செய்தால் திருடனும் வசப்படுவான். அன்றியும் சுசீலனும் அவனது ஆண்மையும் நெருப்புக்கெதிர்ப்பட்ட பஞ்சுபோல எரிந்து போகாரோ? எனது ஆண்மையாகிய இது இருக்கட்டும், என் மகனாகிய அசத்தியனது மயக்கத்தைக் கடந்தவர் ஒருவருமில்லை. அக்காலத்தில் பதினாறுவயதே தன் ஆயுளெல்லையாக வுடைய மார்க்கண்டனைக் காக்கும் பொருட்டு யமனைக் கொன்று, தடுத்துக் கேட்டவர்க்குக் காலகாலன் பொய்சொன்னதும் பிரமனும் தாழைமலரும் பொய்சொல்லி யல்லவா தமக்குப் பூசனை முதலிய இல்லாமற் போகப்பெற்றது? விவேக முதலியவற்றை யழிக்கின்ற அந்த அசத்தியனாலே தருமபுத்திரனும் அக்காலத்தில் ஒரு பொய் சொன்னான். அப்படியிருக்க இந்தப்பூமியில் இக்காலத்தில் பொய்சொல்லாதவர் யார் என்றிவ்வாறு இடம்பன் சொல்லி முடித்தவுடனே மதன் என்பவன் எழுந்து வணங்கிநின்று சொல்லத்தொடங்கினான். எப்படியென்றால்,

பெருஞ் செல்வத்தைக் கொண்டு மனமகிழ்வதே உருவமாகப் பெற்ற நானும் என் தேவியாகிய மறதியும் கூடினால் எங்களை வெல்லக் கருதிக்கொடிகட்டுவோர் ஒருவருமில்லை. நானும் ஐந்து தலைகளையுடையேன் என்கிற மதச்செருக்கா லன்றோ பிரமனும் சிவபெருமானால் நான்முகனானது? வச்சிராயுதனாகிய இந்திரன், துர்வாசமுனிவர்கொடுத்த பூமாலையை வாங்கி யெறிந்தது அவனேறின யானைமதமா, அவன் மதமா, ஆராய்ந்துபார்! அற்பருடைய மனதில் நிலைபெற்றிருந்து, பரிசுத்தருடைய சன்மார்க்கத்தையும் இகழ்விப்பேன். சேதிதேசத்தரசனாகிய சிசுபாலன் கிருஷ்

ண்ணைவைததும், துரியோதனுதியர் இகழ்ந்ததும், இராவணன் நந்திதேவனை உதாசினமாய்ப் பேசினதும், நகுடராஜன் சத்தருஷிகளை அவமதித்துப் பேசினதும், துந்துபியென்பவன் திருமாலைப் போர்செய்ய அழைத்துக் கைலைமலையையசைத்து வாலியோடு போர்செய்து மாண்டதும், பின்னும் அநேகமான அநர்த்தங்கள் நேரிடுதற்குக் காரணமாயிருப்பதும் நானல்லவா? என் மனைவியாகிய மறதியின் சிறப்பினை யெடுத்துச்சொல்ல வல்லவர் யாவர்? அறிவு, கல்வி, சத்தியம், அன்பு, உறவு, நட்பு, ஒழுக்கம், முதலானவைகள் மறதிவந்த காலத்தில் என்ன பயன் தரும்? பிரகலாதன் முற்காலத்தில் தன்னைக்காப்பாற்றினவனுகிய திருமாலோடு பிற்காலத்தில் போர்செய்ததும், சுக்கிரீவன் தனக்கு வாழ்வைக் கொடுத்த ஸ்ரீராமனிடத்திற் சொன்னபடியே செல்லாது தாமதித்ததும், மனமகிழ்ந்துகூடி நாளை உன்னிடத்துக்கு வருவேன் என்று சகுந்தலைக்குச் சொன்ன துஷ்யந்தன் அதனை மறந்திருந்ததும், அறிவுடையோராகிய அநேகரை, கள், அவினிமுதலியவற்றினும் அற்பர் செல்வத்தினும் கலந்திருந்துமயக்கி, உன் வசத்திற்சேர்க்கிற எம்மை யெதிர்த்துவெல்ல வல்லார் யாவரென்றுசொல்லி முடித்தான். மதன் இவ்வாறு சொன்னவுடனே, மச்சரன்வந்து வேந்தனை வணங்கிச் சொல்லுகின்றுன். எப்படியென்றுல்,

அந்நியர்க்கு உண்டாயிருக்கிற அறிவு அழகு செல்வம் முதலியவற்றைக்கண்டு சகிக்காமையாகிய வுருவுடையேன் ஆகிய என்னையும் மனம் புழுங்கிக் கொண்டிருப்பதே உருவாகவுடைய என் மனைவியாகிய அசூயையையும்வெல்லவல்லவர் ஒருவருமில்லை. இராவணன் மூன்றரைக்கோடி வருடங்களை ஆயுளாகப் பெற்றிருந்தும் மாயனுல் அது பொய்ப்பட்டழிந்ததும், திலீபன் என்னும் வேந்தன் தொண்ணூற்றென்பது யாகங்கள் செய்து நூறுவது யாகஞ் செய்யும்போது, அவனது

யாகப்புரவியை இந்திரன் கவர்ந்துகொண்டதும், கூனியாகிய மந்தரையின் சொல்லைக்கேட்டு ஸ்ரீராமனைத் தசரதன் காட்டுக்கனுப்பினதும், திருமால் மாவலியிடம் போய் மூவடி மண்கேட்டு அவ்வேந்தன் கொடுக்கச் சம்மதித்து தாரைவார்க்கும் சமயத்தில் சுக்கிரன் தடுத்ததும், ஆகிய இவையாவும் நிகழ்ந்தது என் ஏவலினாலன்றோ? எதிர்ப்பட்டவர்களைத் தாக்கித் துன்பப்படுத்துகிற அம்புகள்போல, அடுத்தவர்களையெல்லாம் பித்தராக்கி மாய்விப்பேன். தேவர் மனிதர் என்னும் இருதிறத்தாரும் அவரவர் செய்த புண்ணிய பாபங்களால் அவற்றின் பயன்களாகிய சுக துக்கங்களை யநுபவிக்கிறார்கள் என்று அமைந்திராமையாகிய பொறுமையை ஒருவரும் வெல்லமாட்டார்கள். நானும் என் தேவியாகிய அசூயையும் இவ்வுலகத்தாரையும் அவ்வுலகத்தாரையும் மனமயங்கச்செய்து, உப்பிருந்த மட்பாண்டம்போல உட்கச்செய்தால் சந்தோஷமென்பது எங்கேயிருக்கும். பகைவனால் உயிர் இழப்போமென்று நினையாமல், குற்றமுள்ள மனத்தை யுடையவராய் விளக்கின் மேற்சென்று விழுந்தழியும் விட்டில்போல, என்மகனாகிய வயிரனால் மடியாதவர் யாவர்? திருமாலானவர் நரசிங்க ரூபமெடுத்ததும், இரணியன் குடலைப்பிடுங்கினதும், அசுரரும் தேவரும் என்றும் மாறாத பகைகொண்டு போரிடுவதும், க்ஷத்ரிய சந்ததி முழுவதும் பற்றறக்கொன்று அவர்களுடைய உதிரத்தால் தன் தந்தைக்கு நீர்க்கடன் செய்வேனென்று சபதஞ்செய்து அவ்வாறே பரசுராமன் செய்ததும், வீமனானவன் துச்சாதனனைக்கொன்று அவனுதிரங்குடிப்பதாய்ச் சபதஞ்செய்ததும், அந்தச் சபதம் நிறைவேறின வுடனே அச்செய்தியைக் கேட்ட துரோபதையானவள் தனது விரித்த கூந்தலை முடித்ததும், இவையாவும் என் மகன் செய்கைகளாம். அவன் மகனாகிய அக்ரமன் பகைவரையெல்லாம் சுடுகின்ற செந்தீயை நிகர்த்தவன். அவ

னது கொடுமையை யெடுத்துச் சொல்லவல்லவர் யாவர்? சிவபெருமான் தாருகாவனத்திருடியர் மனைவியரது கற்பென்கிற வேலியை யழித்ததும், விஷ்ணுமூர்த்தியானவர் மோகினிவடிவங்கொண்டு தபோதநருடைய அறிவை மயக்கினதும், ஸ்ரீராமரானவர் மறைந்திருந்து வாலியைக்கொன்றதும், வசிஷ்ட முனிவன் கல்மாஷபாதன் என்னும் அரசனைச் சபித்ததும், அந்த வசிட்டமுநிவனை அரசன் தானுஞ் சபிப்பதாக நீரைக் கையிற்கொண்டதும், காட்டில் விருந்திட்ட வசிட்டனது காமதேநுவை எனக்குக் கொடுக்கவேண்டுமென்று சொல்லி, அந்த வசிஷ்டன் கொடாமையால் விசுவாமித்திரன் தன் சேனைகளோடுவந்து போர்செய்ததும், தொடையில் அடிப்பது தருமமல்லவென்று வீரர் சொல்லுகின்ற கதாயுத்தம் செய்யுங்காலத்தில் துரியோதநன் தொடையில் வீமன் அடித்ததும், அகஸ்திய முனிவரைக்கொண்டு கடலைக்குடிக்கச்செய்து அந்தக் கடலில் ஒளித்திருந்த விருத்திராசுரன் யோகநிஷ்டைகூடி அஞ்சலியஸ்தனாய் நிற்குஞ் சமயத்தில் அவன் தலையை இந்திரன் அறுத்ததும், பகைவனை உன் மகன் வென்றானலன், பேடியே வென்றான் என்று சொலக்கேட்ட விராடராஜன், கங்கபட்டனென் றுருமாறியிருக்கிற தருமபுத்திரனைச் சூதாடு கருவியாலடித்ததும், இந்தப் பூபாரத்தை நீக்கும்பொருட்டு அவதரித்த திருமாலானவர் பாண்டுபுத்திரரால் பகைவருக்கெதிரேசெய்த தொழிலும் என் பேரனாகிய அக்கிரமனானவன் செய்ததேயன்றி வேறு யாவர் செய்தார்? ஆதலால் மகிழ்ச்சியையும், சந்தோஷத்தையும், அவிரோதனையும், நியாயனோடு நீறுபடுத்தி, யாவரையும் உன் பாதங்களில் வீழ்ந்து வணங்கச்செய்வேன் என்றான். அவன் அப்படிச் சொன்னவுடனே, மாநன் என்பவன் வந்து அரசனை வணங்கி, மண்ணுலகத்திலும் விண்ணுலகத்திலும் எனக்கெதிராவார் யாவரென்று இவற்றைச் சொல்லத்தொடங்கினான், எப்படியெனின்,

எத்திறத்தார்க்கும் வணக்கமென்பதை மாற்று வதே வடிவாகக்கொண்ட எனக்கும் என்மனைவியாகிய இச்சைக்கும் எதிர்நிற்போர் ஒருவருமில்லை. பார்வதியார் தன் தந்தைசெய்த யாகத்துக்கு வந்தபோது அவன் மரியாதை செய்யவில்லையென்று உயிர் வாடினதும், அந்த அவமானம் பொறாமல் சிவபெருமான் அந்தத் தக்கனுகிய யாமனது சிரங்கொய்ததும், தேவர்களைத் துன்பப்படுத்தினதும் என்னேவலால் நிகழ்ந்த காரியங்களன்றோ? வளைகளிலுள்ள பெடை நண்டானது எதிர்சென் றழையாதாயின் ஆண் நண்டானது உயிர் நீங்கும்; கவரிமான் தன் மயிர்க்கற்றையில் ஒரு மயிர் உதிர்ந்தாலும் அல்லது சிக்குப்பட்டாலும் தன்னுயிரை விடுகின்றது. இந்தச் செய்தியைக்கண்டவர் என்னை விட்டிருப்பார்களா? மடுவில் குளிக்குங்காலத்தில் துரியோதநன் வீமனையிகழ்ந்து அவமானப்படுத்தினதனுல், வீமன் அந்த அவமானம் பொறாமல் அந்தத் துரியோதநனைக் கொல்லும்படி நேரிட்டது. வாலியானவன் தன் மனைவியாகிய தாரை சொன்னசொல்லைக் கேளாமல் வந்து ஸ்ரீராமபிரானுல் கொல்லப்பட்டது மானத்தின் செய்கையன்றோ? தேவர் முதலிய யாவரும் தத்தம் நிலையினின்று தாழ்வதே அவமானமாகும். நானும் என் மனைவியாகிய இலச்சையும் என் மகனுகிய உற்சாகனும் கூடினுல், தாந்தி, தமன் முதலிய பகைவரைவென்று மண்ணுலகும் விண்ணுலகும் ஒருமிக்க வந்து உன் அடிவணங்கச் செய்வோம் என்றுன்.

அதன்பிறகு சங்கற்பன் என்பவன் வந்து மோகராஜனைவணங்கி, என்னை வெல்லுவோர் ஒருவருமில்லையென்று தன் வல்லமையைச் சொல்லுவானுயினன். எப்படி யென்றுல்,

இந்திரன் முதலான தேவரும் அசுரரும் சூரிய சந்திரரும் அஷ்டதிக்குப்பாலகரும் பிறரும் என் ஏவ

லையன்றித் தமக்குரிய செய்வினைகள் ஒன்றுமில்லையன்றோ? பிரமன் உலகத்தைப்படைப்பதும், திருமால் அதனைக் காப்பதும், சிவன் அதனை அழிப்பதும் ஆகிய இந்தச் செயல்களெல்லாம் என் காரியங்களல்லவா? சங்கற்பமாகிய நான் முயல்விப்பதை என் மனைவியாகிய கற்பனையன்றி வேறு செய்விக்கவல்லவர் யாவர்? அந்தக் காரியங்களைப் பல விகற்பப்படுத்துகிற என் புதல்வனாகிய விகற்பன் வலிக்கு எதிரே நிற்பார் யார்? என் மகனாகிய விகற்பனும், அவன் மனைவியாகிய யோசனையும், அவன் மகனாகிய வெகுமுகனும் கூடி நின்றால் இவர்களுக்கெதிரே நிருவிகற்பன் முதலானவர்கள் நிற்பார்களோவென்று சொல்லி முடித்தான்.

அதன்பின்னே இராசதன் என்பவன் வந்து அரசனை வணங்கி, விண்ணுடரில் பிரமதேவனும், மண்ணுடரில் அரசரும் என் ஏவலை மறுக்காமற் செய்வார்களானால் மற்றவர்களைச் சொல்லவும் வேண்டுமோ! என்று சுருக்கமாகச் சொல்லி நின்றான்.

அதன் பிறகு தாமதன் என்பவன் வந்து வணங்கி, என்னைவிட்டு நீங்கினவர் பதினான்கு லோகங்களிலுமில்லை. முதல்வனாகிய சிவபெருமானும் என் கட்டளையை மேற்கொண்டல்லவா உலகங்களைச் சங்கரிக்கத் தொடங்கினான். அவனே யவ்வாறானபோது என்னோடெதிர்த்துப் போர்செய்ய வல்லார் வேறு யார்? ஸ்ரீராமபிரானானவர் ஏழுநாளளவும் தர்ப்ப சயநத்திற்கிடந்து பிரார்த்தித்தும், வருணன் வராமல் தாமதித்து அவருக்குக் கோபத்தை யுண்டாக்கித் துன்பத்தை யநுபவித்தது யார் செய்தகாரியம்? என் காரியமன்றோ! இராக்காலத்தில், அடர்ந்தகாட்டில், இளமைப் பருவத்தையுடைய தமயந்தியைவிட்டு நளராஜன் பிரியும்படி செய்தது யார்? என் மகளாகிய நித்திரையல்லவா! அவளால் தமது வளங்களை யிழந்தவர்களுக்கு ஒரு எல்லையுண்டோ? பால், தேன், அமிர்தம், மாதர்

போகம் முதலியவைகளையும் வேம்பாக வெறுத்து, என்மகளை விரும்பாதவர் உலகத்தில் ஒருவருமில்லை யென்றான். பெரிய வுலகமானது அசத்தோசத்தோ, பிரமப்பொருள் ஒன்றோ இரண்டோ, யாரறிந்தவர் எனச் சித்தந் தடுமாறச் செய்கிற சந்தேகன் எனப்படுகிற எனக்கெதிரே அந்த நிச்சயன் என்பவன் நிற்பானோ என்று சொல்லிமுடித்தான்.

அதன்பின்னே சாருவாகன் வந்து வணங்கி, மாறுபாடாகப் பெறவேண்டிய பேற்றை மறுமையிற் பெறுவோமென்று வெவ்வேறுவகையாய்ச் சொல்லுகிற விதண்டாவாதிகளையெல்லாம், மாதர்போகமே நற்கதியாவது, இதினும் வேறு நற்கதி யில்லையென்று சொல்லி எல்லாரையும் மருட்டிவிடுவேனென்றான். அதன்பிறகு புத்தன்வந்து வணங்கிநின்று, உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் என்பவை அழிந்தழிந்து கெடுவதே பந்தம், முழுதும் அற்றொழிவதே இன்பவீடென்று சொல்லிப் பகைவரை வெல்லுவேனென்றான்.

அதன்பிறகு அருகன்வந்து வணங்கிநின்று, கடல்போலப் பெருகின்ற வினைப்பயன்களையெல்லாம் அநுபவித்து அவை தொலைந்தபிறகு வந்து பொன்னெயில் வட்டத்திற் பொருந்துதலே முத்தியென்றுசொல்லிப் பகைவரைப் போரில் வெற்றி கொள்வேனென்றான். அப்பால் கலியன் என்பவன் வந்துவணங்கி, முற்காலத்தில் நளராஜன் கால்கழுவுஞ் சமயத்தில் பாதிதினையளவு கால் நனையாதிருந்ததே ஹேதுவாகக் கொண்டு அவனுக்கு அளவற்ற துக்கத்தை விளைத்தது நானன்றோ? என்னை வெல்லுவோர் யாவர் என்று சொல்லினான்.

இவ்வாறு சாருவாகன், புத்தன், சமணன், கபாலன் முதலியோர் தத்தம் வல்லமைகளைச் சொல்லி நின்ற சமயத்தில், மோகவேந்தன் பக்கத்தில் ஒரு ஆச

னத்தின் மீதிருந்த் ஆங்காரன் வந்துநின்று தன் மேன்மைகளெல்லாவற்றையும் சொல்லத் தொடங்கினன். எப்படி யென்றால்,

தேகாபிமாநத்தைப் பற்றிக்கொண்டு நான் என்னுஞ் செருக்கையே வடிவாகக் கொண்டிருக்கிற என்னாலும், பொருள் சம்பாதித்து அதின்மீது அதிக ஆசை வைத்து இது என்னது என்பதே வடிவாயிருக்கிற என் மனைவியாகிய அகந்தையாலும் அஹங்கரியாதவர் ஒருவருமில்லை. பேரினலும், பிறப்பினலும், செல்வச் சிரினலும், கல்வித்திறத்தினலும், மற்றெல்லாவிதத்தாலும் நானே பெரியன் என்கிற என்னைச் செயிக்க வல்லார் யாவர்? பிரமனும் திருமாலும் தம்மைத் தாம் பெருமைப்படுத்தி அகங்கரித்தபோது அதை அடக்குவோன் போலச் சிவபெருமான் இடையே தோன்றி என் அடிமுடிகளைக் கண்டு வாருங்களென்றதும் என் குணத்தைக் கொண்டல்லவா? எம்மையன்றி ஈசன் என்பவன் யார் என்று அகங்கரித்த இந்திரர் ஐவருமல்லவா தருமன், பீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன் என்னும் ஐவராய் இவ்வுலகில் வந்து பிறந்தனர். தாரகத்தி னுட்பொருள் யாது அதனைச் சொலக்கடவையென்று தன்னருகே யிருந்த பிரமனைச் சிரசிற் குட்டி, எல்லார்க்கும் குருவாகிய சிவபிரானுக்கும் குருவாகிய குமரவேள் உபதேசித்தது என் செயலாலன்றே? விசுவாமித்திரமுனிவன், பிரமன் முதலிய யாவரையும் நான் படைப்பேனென்று அவமதித்து, அநுஷம் முதலிய நாண் மீன்களைந்தையும் தென்றிசையில் விளங்கும்படி அமைப்பித்தவனும்நானேயன்றோ? நற்றவப்பயனகப் பிரமன் முதலியோரிடத்தில் பெருஞ்செல்வமும் பெருவரங்களும் பெற்ற இரணியன் இராவணன் முதலானோர் நாங்களன்றி ஈச்சுரனென்பவன் யாவன் என்று சொல்லும்படிச்செய்தது என்னையன்றி யாவர்? மிகவுந் தாழ்ந்தவரும் கொடுங்கோபங்கொண்டு

தம்மைத்தாமே மதித்து எம்மைப் பார்க்கினும் ஈசனொருவன் எவ்விடத்துளன் என்று சற்றும் அஞ்சாமல் சொல்லுவதும் என் வல்லமையன்றோ? மமதையும் நானும் எதிர்நின்றால் சாந்தியும் சமனும் எங்களுக்கெதிர் நிற்கவல்லரோ? வேங்கைப்புலிக்கெதிரே பசுக்கள் நிற்குமோ? இவ்வுலகமுழுதும் உனதேயாக்கி விவேகன் முதலானோரை யடக்கிவிடுவே னென்றான். இவ்வாறு சொன்ன தன்படைஞர் வலிமையெல்லாங் கேட்டு மோகவேந்தன் மிகுதியாய் மனமகிழ்ந் திருந்தான்.

காமனாதியர் வீராலாபச்சருக்கம் முற்றிற்று.

---

## 27-வது நிருபகாதியர் வீராலாபச் சருக்கம்.



அப்படி யிருக்கும்போது, நியாயன் ஒரு நொடிப் பொழுதிற்சென்று உலகிலுள்ள மார்க்கங்களெல்லாவற்றையு மறிந்துவந்துவிவேகனை அடிவணங்க,அவனைநோக்கிமோகனுடையஎண்ணம் யாதெனவிவேகன் வினவ, நியாயன் அந்தமோகன் முதலானோர் நியாயநெறியிற் கட்டுப்படார்; போர்செய்து அவர்களை வெல்லவேண்டுமேயன்றி வேறு வழியில்லை யென்றான். இதைக் கேட்ட விவேகன் நன்று நன்றென்று நகைத்து நிருபகாதியரைநோக்கி, நாம் படையெடுத்துப்போய் மோகனாதியரை வெல்லுதல் வேண்டும் ஆதலால் நீங்களனைவரும் ஆயத்தமாய் வரவேண்டு மென்று நியமிக்க, அவர்களெல்லோரும் விவேகனை நோக்கி, பகைவரை வெல்லுதற்கு நாங்களிருக்கத் தேவரீரும் அந்தக் காரியத்தில் பிரவேசிக்க வேண்டுமோ என்றார்கள். அது கேட்ட விவேகன் நிருபகாதியரைநோக்கி, நீங்கள்காமனாதியரை எவ்வாறு வெல்லுவீர்களென்று வினவ, நிருபகன் விவேகனை நோக்கி, சுவாமீ அநங்கனாகிய காமன்

புஷ்பபாணத்தைக்கொண்டு போர்செய்யவருவான் ஆயி னும் அவனே வெல்வது எமக்கொரு பொருளல்ல. விரும்பத் தகுந்த பொருள்களில் உள்ளகுற்றங்களெல் லாவற்றையும் விரித்து அதனிழிவெல்லா மறிவித் தலேசொருபமாகிய எனக்கு வாய்த்த மனைவி யுக்தி மாதோடு நான்யுத்த சந்நத்தனாய் நின்றால் என்னை வெல்லவல்லவர் யாவர்? காமனுக்குண்டா யிருக்கிற வன்மை யெல்லாம் மாதரேயன்றி வேறல்ல. அவர்களு டைய பெண்மைக் குணங்கள் பாமர ஜநங்களை மயக்கு மேயன்றி எம்போல்வாரை மயக்கவல்லவோ? குழும்பி யொழுகுகின்ற காதை வள்ளையென்றும், புழுக்களா கிய பேன்களடர்ந்த தலைமயிரை மேகமென்றும், பீளை யொழுகாநின்ற கண்களைக் குவளைமலரென்றும், பல் லாகிய எலும்பை முத்தென்றும், எச்சில் வடிகிற வாய் விளிம்பைப் பவளமென்றும், மார்பில் திரண்டெழுந்த இரண்டு சிலந்திகளை யானையென்றும், அவை கச்சுக் குள்ளே யடங்கி யிருந்தும் எம்முயிரைக் கவர்கின்றன வென்றும் பிதற்றுகிற பேதையர்போலப் பிராந்தி யடைந்தவர் யாவர்? இன்னமும் சளி நீரொழுகின்ற நாசியையும் கோழை யெச்சில்களையு முடைய முகத் தைப்பூர்ண சந்திர பிம்பமென்றும்,நரம்பைக்கொண்டு கட்டப்பட்ட எலும்புருவாகிய தோள்களை மூங்கிலென் றும், குடல், நரம்பு, தசை, வழும்பு, உதிரம், எலும்பு, சுக்கிலம், புலால் நாற்றம் முதலியன நெருங்கின ஒரு பொந்தின்மேல் ஒரு தோலை விரித்து மூடி பல துவா ரங்கள் தோறும் அருவருப்பு நீங்காத மலமொழுகக் கண்டும் அந்த மலபாண்டத்தை மாதரென்று பெய ரிட்டுக் கொண்டாடுகிறார்கள். இதென்ன பாவம்! மாத ருடைய கோலாகலங்களை யெல்லாம் ஆராய்ந்து தெளி யாத மனத்தை யுடையவர்களே அம்மாதரை விரும்பு வார்கள்; ஆராய்ந்தவர்கள் அவர்களை அருவருத்து வெறுப்பார்கள். யவ்வநபருவத்தில் தமது அவயவ

சௌந்தரியத்தைக் காட்டி ஆடவரை மயக்குகின்ற மாதர்கள் முதுமைப் பருவமடைந்து கொக்குப் போல் தலைமயிர் வெளுத்துக் கையில் கோல்கொண்டு அதுவே கண்ணாக நடப்பதைக் காண்கிறோமல்லவா? மேலும் அந்த மாதர் தம்முடம்பின் அருவருப்பை நோக்கியன்றோ பட்டாடையால் அவ்வுடம்பு முழுதும் மூடுவது? அன்றியும் தம்முடம்பின் துர்க்கந்தம் வெளிப்படாதிருத்தற்கன்றோ சுகந்தத்தையுடைய மஞ்சள் குங்குமக் குழம்பு சந்தன முதலியவற்றைப் பூசிக்கொள்வது? அவ்வாறன்றிப் பசிதீரும்பொருட்டோ அவற்றைப் பூசிக்கொள்வது? இன்னும் அவர்கள் பல்விளக்கி நாவழித்து வாயை நீரால் கொப்புளித்துத் தாம்பூலாதிகள் தரிப்பது யாதுக்கு? தம்மூத்தைவாய் திறந்தால் தீநாற்றம் வெளிப்படுமெனக் கருதி அதனை மறைக்கும் பொருட்டன்றோ! அன்றியும் பட்டாடை யணிந்து ஆபரணங்கள் பூண்டு தம்முடம்பை யலங்கரித்துக் கொண்டாலன்றித் தமக்கென்று ஒரு இயற்கை யழகு அவர்களுக்குண்டோ? சநகாதியர் நால்வர், பிருங்கி, தத்தாத்திரேயர், அநுமார், சுகர், நாரதர், துருவாசர், சடபரதர், போதாயநர் முதலானவர்களை மாதரது அழகு என் செய்தது? பீஷ்மரை முற்காலத்தில் ஒரு பெண்ணானவள் தன்னைக் கூடும்படி முயன்றும் அந்த முயற்சி பயன்படாமையால் அவர் குருவைக்கொண்டு சொல்லுவித்தும் அதுவும் பயன்படாமையால் பரசுராமரைக் கொண்டு போர்செய்வித்தும் அவள் எண்ணம் முடிவு பெறவில்லையன்றோ? என் மனையாளாகிய யுக்தியென்பவளைக்கொண்டு இவ்வுலகத்திலுள்ள மாதராசையைவென்றால் காமதேவன் இறவாதிருப்பானோ? மன்மதனையும் அவன் மனைவியாகிய இரதியையும் நான்வென்று, என் மனையாளாகிய யுக்தியைக்கொண்டு யோசனையையும் கற்பனையையும் தோற்பித்து, சந்தேகனை என் மைந்தனாகிய நிச்சயனைக் கொண்டு நாசப்படுத்துவேன் என்றான்.

நிரூபகன் இப்படிச்சொல்லுஞ்சமயத்தில்,பொறை யென்பவன் எழுந்து விவேகனை வணங்கி, கோபனை நான் உயிர்வாங்குவேனென்று இவைகளைச் சொல்லத் தொடங்கினன். எப்படியென்றால், பிறர் கோபங்கொண்டு செய்கின்ற எவ்வகைப் பெரும்பிழைகளையும் மனத்திற்கொள்ளாத பொறுமையேவடிவாகக்கொண்ட எனக்கும், எனது பொறுமைத் திறத்தை வற்புறுத்துதலையே வடிவமாகக்கொண்டு என்னோடு கூடிவாழ்கின்றமரியாதைக்கும் எதிர்நிற்க வல்லார் யாவர்? வைதாரையும் வாழ்த்தி, அவர் குற்றங்களைச் சிறிதும்நோக்காத என் மேன்மைபோல வேறொருமேன்மையுண்டோ? எல்லாருக்கும் பொதுவாயிருக்கிற பரம்பொருள்போல, எவரெவர்க்கு எதுவெது இயற்கையோ அவ்வவ்வியற்கைகளுக்குப் பொருந்தநடப்பதுபோல இன்பந்தருவது வேறொன்றுமில்லை. கீழ்மக்கள் ஒரு தீச்சொல்லைச் சொன்னால் அவர்களுக்கெதிரே வாய் திறவாமல் மௌநமாயிருப்பதே அவரை வெல்லுதற்குரிய வுபாயமன்றி வேறுபாயம் யாது? ஒருவனிடத்தில் கோபமாகிய தீ மூண்டபோது, அதனை எனது முகமலர்ச்சியும் நகையும் இன்சொல்லுமாகிய பெருவெள்ளத்தினால் அவித்துவிடுவேன். நான் இன்சொற்சொல்லுங்காலத்திலும் அதனைப் பொறாது பிறர் என்னையடித்தாலும் அவரை வெறுத்துக்கொள்ளாமல் இது நமக்கு நல்ல அநுபவமாகுமென்று கொள்வேன். இந்தப் பூமியானது தன்மீது மலசலாதிகள் விடுத்தும், தோண்டியும் பலவாறு உபத்திரவப்படுத்துகிற மக்கள் முதலாகிய சீவர்களைக் கோவித்துக்கொண்டது எக்காலத்தாயினு முள்ளதோ? தருமபுத்திரனானவன் தன் மனைவியாகிய துரோபதையை இராஜசபையில் துகிலுரியச்செய்தபோது என் செய்தான்? நகை, முகமலர்ச்சி, இன்சொல் முதலிய என் சின்னங்கள் கோவத்தை வென்றுவிடும் என்பதில் யாதொரு சந்தேகமுமில்லை.

ஒருவன் என்னை வாழ்த்தினும், வசையுரைத்தாலும், சந்தனம் பூசினும், சதையை யறுத்தாலும் இந்தத் துன்பங்களெல்லாம் நாம் முற்காலத்திற் செய்த தீவினையால் நேர்ந்தனவென்று மனத்திற்கொண்டு கோபத்தை வெல்லுவேன். என் மகனாகிய அடக்கன், ஆமையானது தனது ஐந்துறுப்புக்களையும் ஒரு துன்பம் நேரிடாதிருக்கும்பொருட்டுத்தன் உடம்பில் அடக்கிக்கொள்வதுபோல, ஐம்புலன்களையும் ஒரு தீமை நேரிடாதிருக்கும்படி தனக்குள்ளே யடக்கிக்கொள்வான். அதனால் காமதனைத் தலைகவிழும்படி செய்வான். என் மகன் வேறொருவன் உண்டு, அவன்பேர் சன்மானன். அவன் அவமானன் என்பவனைக் கண்ணிற்காண வொண்ணாதபடி அழித்தேவிடுவன். என் தாரமாகிய மரியாதை யென்பவள் எவ்வுயிர்களுக்கும் மேன்மையையுண்டாக்கி அவமரியாதையை அழித்துவிடுவாள். என்றிவ்வாறு பொறையென்பவன் எடுத்துச்சொல்லி முடித்தவளவில், விராகன் எழுந்து விவேகராஜனை வணங்கிநின்று, அந்தக்கொடிய லோபனை யான் வெல்வேனென்று இவற்றைச் சொல்லத்தொடங்கினான். எப்படிப்பட்ட சிறந்த பொருளையாயினும் இகழ்ந்து விடுதலே வடிவமாகிய என்னையும், அப்பொருளைக் கனவிலும் நினைக்காமல் முற்றத்துறத்தலே வடிவமாகக்கொண்ட என் மனைவியாகிய விரக்தியையும் வெல்ல வல்லார் இவ்வுலகத்தில் ஒருவருமில்லை. பொருளுடையோர்க்கு நெருப்பினாலும் கள்ளராலும் பயமுண்டு; அரசருக்கு வேற்றரசரது பகையாகிய பயமுண்டு; உயிரை விரும்பினவர்களுக்குக் காலபயமுண்டு; வைராக்கியர்க்கு ஒருபயமுமுண்டாகாது. பேராசையினால் கீழ்மக்கள் பின் சென்று உழன்றும் தம் வறுமை நீங்கப் பெறாதவர்சிலர் இவ்வுலகத்தில் உண்டல்லவா? வருந்தி முயன்றாலும் வராத காலத்தில் வராது. முயலாத காலத்திலும் வருங்காலமானால்

அப்பொருள் தானேவரும். ஒருவன் இறக்கும்போது அவன்தேடின பொருள்களில் ஒன்றுயினும் அவனேடு தொடர்ந்து போவதைக் கண்டிலேம். தம்முயிர் நீங்கும்படி நேரிட்டாலும் தம்முடம்பு வற்றி எலும்புக் கூடாய் விட்டாலும் தமது வறுமையை நல்லோர்கள் தம்மீது மிகுந்த அன்புள்ளவரிடத்திலும் சொல்லமாட்டார்கள். எவ்வளவு சோறுண்டாலும் சாணளவாகிய வயிறு நிறைவதில்லை. அதை ஆலோசித்து அமைந்திராமல் கண்டவர்களைப் பின்சென்று கையேற்பது யாதுக்கு?காட்டில் கனிகாய் கிழங்குகளுண்டு, காணறு முதலியவற்றில் நீருண்டு, வாசஞ்செய்வதற்கு மலைக்குகை முதலியவையுண்டு, நடப்பதற்கு ஞான மார்க்கமுண்டு, ஆதலால் எமக்கு இனிதாகப் பொழுது கழியும். எனக்கும் என் மனையாளாகிய விரக்திக்கும் எதிரே லோபனும் அவன் மனையாளாகிய இச்சையும் வந்து நிற்கவல்லரோ? அவர்களா லுண்டாகிற பாசபந்தங்களை ஒரு நொடிப்பொழுதில் நாங்கள்வெல்லக் கடவோம். பிறக்கும்போது கூடப் பிறப்பவரும் இறக்கும்போது கூட இறப்பவரும் இல்லை. இடையாகிய காலத்தில் வந்து பொருந்தியிருக்கிற தாய் தந்தை மனைவிமக்கள் முதலியோர்கள் மெய்புறவின ராவரோ? பிறவிதோறும் உண்டாகி வருகிற தாய் தந்தை முதலானேர்க்கு ஒரு அளவுண்டோ? துக்க சுகங்களை யநுபவிக்கிற இவ்வுயிர் பிரியும்போது பறவைவிட்டு நீங்கின கூடுபோல வறிதானல், வேறு மெய்யுறவு யாது? அநேக அரசர்கள் துறவைப்பார்க்கிலும் சுகமில்லையென்று இந்த இல்லறவாழ்க்கையைவிட்டு நீங்கிக் கானகமடைந்து தவஞ்செய்து வீடுபெற்றிருக்கிருர்கள். காதிமைந்தனுகிய விசுவாமித்திரன் இல்வாழ்வில் இன்பமிருக்கின்றதா, துறவில் இன்பமிருக்கின்றதாவென்று நிச்சயிக்கும்பொருட்டு வசிட்டருக்கெதிரேபோய்ச் சோதித்தது சுகப்பேறு அன்றே? பிரமன், விஷ்ணு, உருத்திரன் என்னும் திரிமூர்த்திகளாலும் தரப்படும் இன்பம்

எம்மால் தரப்படும் இன்பத்துக்குச் சமானமாகுமோ? என்னோடும் என் மனைவியோடும், லோபனும் அவன் மனைவியும் எதிர்த்துப் போர்செய்ய வல்லரோ? கடலோடு கிணறு எதிர்த்து வெல்லுமோ? என்றிப்படி விராகன் சொல்லி முடித்தவுடனே, சந்தோடன் எழுந்து விவேகனை வணங்கி நின்று தனது ஆற்றலைச் சொல்லத் தொடங்கினன். எப்படியென்றால்,

ஒரு பொருள் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் மனப்பூர்த்தியே வடிவமாகக்கொண்ட நானும், பெற்றதைக் கொண்டுமகிழ்தலே வடிவமாகக்கொண்ட என்மனைவியாகிய மகிழ்ச்சியும் புறப்படுவோமானல் எமக்கெதிரே நிற்கவல்லார் ஒருவருமில்லை. மனத்தால் நன்றாயாராய்ந்துதெளிந்து இன்ப நிலையாகிய அழியாப் பொருளை யடைந்திருப்பவர் நீர்க்குமிழிபோல அழியும் பொருளை ஒருபொருளாய் நினைப்பரோ? இன்பத்தைப் பார்க்கினும் துன்பமே சுகமெனக் கருதிமகிழ்கின்ற என்னிடத்தில் மச்சரன் வந்து போர் செய்வது எவ்வாறு? தாருகாவனத்திருடியர் மழுமான் முதலிய பொருள்களை வருவித்துச் சிவபெருமான் மீதேவின்போது அவர் அவற்றையெல்லாம் ஏற்றுக்கொண்டது சந்தோடன் என்று சொல்லப்படுகிற என்காரியமல்லவா? முற்காலத்தில் ஸ்ரீராமரானவர்தமக்கு முடிசூட்டத்தசரதன் முயன்றபோதும், அதற்கு மந்தரையின் துர்ப்போதனையால் கைகேசி அந்தக் காரியம் நிறைவேறவொட்டாமல் தடுத்து அவரைச்சடை முடிசூடச்செய்த போதும் அவரது திருமுகம் செந்தாமரைமலர் போலப் பொலிவடைந்திருந்தது என் செய்கையாலல்லவா? சூரியனுக்கெதிரே இருள் நிற்குமோ? சிங்கத்துக்கெதிரே யானை நின்று போர் செய்யவல்லதோ! அது போலவே பிறர்செல்வங்கண்டு மகிழ்கின்ற எனக்கெதிரே மச்சரன் நிற்கவல்லனோ? வல்லனல்லன், ஆதலால் அந்த மச்சரனை நானே உயிர்வாங்குவேன்;

அவன் மனைவியாகிய அசூயையென்பவளையும் என் தேவியாகிய மகிழ்ச்சியைக் கொண்டு கொல்விப்பேன்; என் மகனாகிய அற்புதயனைக்கொண்டுநாசனைக்கொலை செய்விப்பேன் என்றான். சந்தோடன் இவ்வாறுசொல்லி முடித்தவுடனே, தாந்தி நாயகனாகிய தமன்வந்து விவேகராஜனைவணங்கிச்சொல்லத் தொடங்கினான். எப்படியென்றால், பொங்கிய பாலில்வார்த்த நீர்போலவும் மதயானையை அடக்குகின்ற அங்குசம் போலவும், கருத்தினின்றும் விம்மியெழுகின்ற மானனைவென்றடக்குகின்ற என்வல்லமைக்கு நிகரான வல்லமையுள்ளவர் வேறுயாவர்? முற்காலத்தில் சிவபெருமான் மதுரையில் வையையாற்றங்கரையில் மண் சுமந்தும், பாண்டியனால் பிரம்படிபட்டும், வளையல்விற்றும், பாணனுக்காக விறகு சுமந்தும் மானனதுமேன்மை குன்றும்படி செய்த திருவிளையாடல்களெல்லாம் என்வல்லமையால்நிகழ்ந்தனவல்லவா? ஸ்ரீகிருஷ்ணபகவான் திருவாய்ப்பாடியில் வெண்ணெயைத்திருடியுண்டதும், மத்தினால் அடியுண்டதும், பசுக்களைமேய்த்ததும், உரலிற் கட்டுப்பட்டதும், அருச்சுநனுக்குத் தேர்ப்பாகனாயிருந்ததும் மானனுக்கு வைரியாகிய என்னால் நிகழ்ந்தனவல்லவா! உடம்பைச் சுமையாய் நினைத்துப்பரம்பொருளையே நோக்கிக்கொண்டிருக்கிற மேலோர்கள் இது துக்கமென்றும் இது மானமென்றும் இது ஈனமென்றும் கருதி இவற்றிற்கு அஞ்சுவார்களோ? கற்பாறைமேல் பந்தை ஓங்கியடித்தாலும் அந்தக்கற்பாறைக்குப் பந்தினால் ஒரு கெடுதியுண்டாகுமோ? இலச்சையைத் தாந்தியைக்கொண்டு பெருமையழித்து, மானனது புலைத் தொழிலை யானே யழித்து, என் புதல்வனாகிய தனிவத்து நோக்குவானைக் கொண்டு விடயாநந்தனது செய்கையை நீக்குவேன் என்றான்.

அதன் பிறகு, சமன் எழுந்து விவேகனை வணங்கிக் கீழ்வருமாறு சொல்லத் தொடங்கினான். அறிவா

கிய நல்ல மந்திரியால், மனமாகிய அரசன் தீநெறிக்கட் செல்லாமல் பொறிவாயைந்தனையும் அடக்கி, நன்னெறிக்கட் செலுத்துவது என் கடமை யாகும். கவுடராஜன் தொடராமல் அவனுண்மையை வென்றடக்கும் வலியுள்ளோர்க்குமுறையேஐம்புலன்களால்அழிகின்ற யானை,சேல்,விட்டில்,வண்டு, அசுணம் என்பன போலக் கெடுதியுண்டாகுமோ?புத்தியிற்றோன்றுகின்றஉண்மையாகிய பொருளைப் பஞ்சேந்திரியங்களாகிய கள்வர்கள் திருடிக்கொண்டு போகாமல் காப்பாற்றித்தமது திடமென்கிற களஞ்சியத்தில் பத்திரப்படுத்தி வைப்பவருடைய ஞானச்செல்வத்துக்கு ஒரு நாளும் அழிவுண்டாமோ? ஐம்புலன்களையும் வென்றவர்க்கு எத்தனை செல்வம் கிடைத்தாலும் அவரை ஆங்காரப் பேய் பிடிக்குமோ, பிடியாது. அகங்காரன் மனைவியாகிய மமதையென்பவள் என் தேவியாகிய சாந்தியின்கடைக்கண் பார்வை படுமுன்னே தன்வலி குன்றி அழியமாட்டாளோ? என்மகனாகிய அகமுகனது வீரத்தன்மை சொல்லலாகுமோ? யானையானது சிங்கத்துக் கெதிரே நில்லாததுபோல, வெகுமுகன் என் மகனாகிய அசுமுகனுக்கெதிர் நிற்பனோ? ஆங்காரனது வலியை இப்பொழுதே அழித்து, இவ்வுலகத்துக்கு ஒரு கெடுதி நேரிடவொட்டாமற் செய்வேன்; இதுவே யென் வல்லமையென்றான்.

இப்படி அவன் சொல்லி முடித்தவுடனே சத்துவன் எழுந்து, சுமதிநாயகனாகிய விவேகனை வணங்கித் தன் ஆற்றலைச் சொல்லலுற்றான். எப்படி யெனின்,

வெவ்வேறு வகைகளாகிய உயிர் களெல்லாவற்றுள்ளும் பொருந்தியிருந்தாலும், தானொன்றாகவே தோன்றி அழியாமல் விளங்குகின்ற ❴ஒளியை அறிந்தவாறு சொல்லுவதுவே எனது ஞானமாகும். மேன்மையாகிய பலனைவிரும்பி முயற்சி செய்யாமலும், விருப்பு வெறுப்புகளில்லாமலும் உலகிலுள்ள எல்லாப்

பொருட்பற்றும் நீங்கியிருத்தலே என்செய்கையாகும். அகந்தை ஆசைஎன்பவைகளற்று, சித்திஅசித்தி யென்பவற்றில் அலையாமல், முயற்சியும் திடமுமடைந்திருப்பவன் எவனோ, அவனே நான்மகிழும்படியான கருத்தாவாவன். காரியாகாரியங்கள், பிரவிர்த்திநிவிர்த்தி, அஞ்சுதல் அஞ்சாமை, பந்தமோக்ஷங்கள் என்பவற்றை உள்ளபடி யறிவிப்பது என்னறிவாகும். மனம், இந்திரியங்கள், பிராணன், இவற்றின் தொழிலெல்லாம் நன்றாக யோகஞானங்களில் நிலைபெறச் செய்வதே எனது திருதிக்குணமாகும். முன்சொன்னது விஷம் போன்றும் பின் சொல்வது அமிர்தம் போன்று மிருப்பதாகி மதித்தெளிவிலுண்டாகிற சுகமே என் சுகமென்றான். மேலும் தாமதன் இராசதன் என்பவருடைய பேருமில்லா தொழித்துப் பூர்ண ஞானியருள்ளத்தில் விருப்புட னிருப்பேன். என் மனைவியாகிய புனிதையின் பெருமையைச் சொல்ல வல்லவரும் அறியவல்ல வரும் இல்லை. அவள் அந்தணர்பதம், துளவம், பசுக்கிடை, உயர்ந்தோர் மனம், நதிதீரம், புண்ணியத்தலம், செந்தழல் என்னும் இவற்றிற் சேர்ந்திருந்து மோகனது தொந்த வினைகளைத் தொலைக்கவல்லவள். பிரமாதியர் மூவரும் முப்பத்து முக்கோடிதேவரும் மற்றையர் யாவரும் அந்தப் புனிதையானவள் எவ்விடத்தில் வாழ்கின்றாளோ அவ்விடத்திலே வாழ்வார்க ளென்றால் அவள் பெருமைக் கோரெல்லையுண்டோ? மகிடாசுரனைக்கொன்ற துர்க்காதேவிபோல இவளும் அகீர்த்தி யென்பவள் பெற்ற அசுத்தனை உயிர்வாங்க வல்லவள். என் மகனாகிய தர்மன் அதர்மனை ஒரு கணத்தில் வலிதொலைப்பான் என்பது எல்லாரும் அறிந்தவிஷயமே. என்றிவ்வாறு சத்துவ னெடுத்துச் சொல்லிமுடித்தவுடனே, சமாதாநன் எழுந்து விவேகனை வணங்கித் தனது ஆற்றலைச் சொல்லத்தொடங்கினான். எப்படியெனின், பெரிதாகியயானை

யினிடத்தும் சிறிதாகிய எறும்பினிடத்தும் அமர்ந் திருப்பவன் ஒருவனே யென்று அணுவையும் மேரு வையும் சமமாகக் கருதுகின்ற என்னோடு விரோதித் துப் பகைகொள்வோர் ஒருவருமில்லையென்று சமாதா நன் சொல்லி நீங்கின பிறகு, நல்விருத்தி நாயகிக்குக் கணவனாகிய தவன் எழுந்து விவேகனை வணங்கி, பிர மாதியர் மூவரும் என் குணமாகிய ஏணியைக் கொண் டன்றோ மேல் வீடாகிய முத்தியை யடைகின்றார்கள். படைத்தல், காத்தல், அழித்தல் என்கிற முத்தொழில் களையும் நடத்துகின்ற மும்மூர்த்திகளும் முனிவோர் களும் முத்தரானதும், மாநுடர் தேவேந்திரன் முதலிய தேவராவதும் என்செயல்கொண்டன்றோ? அரிய தவத் தைச் செய்து அதின் பயனை யடையாமல் பயனில்லாத தாகிய இல்லறவாழ்க்கை செய்து வாழ்வடைந்தவர் யாவர்? தவத்தைமுயன்றுசெய்தவர் புல்லரேயாயினும் அவர்களும் பெருஞ் செல்வத்தையும் பேராயுளையும் பெறுவார்கள். பெருந்தவத்தினர் நினைத்தால் அவரது நினைவின்படியே கற்பகவிருக்ஷம், அமிர்தம், அப்ஸரசுக் கள், உச்சைசிரவம், ஐராவதம் முதலிய சுவர்க்கபோகங் களெல்லாம் இந்தப் பூலோகத்தில் வந்து சேரும். என் பாலனாகியபரோபகாரனைப்போல அருள் செய்வோர்யா வர்? அவன் தனது தவப்பயனேயன்றித் தனது உயிரை யும் விரும்பினோர்க்குக் கொடுப்பவன். ஒருசிறுபுறவின் பொருட்டுத்தன் உடம்பின் தசையையறுத்துக்கொடுத் ததுமன்றித் தானும் துலைபுகுந்த சிபிச்சக்ரவர்த்தி யின் செய்கை யாவரால் நிகழ்ந்தது? என் மகனாகிய பரோபகாரனாலன்றோ! மண்ணுலகினும் விண்ணுலகி னும் என் புதல்வனில்லையாயின் புண்ணிய மென்னும் பொருளும் செல்வமும் மேன்மையும் ஒருவருக்கும் கிடையாது. பரத்துரோகனை அருளாகிய வாள்கொண்டு என் மகன் கொல்லும்படி செய்து காமனும் அவன் மனைவியாகிய இரதியும் அரற்றும்படி அவர்கள் புதல்

வனுகிய விடயாநந்தனே என்கைவாளினுற் கொல்வேன் யானென்ருல், முற்காலத்தில் ஒரு பசுவானது உயிர் நீங்கின தன் கன்றின்பொருட்டு வந்து ஆராய்ச்சிமணி யை அசைத்தபோது மநுமுறை கண்டசோழன் தன் மகனுகிய விதிவிடங்கனைக் கொலைசெய்வித்தது யாரா லே? அப்படிப்பட்ட என் மனைவியாகிய நீதியோடு யா னுஞ்சென்று அக்ரமனை உயிர்வாங்குவேன் என்று நியாயன் சொன்னுன்.

அதின்பிறகு சுசீலன் எழுந்து விவேகனைவணங்கி, என் மயித்திரியைக் கொண்டு கபடியின் உயிரையுண்டு அமிர்த சிலமாகிப என் செய்கையால் வஞ்சகி மணுள னுகிப அசத்தியனேடு போரிட்டு இடம்பனைக் கொல் வேன் என்ருன்.

அப்பால் கருணையென்பவள் எழுந்து விவேகரா ஜனை வணங்கி, அநீதியென்பவள் என்னெதிரே நிற்க வல்லளோவென்று சொல்லிச் சென்ருள்.

அப்பால் முதிதை யென்பவள் வந்து அரசனை வணங்கி நின்று, ஐயனே! தீவினையென்பவள் எனக்கெ திர் நிற்கவல்லளோ வென்று சொன்னுள்.

அதன் பிறகு விவேகனுக்கெதிரேயிருந்த அமை ச்சர்களாகிய எட்டுயோகரும் பிறரும் தத்தம் ஆற்ற லைச்சொல்லக்கேட்டுஉள்ளமகிழ்ந்திருந்த விவேகராஜன் மேலேநடத்தின காரியத்தைச் சொல்லுவோம்.

நிருபகாதியர் வீராலாபச் சருக்கம் முற்றிற்று.

---

## 28. விவேகன் காசிபுகு சருக்கம்.

அப்பால் விவேகராஜன் மனமகிழ்ச்சியோடு தன் படைஞரை நோக்கி, மோகன் படையும் அவனுயிரும் இன்ருேடு முடிந்தமையால் நம்படைஞர்யாவரும் காசி யிற் பிரவேசிக்கக் கடவரென்று கட்டளையிட்டவுட

னே, யோகமாகிய யானையும், வேதமாகிய குதிரையும், தத்துவங்களாகிய தேர்களும், மெய்ஞ்ஞானமாகிய வீர ரோடு ஆரவாரித்த தன்மையைச் சொல்ல வல்லார் யாவர்?

ஒப்பற்ற இறைவனை மானதன் பிரவிர்த்தியைச் சேர்ந்து பெற்ற மோகனுதியர் பிணித்த பிணிப்பை விடுவிக்கும் பொருட்டு எழுகின்ற முயற்சியோராகிய விவேகனுதியர், முற்காலத்தில் இந்திரசித்து நாகபாசத் தாற் பிணித்து இளையபெருமாள் முதலானோரை வருத் தும்போது ஸ்ரீகருடபகவான் அந்தப் பிணிப்பை விடு விக்க வந்ததுபோல் எத்திசையிலும் வந்து நிறைந்தார் கள். ஞானமாகியசாரதியால் நடத்தப்படுவனவும், வேத மாகியகுதிரைகளால் இழுக்கப்படுவனவும், மயக்கத்தை யுடைய சேனைகளை வென்று வைதிகமாகிய வீதியிற் செல்லுவனவும், சேனைநடுவில் அநந்தகோடி சூரியர்கள் போலப் பிரகாசிப்பனவும் ஆகிய பலதேர்கள் திரண்டு வந்தன. காமமாகியவாழைத்தோட்டத்தைச் சாய்த்து, கோபமாகியகாட்டை வேரோடுகளைந்தெறிந்து, லோப மாகிய ஓடையை இறைத்துக் கலக்கி, லோகவாசனை யானது தனக்கெதிரில் சிறிது வீசினுலும் மனம்பொ றுக்காமல் அருவருப்பனவாய் விவேகராசன் கட்டளைப் படியே முன்னே செல்லுகின்றனவாகிய பலகோடி ஞான யானைகள் வந்து நெருங்கின. மேலோர் கருத்தை யறிந்து அவர்செலுத்தும் நெறியேசென்று, பஞ்சகதி களையும் விடாமல் எல்லாவற்றையும் மடியும்படி நூறி, பூர்ண ஞானமாகிய நுரையைக்கக்கி, வந்தெதிர்க்கின்ற வாதியரை வாயடக்கி, வேதமாகிய எழிசைக் குரல்களு மெழ ஆரவாரித்துக் கனைக்கின்ற அநேகமாயிரங் குதி ரைகள் வந்து நின்றன. செல்வமுள்ள காலத்திலும் அது இல்லாத காலத்திலும் உயிருக்கு முடிவுண்டா னுலும் ஞான தீரம் குறையாமையாகிய வீரத்தன்மை யும், இன்சொல்லும், மோனவாளும், யாவருக்கும் இதஞ்

செய்தலாகிய முயற்சியும் உடைய காலாட் படைகள் அநேகமாயிரமாக வந்து திரண்டு நின்றன. இத்தன்மையையுடைய நால்வகைப் படைகளும் கூடிச் செல்லும்போது, விவேகராஜன் தனது இளைய மனைவியாகிய உபநிடதையைக் கீதையோடும் அங்கு வைத்து, நிரூபகனுதியர் தன்னைச் சூழ்ந்துவர, சுமதியோடும் அறிவுருவமாகிய தேர்மீதிலேறினான்; அந்தச் சமயத்தில் மாதவரும் யோகியரும் விவேகன் வல்லமையால் மோகனுதியர் இனி மடிவார்களென்று மனமகிழ்ந்து ஆநந்தக் கூத்தாடினார்கள். விவேகராஜனாகிய சூரியன் தேரேறினவுடனே, மோகனுதியராகிய வஞ்சகர் தொழிலென்கிற குவளைமலர்கள் இதழ்குவிந்தன; பூமிதேவியின் முகமென்னுந் தாமரை மலர்ந்தது; விவேகராஜனது படைகள் நடப்பதனால் எழுந்த புழுதியானது நீர்க்குமிழி போலப் பொய்யாகிய இவ்வுலக வாழ்க்கையை மெய்யாகக் காண்கிற அவிவேகிகளுடைய கண்களில் விழுந்து தூர்த்துவிட்டது. சுமதி நாயகனாகிய விவேகனது அறிவுருவாகிய தேரானது நல்லசகுநங்களோடும் நாதமாகிய கீதங்களோடும் வேதங்களாகிய வாத்தியங்களோடும் தான் செல்லுதற்குரிய நெறியே சென்றது. சென்று காசிமா நகரத்தை யடைந்தவுடனே, அங்கிருந்த மோகனுதியர் பெருங்காற்றினால் பாசியானது நீரோடொதுங்குவதுபோல ஒதுங்கினார்கள். விவேகன் அந்தக் காசிமாநகரமுழுதும் சூரியப்பிரகாசம்போலப் பிரகாசிக்கக் கண்டான். அன்றியும் சூரியன் தான் செல்கதியாலிளைத்தபோது அந்த இளைப்பாறத் தங்கிச் செல்லுதற்குரிய உயர்ந்த கோபுரங்களையும், அந்தக் காசிமா நகரமாகிய பெண்ணானவள் மோக்ஷமாகிய பெருஞ்செல்வம் என்னிடத்துள்ளது யாவரும் வந்து அநுபவிக்கலா மென்று தன் கைகளால் அழைப்பது போலத் தோன்றுகின்ற கொடிச்சீலைகள் நெருங்கிய மதில்களையும், மற்றைத் தேவாலயங்கள் முதலிய வற்

றையும் கண்களிகூரக் கண்டுகொண்டேபோய்க் காசி விசுவநாதசுவாமியின் சந்நிதியையடைந்து, சுவாமியை யும் அன்னபூரணியம்மையையும் தரிசித்துக் கண்களி த்து, மயிர்பொடிக்கக் கண்களில் ஆநந்தக்கண்ணீரொ ழுகப் பூமியின்மேல் விழுந்து சாஷ்டாங்கமாய் வணங் கியெழுந்து கோயிலைப் பிரதக்ஷிணஞ் செய்து ஸ்ரீ பஞ் சாக்ஷரத்தைச் செபித்து பலவகையான தோத்திரங்க ளைப் பண்ணேடுபாடி சுவாமியின் சந்நிதானத்திற் கெ திரே கைகுவித்து அஞ்சலிசெய்து நின்று இவ்வாறு துதிசெய்வானாயினன்.

பரதேவதையாகிய சிவபிரானே, முற்காலத்தில் எம்மினத்தார்களில் ஒருவர் உன்னைக்கல்லா லெறிய அவர்க்குக் கருணை சுரந்தருளின நின்கடைக்கண் எம் மினத்தரல்லாதாரி லொருவன்பூ வாலெறிய அவன் பொடியாய் விழ நோக்கினதென்றால் உன் திருவுளக் கிடையைத் தெளிந்துணர வல்லார்யாவர்? சூழ்ந்து வணங்கின தொண்டரை மேன்மையடைவித்து அவர் களை வாழச்செய்த உன்திருவடி உன்னை உன்னிருப் பிடமாகிய கைலாய பர்வதத்தோடு தலையாற் சுமந்த ராவணனை அழுத்திவிட்டதின் கருத்து யாருக்குத்தான் புலப்படும்? எம்மினத்தோர்வைதாலும் வாழ்த்தினாலும் அவர்களுக்குப் பேற்றையருள் செய்கிற உன் புன்சி ரிப்பு முப்புரத்தாரை ஒருங்கே நீறு செய்த திருவிளை யாடலை யாரறிபவல்லார்? நீ எழுந்தருளியிருக்கிற இந்த நகரத்தில் வந்திறந்த எல்லாவுயிர்களும் முக்தியடையு மானால் உயிர்களைப் படைப்போனாகிய பிரமனுக்கும் உயிர்கவரும் காலனுக்கும் என்னவேலையிருக்கின்றது? என்றிவ்வாறு பலவகையாய்ப் புகழ்ந்து நின்றுருகா நின்ற விவேகனைச் சிவபிரான் தன் தேவியாகிய அன் னபூரணி யம்மையோடும் மனமகிழ்ந்து நோக்கி, மோ கன் முதலானோரை யழித்து அத்துவிதத்தனி நாதனா கிய பரப்பிரமத்தைச் சிறைநீக்கக் கடவையென்று

ஆசிர்வதித்துச் சிவபத்தியையும் காவலாக்கிப் போக விடை கொடுத்தருளினவுடனே, விவேகன் வணங்கி விடைபெற்றுவந்து திருமாலின் சந்நிதியிற்போய் அவரை வணங்கி அவரருளையும் ஹரிபக்தியையும் பெற்று விடைகொண்டு நீங்கி, கங்காநதிக்கரையை யடைந்து தன் படைகள் தன்னைச் சூழ்ந்திருக்க அவ்விடத்தில் வாழ்ந்திருந்தான்.

விவேகன் காசிபுகு சருக்கம் முற்றிற்று.

---

## 29. படையெழுச்சிச் சருக்கம்.

இவ்வாறு விவேகன் வந்திருக்கிற செய்தியை மோகவேந்தன் கேள்விப்பட்டு மிகுந்த கோபங்கொண்டு தன்னருகே யிருந்த படைத்தலைவரை நோக்கி அவரோடு சொல்லுவானாயினன். எப்படியென்றால்,

நம்மால் மனங்கலங்கிக்காட்டிற் போய் ஒளித்திருந்த விவேகன் பட்டபாட்டையும் தனது அச்சத்தையும் நினையாமல் படைகொண்டு இந்த நகரத்தில் வந்திருக்கிறானென்று கேள்விப்பட்டும் அவனோடு போர் செய்யாமல் எவ்விடத்திற்போ யொதுங்கியிருப்போம்? அந்த விவேகன் போயிருந்த காட்டிலும்போய் அவனை யழிக்காமல் விட்டனம். இங்குவந்திருக்கிறானென்று கேள்விப்பட்டும் போய்ப்பொருது வென்றோமில்லை; வந்து சொன்ன தூதர்பின்னும் சென்றோமில்லை. இப்படி நாமிருந்தால் நமக்கு யார்தான் அஞ்சுவார்கள்? என்றிவ்வாறு பலவற்றையுஞ் சொல்லி இனிஎன்படைகள் விரைந்து செல்லுதல் வேண்டும் ஆதலால் மதமென்கிற மதயானையின்மீது பழியாகிய பறையை வைத்து முழக்குங்கள்; என்விடயத்தேரையும் விரைவில் கொண்டுவாருங்களென்றான். இப்படி மோகன் சொன்னவுடனே காமன் எழுந்துநின்று, ஐயனே! உமது ஒப்பற்ற ஆண்மையைக் காண்பவர் உலகில் யாருளர்? அது

இருக்கட்டும், இப்பொழுது போர்க்களத்திற் போய் நிருபகன் முதலானோரை அடியேங்கள் வெல்லும் விதத்தை எங்களுக்குக் கட்டளையிடக் கடவையென் ருன்.

காமன் இப்படிச் சொன்னவுடனே பழிப்பறை முழக்கங்கேட்டுப் படைகளெல்லாம் சிவன் உண்ணு தற்கு முன்னே பாற்கடலில் பரவின நஞ்சுபோலப் பர வின. எப்படியெனின், இரதிபதியாகிய காமன் சேனை யானது செம்பொன்மணிச் சிலம்பொலியாகிய பறை சத்திக்கவும், தமதுபுருவங்களாகிய விற்களோடும் கண் களென்கிற அம்புகளோடும் கொங்கைகளாகிய யானை களோடும் அல்குலென்னும் தேரோடும் கிளர்ந்தெழுந் தது.

கோபன்சேனையானதுகோபமாகியமதயானையோ டும் குடிலமாகிய வலிய தேர்களோடும் உரத்த சொல் லாகிய வாத்தியத்தோடும் புருவமாகிய நிமிர்ந்தவில் லோடும் நெருப்புப்பறக்கிற கண்களாகிய அம்போடும் மிகுந்த ஆரவாரத்தோடும் புறப்பட்டது.

வாயிதழ் துடித்தலும் உதட்டைப் பற்களால் அழுத்தலும் கடைக்கண்கள் நெருப்புப்போலச் சிவத் தலும் பாய்கின்ற புலியைப்போலப் படபடத்தலும் ஆகிய செய்கைகளோடு கூடிய படைகள் அநேகமாகத் தொடர்ந்து நடந்தன.

உலோபனது படையானது யாசிக்கிற சத்தமா கிய மத்தளத்தோடும் ஏழுலகங்களிலும் செல்லுமாற்ற லாகிய குதிரைகளோடும் கையேற்றலாகிய வாளாயு தத்தோடும் புறப்பட்டது.

சம்பாதித்த பொருளை யார்வந்து கேட்டாலும் இல்லையென்று கடுஞ்சொற் சொல்லலும், அயலாரு டைய கைப்பொருளைப் பெறும்பொருட்டுக் கையை நீட்டலும், இந்தத்தொழில்களையே எப்பொழுதும் பா

ராட்டலும் ஆகிய இயற்கையை யுடைய படைகளும் அளவற்றனவாகப் பிரயாணப்பட்டன.

வலிய மச்சரன் படையானது செல்வமுடையாரைக் குரூரமாகப் பார்க்கிற பார்வையாகிய ஈட்டியும் பொறுமையாகிய கொலைவாளும் பிறரை நிந்தித்தலாகிய அம்புகளும் கொண்டு வெளிப்பட்டது.

மானனது படையானது நானென்னும் பாசத்தையும் நல்லோர்க்கெதிரே குவியாதகையாகிய குடையையும் எப்படிப்பட்டசமயத்திலும் எவரையும் வணங்காமையாகிய கதாயுதத்தையும் கொண்டு புறப்பட்டது.

மமதையின் தந்தையாகிய அகங்காரனது சேனையானது யாம் எமது என்கிற கவண் கல்லையும், யாம் எல்லாமறிவோம் என்கிற மழுவையும் கொண்டுவந்து திரண்டு நின்றது.

இவ்வாறு மோகவேந்தனது படைகள் எல்லாம் திரண்டு முன்னே செல்ல, மோகவேந்தனும் காமன் முதலிய படைத்தலைவர் தன்னைச் சூழ்ந்துவரத் தானும் ஒரு தேர்மேலேறிக் கையில் நெருப்பும், மனத்திற் கொதிப்புமாக நின்றான்.

அப்பொழுது, அவனுக்குக் காணப்பட்ட கெட்ட சகுநங்கள் பலவா யிருந்தன. அவை யாவையெனின், படைத்தலைவர் வாய்கள் நீர் வறத்தலும், தேரிற்கட்டின குதிரைகள் தூங்குதலும், பேய்கள் தம் கைகளில் குறைக்கொள்ளிகளை யேந்தித்தேர்க்கொடிகளின் மீதேறிக் கூத்தாடுதலும் ஆகிய இவைபோல்வனவாகிய குறிகளே. அன்றியும், மேகங்கள் உதிர மழையைப்பொழிந்தன. பொன்மயமாகிய மேருமலையும் அசைந்தது. பகற்காலத்தில் ஆகாயத்தினின்றும் சில நக்ஷத்திரங்கள் உதிர்ந்தன. பூமியும் கிடுகிடென்று நடுங்கினது. சமுத்திரமுங் கலங்கிற்று. மேகமானது மின்னலில்லா

யிலே யிடித்தது. எல்லா நதிகளும் மேற்றிசைநோக்கி யோடின. மோகன் தோள்மாலை புலால் நாற்றம் வீசிற்று. அவன் படைத்தலைவருக்குப் புருவமும் இடது தோளும் துடித்தன. இப்படிப்பட்ட கெட்ட சகுனங்களைப் பார்த்தும், மோகவேந்தன் சற்றும் அஞ்சாமல் இந்தக்ஷணமே விவேகனுயிரை யுண்பேனென்று தேர்மேலேறிச் சென்றான்.

இப்படி யிவன் வருவதைக் கேள்விப்பட்ட விவேகனுதியரும் தம் படைகளோடுங்கூடி எதிரே நடந்தார்கள். இவர்கள் நடந்தவிதமும் சிறிது சொல்வோம். எப்படியென்றால்,

நிரூபகன் சேனையானது விடயங்களாகிய வலிய பகைவரை யழிக்கின்ற வாளாயுதத்தோடும், எவ்விடம்பையும் வெறுத்துக் கோபிக்கிற கோபத்தோடும், மாதர் செலுத்துகிற கண்களாகிய அம்புகள் தம்மீது தைக்காதபடி யணிந்த கவசத்தோடும் வெளிப்பட்டுக் காமனது வலி யழியும்படியாக நடந்தது. பொறையென்பவனது படையானது சிரிப்பென்கிற கவசத்தையும், மோன நிலையாகிய வீரத்தையும், இன்சொல்லாகிய வேலாயுதத்தையும், வணக்கமாகிய வில்லையும் கொண்டு கடுங்கோபத்தோடு நடந்தது.

விராகனது சேனையானது தைரியமாகிய சக்கரத்தையும், மனப்பற்றின்மையாகிய தண்டாயுதத்தையும், எவற்றையும் விரும்பாமையாகிய ஈட்டியையும் கொண்டு உலோபனையழிக்க வுத்தேசித்துச் சென்றது. அடக்கனது சேனையானது தாழ்ந்து மேன்மை யடைதலாகிய பேரிகையும், வெற்றியாகிய வெண்சங்கும், செல்வப் பெருக்கா யிருக்கிற காலத்திலும் கடல் போல ஒடுங்குதலாகிய மனவலியும், ஆழ்ந்த நல்லறிவாகிய வச்சிராயுதமும், இவைபோல்வன பிறவும் கொண்டு மமதையை வளைந்துகொண்டது.

சந்தோடனது பெரும்படையானது அந்நியர் வாழ்வையும் தமதுபோல மதித்தலாகிய எழுவும், அவரிடத்திற்செய்யும் அன்பென்னும் பாசமும், முகமலர்ச்சியாகிய குடையும்கொண்டு மச்சரனை வளைந்துகொண்டது.

சமன் தமன் என்னும் இருவர் சேனைகளும், மனம் ஐம்புலவழியிற் செல்லாதபடி தடுத்தலாகிய ஆயுதங்களைக்கொண்டு அகங்காரம் மானம் என்னும் இருவர் படைமீதுஞ் சென்றன.

மற்றும் விவேகராஜன் படைகள் யாவும் தத்தமக்குரிய ஆயுதங்களைக்கொண்டு புறப்பட்டன.

இவ்வாறு புறப்பட்டுவந்த விவேகனுதியர் படையும், மோகனுதியர் படையும் கடுங்கோபங்கொண்டு ஒன்றோடொன்று முடுகித் தாக்குவது எப்படி யிருந்ததென்றால், வடவைத்தீயும் கருங்கடலும் ஒன்றோடொன்று போர் செய்வதுபோலிருந்தது. இப்படி இருதிறத்தாரும் போர்செய்யுங் காலத்தில், கருநிறத்தையுடைய நீரானது வெண்ணிறத்தையுடைய நீரோடு கலந்தாற்போலக்காணப்படுதலால் எப்படிப்போர்செய்வதென்று விவேகன் படைத்தலைவர் கேட்க, விவேகன் அவர்களைநோக்கி, ஓ படைத்தலைவரே, நமது படையின்னதென்றும் பகைவர் படை யின்னதென்றும் உங்களுக்குத் தெரியும்படிச் சில குறிகள் சொல்லுகிறேன், தெரிந்துகொள்ளுங்களென்று சொல்லாநின்றன். எப்படி யென்றால்,

பாலகன் வரும்போது பால்சுரக்கிற கொங்கைகள், நாயகன் வரும்போது அவனை மயக்குகின்றன. அதுபோல மேலோர் செயலுங் கீழோர் செயலும் வேறல்லவாயினும் அவரவர் மனத்தின்தன்மை வேறுபட்டிருக்கும். அறிவுடையோரும் அறிவில்லாதாரும் ஆகிய இருதிறத்தார்க்கும்வேற்றுமையாதெனின், அறிவுடையார் தமக்குப் பிறர் செய்த துன்பத்தைப் பொ

றத்தலே யன்றி அவர்கள் இனிப்படுந் துன்பத்தைக் குறித்தும் மனம் வருந்துவார். அறிவில்லாதார் தமது சரீரத் துன்பத்தைக் குறித்து மனந்தளர்வார். மன முருகுஞ் செய்கை நல்லார் பொல்லார் என்கிற இருவர்க்குமுளதாயினும் நல்லார் ஈச்சுரனது அருட்கண்ணோக்கத்தால் உருகுவர்; பொல்லார் மாதரது மருட்கண்ணோக்கத்தால் உருகுவர். பொன்னும் பித்தளையும் நிறத்தால் ஒத்திருக்குமாயினும் உரை கல் முதலிய பரீக்ஷைகளால் வேறுகும். அதுபோலப் பகைவர் படையும் நமது படையும் செய்கையாலும் குணத்தாலும் வேறுபடும். இப்போது நான் சொன்ன குறிகளைக்கொண்டு பகைவர் படையையும் நம் படையையும் பாலையும் நீரையும் பிரிக்கிற அன்னப்பறவைபோல வேறு பிரித்துப் பகைவர் படையை அழித்துவாருங்களென்றான். அவ்வாறே நிரூபகன் முதலான படைவீரர் சென்று ஊக்கத்தோடும் பகைவர் படையைத் தாக்குதலும் அப்பகைவர்படை வலியிழந்து முறிந்தோடிச் சாய்ந்தது.

படையெழுச்சிச் சருக்கம் முற்றிற்று.

---

## 30. காமனுதியர்வதைச் சருக்கம்.

இவ்வாறு முறிந்தோடுகிற தம் படைகளை நோக்கின மோகன் படைத்தலை வீரரது புதல்வராகிய கலகன் முதலானேரும் அவர்கள் புதல்வரும் உலகம் நடுங்கும்படி வாளாயுதங்களை யேந்திக்கொண்டு வந்தார்கள். அவர்கள் பெயர்கள் யாவையெனின்:—விடயாநந்தன், கலக்கன், வயிரன், அனத்தன், உற்சாகன், விகற்பன் முதலியவையேயாம். இவர்கள் யாவரும் வஞ்சனையாகிய தேரையும், கோபமாகிய குதிரையையும், மதமாகிய யானையையுங்கொண்டு விவேகன் படையைச் சூழ்ந்துகொண்டார்கள். துர்க்குணமாகியவயிரவாளும்,

கோபமாகிய கொடியவேலும், வன் குணமாகிய வலிய தண்டும், மனக்கரவடமாகிய வில்லும், இருட்குணமாகிய அக்கினிக்கணைகளும் ஏந்தி யெழுந்துவந்து தாக்கி விவேகன் படையைச் சாய்த்தோடச் செய்தார்கள். இதைக்கண்ட விவேகன் படைவீரர் எதிர் நில்லாதோடினது யாதுக்கெனின், அவர்கள் ஊரிலுமிராது வனத்துக்குப் போய்விட்டவர்கள் இப்பொழுது அவர்களுக்கெதிரே நிற்பார்களோ? ஆனுல் இவர்கள் தம் பகைப் படைக்கு ஒதுங்கிப்போவது எதுபோலிருந்ததென்றால், ஆட்டுக்கடாவானது உறுதியாய்ப் பாய்வதற்குப் பின்வாங்குதல் போலிருந்தது. இதனை ஆலோசியாத பகைப்படைஞர் மிகவு முயர்ந்தவரா யெண்ணி நுனிக் கொம்பி லேறினதுபோல மிகுதியாய்க் கர்வித்ததை விவேகன் படைத் தலைவர் கண்டார்கள். அவர்கள் பெயர்கள் யாவையெனின்:— சுகன், நிருவிகற்பன், சுசநன், சத்தியன், நியாயன், அகமுகன், தவன், சன்மானன், அவிரோதன், பரோபகாரன், சமாதாநன், தர்மன், தீர்க்காயு, மனந்தெளிந்தோன், இயமன், அற்புதயன் என்பவையேயாம். இவர் பதினறுவரும் விவேகனை வணங்கி, எங்களுக்கு விடைதந்தால் பகைப் படையை ஒரு கணத்தில் அழித்துவருவோம் என்று கேட்க, அப்படியே விவேகராஜனும் அவர்களுக்கு விடை தந்தனுப்பினுன்.

இவ்வாறு விவேகனுல் அனுப்பப்பட்ட சுகன் நிருவிகற்பன் முதலிய படைவீரர்கள், விரதமே யானையாகவும், வேதமே குதிரையாகவும், சத்தியமே விமாநமாகவும், ஞானதத்துவங்களேதேராகவும்கொண்டு அவரவர்களுக்கேற்ற வாகநங்களின் மீதேறினுர்கள். ஏறினவர்கள் ஹரிநாம சிவநாமங்களாகிய வாளாயுதங்களைக் கைக்கொண்டு, விபூதி கோபி சந்தநங்களாகிய கவசத்தைப் போர்த்துக்கொண்டு, சிநேகமும் நல்லொழுக்கமும் ஆகிய சங்குசக்கரங்களைத் தாங்கித் தீயவஞ்

சகராகிய காமனுதியரை வந்து சூழ்ந்துகொண்டார்கள். அப்பொழுது மோகனுலேவப்பட்ட காமன் முதலானோர் மிகு கோபங்கொண்டு, இது ஊழிக்காலமாமென்று சொல்லும்படி ஆரவாரித்தெழுந்து வந்து நிருபகன் முதலானோரை, வாயுவானது ஆதிசேடனை யெதிர்த்து நின்றாற்போல எதிர்த்து நின்றார்கள். அன்றியும் நிருபகன் முதலானோர் சர்ப்பசமுகத்தின்மீது கருடன் சீற்றங்கொண் டெழுந்தாற்போ லெழுந்து, அம்பு, வாள், ஈட்டி, வேல் முதலிய ஆயுதங்களைப் பிரயோகித்துக் காமனுதியர் வலியழியும்படி மோதினார்கள். இவ்வாறு போர்புரிந்த காலத்தில் காமன்மகன் தவன் கைவாளினால் இறந்தான். மானன் மகன் சன்மானனுல் உயிர் நீங்கினான். கலகன் வந்தெதிர்த்துச் சமாதானனுல் உயிரிழந்தான். நாசன் தீர்க்காயுவால் நாசமடைந்தான். துக்கன் சுகனுல் நசித்தான். அக்கிரமன் நியாயனுல் ஆவி நீங்கினான். கலக்கன் நிச்சந்தேகனுல் நிலவுலகத்தை விட்டான். வயிரன் அவிரோதனுல் மாண்டான். பரத்துரோகன் பரோபகாரனுல் மடிந்தான். அசத்தியன் சத்தியனுல் முடிந்தான். அனத்தன் அற்புதயனுல் அழிந்தான். வெகு முகத்தன் அகமுகத்தனுல் ஒழிந்தான். விகற்பன் நிருவிகற்பனுல் கழிந்தான். அசுத்தன் சுசீலனுல் வீடினான். சஞ்சலன் தருமனுல் ஓடினான். விடயசங்கன் இயமனுல் இறுதியடைந்தான். இவ்வாறு தத்தம் பகைவரோடு போர் செய்து காமன் முதலானோர் மைந்தர் இறந்ததைக் காமனுதியர் கண்டு, புத்ரசோகத்தால் தனித்தனி புலம்புவாராயினர். எப்படியெனின், காமன் தன் புதல்வனாகிய விடயாநந்தன் இறந்ததைக் குறித்துத்தன் தேவியாகிய இரதியோடு மனம்வருந்தி, அப்பா மகனே, உன்னைக் கொண்டு எல்லாவுயிர்களையும் மயக்கி நான் வாழ்ந்திருந்தேன். நீ போனபிறகு இனி நான் உயிர் வாழேனென்றான். கோபன் தன்புதல்வனாகிய கலக்கனை

யிழந்ததனுலுண்டான துக்கத்தால் மிகவும் மனம் புழுங்கி, இனி நான் இங்கிருந்து அடையும் பயன் யாதென்றரற்றினுன். இடம்பன் தன் மகனுகிய அசத்தியனிறந்ததற்கு மனந்தளர்ந்து, மகனே, நானும் உன் தாயாகிய வஞ்சனையும் இனி உயிர் வாழமாட்டோமென்ருன். இவ்வாறே மற்றையோராகிய மதன், வயிரன், சங்கற்பன் முதலானேரும் தத்தம் புத்திர நாசத்தைக் குறித்து வருந்திப் புலம்புவதை அகங்காரன் நோக்கி அவரை யழைத்து, மக்களையிழந்த நாமெல்லோரும் அஞ்சாமற் சென்று அந்த விவேகன் படைத்தலைவராகிய நிருபகனுதியரைப் பொருது வெற்றியடையாமல் இப்படிப் புலம்புவது நமது வீரத்தன்மைக்கு அழகாமோ வென்ருன். அகங்காரன் இப்படிச் சொல்லுதலும், அந்தச் சொல்லைக்கேட்ட காமன் முதலானேர் உயிர் நீங்காதிருந்த கோபனைத் தமது மனத்திற்கொண்டு எழுந்துவந்து மோகவேந்தனை வணங்கி, எம்புதல்வரைக்கொன்றபகைவரை இப்பொழுதே நாங்கள்போய் நாசப்படுத்திவருகிறேம், எமக்குவிடைதந்தருளல் வேண்டுமென்ருர்கள்; அதற்குச் சம்மதித்த மோகவேந்தனும் அப்படியே விடைதந் தனுப்பினுன். அப்பால் காமன் கோபன் முதலானேர் விரைவிலெழுந்து சென்ருர்கள். எப்படியெனின்காமன்தன்கரும்புவில்லில் சுரும்பு நாணிட்டு, தாமரை முதலாகிய பஞ்சபாணங்களைத் தொடுத்துக் குங்குமக் கவசம்பூண்டு, முதுகில் அம்பருத்தூணியும் அரையில் உடைவாளும் ஒற்றைக்காலில் புகழ்க்கழலும் அணிந்து, முற்காலத்தில் சிவபெருமானுக் கெதிரே போனதை நிகர்க்குமென்று சொல்லும்படி இருளாகிய மதயானை, குயிலாகிய எக்காளம், மீனக்கொடி, பெண்படை, கடற்பேரிகை, சந்திரவட்டக் குடைமுதலிய சின்னங்களோடும் தென்றற்றேரின் மீதேறினுன்; இரதியும் வசந்தனும் தொடர்ந்தார்கள். இப்படிகாமன்தேரேறிப்புறப்பட்டா

னென்பதை யறிந்த நிரூபகன் தன் தேவியாகிய யுத்தி யோடுங் கூடி விசாரவாள் ஞானகவசம் தைரியப்படை முதலியவற்றோடும் விடய கோபம் அதிகரிக்க விரதத் தேர்மேலேறி வந்தான்.

கோபனுனவன் புருவவில் வளைத்து, கண்ணினின்றும் சிதறுகிற நெருப்புப் பொறிகளாகிய அம்புகள் தாங்கி, கோபங்கொண்டு பற்களால்உதட்டைக் கடித்தலாகிய முரசமுழங்க, வெயர்வையாகியகவசம்பூண்டு, வன்சொல்லாகிய சுரிகையைக் கைப்பிடித்து ஹிம்சை யென்னுந் தேவியோடு கூடிப்பெருமூச்சென்னும் தேர் மேலேறினுன். இப்படி இவன் வருகையை இவன் பகைவனுகிய பொறையென்பவன்கண்டுமௌனமாகியதண்டும் இன்சொல்லாகிய அம்பும், வணக்கமாகிய வில்லும்,முகமலர்ச்சியென்னும் குடையும், புன் சிரிப்பாகிய கவசமுங் கொண்டு தன் தேவியாகிய மரியாதையோடும் மெய்ஞ்ஞானமாகிய மதயானைமீதேறி வந்தான்.

அதன்பிறகு லோபனுனவன் இடம்பன் வஞ்சனை யென்பவர் தன்னைச் சூழ்ந்துவர, சரீரம் தளர்ந்தாலும் முயற்சியாகிய வலியை விடாமற் கைப்பொருளாகிய கதாயுதத்தோடும் ஆசையடங்கா மனமென்னும் வாளாயுதத்தோடும் ஹிம்ஸையென்னுந் தேவியோடுங் கூடி வாணிகவிமானத்தின் மேலேறிவந்தான். இவன் வருகையை யுணர்ந்த விரக்தியும் நிரூபகனும், அமிர்த சீலனும் சோரனும் தம்மைச் சூழ்ந்துவர, வைராக்கிய மென்னும் யானையின்மேல் எல்லாப்பொருள்களையும் வெறுத்தலென்னும் கூர் வேலும் விரதமாகிய பாசமுங் கொண்டு எதிர்த்து வந்தார்கள்.

அப்பால் மதனுனவன் இவ்வுலகத்தில் தன்னை நிகர்ப்பவர் ஒருவருமில்லையென்கிற விருதும், லகரியாகிய சாமரமும், மருட்குடையும்,தீமையையேசெய்கின்ற படைகளும் பொருந்தப்பெற்றுத்தன்தேவியாகிய மறதி யென்பவளோடுங்கூடி இறுமாப்பு என்கிற யானையின்

மேலேறி வந்தான். இந்த மதன் விந்தமலேயும் கடலும் போல் வருவதை யறிந்த அடக்கனுனவன், அகத்திய முனிவர்போல முன்னுணர்ச்சியும் உண்மையும் ஒழுக்க மும் வணக்கமும் வலிய படைகளாய்ச் செல்லா நிற்க பெருங்கல்வியென்னும் யானையின்மே லேறிவந்தான்.

மச்சரன் என்பவன் தன் தேவியாகிய அசூயை யுடனே கொடுந்தொழில் என்னும் படைகளோடும் வந்ததை யறிந்த மகிழ்ச்சி தன் நாயகனுகிய சந்தோடனேடு, உள்ளன்பும்செஞ்சொல்லுமாகியபடை கள் சூழக் களங்கமற்ற மனக் குதிரையின் மீதே றினுள்.

அப்பால் அறியாமையை யானையாகக்கொண்டு தமக்கெதிரின்மையைச் சொல்லுதலென்னும் ஆயுதத் தோடு மமதையும் அவள் நாயகனுகிய அகங்காரனும் வருதலேயுணர்ந்த சமனும் அவன் தேவியாகிய சாந்தி யும் மதியாகிய சக்கரத்தைக் கொண்டு இந்திரியமென் னும் மலேயையிடித்துத் தகர்த்தலாகிய யானையின்மீதே றிவந்தார்கள்.

பிறகு தாமதன் அதிநித்திரையென்னும் தன் மக ளும் சோம்பியென்னும் மனேவியும் தொடர்ந்துவரப் புறப்பட்டதை யறிந்த ராசதன், முயற்சியென்னுந் தன் மனேவியோடும் சிரத்தையென்னும் மகளோடும் காரி யன் என்னும் மகனேடும் ஈனபுத்தி யென்னும் தேர் மேலேறிவந்தான். இவர்கள் இப்படி வருவதை யறி ந்த சத்துவன், தன் தேவியாகிய புனிதையோடும் புதல் வனுகிய தருமனேடும் புதல்வியாகிய சிரத்தையோடும் தவயோகியர் மனமாகிய தேர்மீதேறிவந்தான்.

அப்பால் கற்பனேக்குமணுளனுகிய சங்கற்பன் நெரு ப்புப்போல வருவதை யறிந்த நிருவிகற்பன்நீரைப்போ லப் புறப்பட்டான்.

சந்தேகன் வருவதை யுணர்ந்த நிச்சயன் யானே யை யிலக்காக்கி ஒரு சிங்கமெழுந்தது போல எழுந் தான்.

அப்பால் கலியன் தன்மனைவியாகிய கபடியோடும் மகனாகிய அதர்மனோடும் வருவதை யறிந்த சுசீலன் தன்மனைவியாகிய மயித்திரியோடும் மகனாகிய தர்மனோடும் எதிரேவந்தான்.

அப்பால் உலகாயதன் முதலாகிய மதவாதியர் வருவதையறிந்த வைதிகபுராதநரும் வந்தார்கள்.

இவ்வாறு வந்த இருதிறப் படைகளும் ஊழிக் காலத்தில் எழுகின்ற சண்டமாருதமும் ஊழித்தீயும் ஒன்றோடொன் றெதிர்த்துத் தாக்குதல்போலத் தாக்கின.

ஞான சூரராகிய நிரூபகன் முதலானோரும் அஞ்ஞான வீரராகிய மோகன் முதலானோரும் தத்தமது நால்வகைப் படைகளை யேவியும் அம்பு வேல்முதலாகிய ஆயுதங்களைப் பிரயோகித்தும் போர்செய்தது அமிர்தமும் நஞ்சும் எதிர்த்துப் போர்செய்தல் போலிருந்தது.

முற்காலத்தில் ஸ்ரீராமரது வாநர சேனையோடு இராவணனது ராக்ஷஸ சேனையும், சுப்பிரமணியரது தேவ சேனையோடு சூரபன்மனது அசுரசேனையும் போர்செய்ததுண்டு. அந்தப்போர்கள் இந்தப்போருக்கு நிகராகமாட்டா. மேகங்கள் பலகூடிப் பெருமழை சொரிந்தாலும் ஒரு பெரிய மலைக்குச் சலநமுண்டாகாதது போல மோகனது படைத்தலைவராகிய காமனாதியர் விரகாக்கினியை மூள்விக்கிற சோகாஸ்திர முதலிய ஆயுதங்களைப் பிரயோகித்தும் விவேகன் படைஞரைச் சிறிதும்மெலியச் செய்யவில்லை. விவேகன் படைஞர் பிரயோகித்த யுக்தியென்னும் அம்புவந்து உடல்முழுதும் தொளைத்தும் மோகன் படைஞராகிய காமனாதியர் சிறிதும் அஞ்சாதவரா யிருந்து போர்செய்தார்கள். உலகத்தில் பலர் இறந்தொழிவதைக்கண்டும் தம்மை யென்றுமிறவாதவராய் மதித்திருப்பவர்க்கும் அச்சமுண்டாகுமோ? மோகன் படைகள் அஞ்சாதெதிர்த்

துப் போரிட்டும் தாம் இறந்தொழிவ தன்றி வேறு பயன் காணவில்லை. சிங்கக்கூட்டத்துக்கெதிரே யானைக்கூட்டங்கள் பயமற்று நின்று போரிட்டாலும் வெற்றியடைத லுண்டென்று கதையினுங் கேட்டறிந்ததுண்டோ? இல்லை. இப்படியிருக்கிற சமயத்தில் விவேகன் படைஞரெல்லோரும் மணிமந்திரங்களால் வசப்படாதபாம்பின் விஷப்பல்லைப் பிடுங்கி அதை வசப்படுத்தல் போலக் காமனுதியரது செருக்கழிந் தொழியும்படி கொடிய ஆயுதங்களைப் பிரயோகித்தார்கள். அந்தக் கொடிய ஆயுதங்கள்யாவையெனின்:-வேதவாள், விரதபாசம், விழிப்பெருங் கருணைவேல், மெய்யுணர்வாகிய கதாயுதம், இன்சொல்லாகிய அம்பு, சந்தோஷ சித்தமாகிய ஈட்டி, வைராக்கிய மென்கிற வச்சிராயுதம் என்பவைகளே. இவ்வாயுதங்களை இவர்கள் மேன்மேலும் பிரயோகிக்கக் காமனுதியர் படைகள் முறிந்தோடத்தலைப்பட்டன. எப்படியென்றால், காமன் படைஞர் நிலைகுலைந்தார்கள்; குரோதன் படைஞர் உயிரிழந்தார்கள்; உலோபன் படைஞர் போர்க்களத்தை விட்டோடினார்கள்; மதன் படைஞர் மட்கினார்கள்;மச்சரன் படைஞர் உடல்துணிந்தார்கள்;கவுடன்படைஞர்வாய் புலர்ந்தார்கள்; மானன் படைஞர் திசைதப்பி யோடினார்கள்; இராசததாமதர் படைஞர் உயிர்விட்டார்கள்; இவ்வாறுபோரிலிறந்தவர்கள் போக மற்றவர் புறத்திலோடினதையும் விவேகன் படைஞர் தொடர்ந்து வந்ததையும் நோக்கினகாமன், தன் கருப்புவில்லை வளைத்துப் புஷ்பபாணங்களைத் தொடுத்துத் தென்றற்றேரேறி மாதர்படையோடு இருளாகிய யானையைச் செலுத்தி, அறிவாகியகவசம்பூண்ட விவேகன்படைஞர்களுடையநெஞ்சிலும் மார்பிலும் புயத்திலும் பலகணைகளைப் பிரயோகித்து, மாதர் சேனைகளோடு தானும் போர்செய்த விதத்தைச்சொல்லவல்லார் யாவர்? விவேகன் படைஞரது உடம்பின்மேல் மாதர் கண்களாகிய அம்புகள்

கோடாநு கோடியாய்ப் பாய்ந்தும் அவர்கள் சிறிதும் மனங்கலங்கவில்லை. காமனது அம்புகள் பாய்ந்தபோதும் அவையாவும் கற்பாறைமீதறைந்த முளைபோலப் பயன்படாதொழிந்தன. அந்தச் சமயத்தில் நிரூபகனும் உத்தியோடு கூடினதேரைக் காமனது தேருக்கெதிரே செலுத்திநின்று, காமன் விட்டபுஷ்பபாணங்களைத்தன் கைவாளினல் வெட்டி, அவனது மீனக்கொடியையும் அறுத்து வீழ்த்தினன். அப்பொழுது காமனனவன் கரிய இருட்காலத்தில் களவாக நல்ல அழகும் இளமைப் பருவமும் அன்புமுள்ளவளாகிய அயலான் மனைவியொருத்தி வலியவந்து தழுவுதலாகிய பாணமொன்றனையேவுதலும், அந்தக்கணையை நிரூபகன் நிராசையென்னுங் கணையொன்றின லறுத்துத் தள்ளினன். அன்றியும் மாதர் உடம்புகளைப் பைம்மறியாய்ப் பார்த்தலாகிய வேலாயுதத்தை யேவிப் பொடியாக்கினன். மறுபடியும் காமன் அநேக கோடி பாணங்களையேவ, அவன் கருப்புவிற்கள் முறிந்துபோன வற்றுக் கோரெல்லையில்லை. தவச்செல்வனெருவனை ஒரு அறிவில்லாதவன் வைதிளைத்ததுபோல, காமன் தன் வல்லமை முழுதும் நிரூபகன் மேற்காட்டியும் ஒரு பயனடையவில்லை. முற்காலத்தில் பரமசிவன் அற்பகாலத்தில் தன்னெற்றிக் கண்ணுலெரித்துவிட்ட குறையுமொழியும்படி ஆராய்ந்து தெளிதலென்னும் கணையொன்றினல் உயிர்நீக்கினது மல்லாமல் தனது மனைவியாகிய புத்தியைக் கொண்டு இரதியையும் வெல்லுவித்தான்.

காமன் உயிர்நீங்கினபிறகு கோபன் மனம் பதைத்து, ஹிம்ஸை யென்பவளைத் தன் நெடுமூச்சுத் தேர் செலுத்தும்படி நியமித்து, பொறையனது உயிரைவாங்குவேனென்று கடுஞ்சொற்களாகிய கவண்கற்கள் அநேககோடிகளை விடுத்தான். ஞானதீரன் அவையாவையும் மோனமாகிய ஒரு கேடகத்தால் நீறுபடுத்தி

ளுன். மறுபடியும் கோபனானவன் புருவமாகிய வில்லை வளைத்துக் கண்களிலிருந்து வெளிப்படுகிற நெருப்பாகிய கணைகளைச் செலுத்த, அவற்றையும் பொறையன் இன்சொல்லாகிய வாளினால் விலக்கினான். மேலும் கோபன் பொறையனைத் தன் கையாலறைய அதைப் பொறையன் புன்சிரிப்பு என்னும் வேலினாலொழித்துக் கோபனது உயிரை நீக்கி உடம்பையும் கீழே விழுத்தினான். இப்படிக் கோபனிறந்ததைக் கண்ட ஹிம்சையென்பவள் மிகவுந் துக்கித்துத் தானும் உயிர்விட்டாள். அப்பால், உலோபன் விராகனை உயிர்வாங்குவேனென்று சினந்துவந்து, பஞ்சகாலத்தில் ஒருவறியன் வந்திரக்க இவன் ஏழையென்று நினைத்து அன்பில்லாதவனுண்பித்த உணவென்னும் வேலாயுதத்தை விடுக்க, விராகன் அந்த வேலாயுதத்தை அவ்வுணவை மறுத்தலென்கிற ஒரு வெற்றிவேலால் வெட்டி விழுத்தினான். இழிகுலத்தோர் கொடுந்தொழிலாற் சம்பாதித்த பொருளை நல்லநாட்களில் தருமதானஞ் செய்தலென்னும் கடுங்கணையொன்றை உலோபன் செலுத்த அதை விராகன் மேலோரிடத்திலும் இரவாமையென்னுங் கணையொன்றினால் வெட்டித் தள்ளினான். மறுபடியும் லோபன் தன் மனையாள் இச்சிக்கும் பொருளாகிய அம்பைச்செலுத்த, அதையும் விராகன் தன் இயற்படையாலறுத்து எந்தப்பொருளையும் வேண்டாமையென்னும் வேற்படையையேவினவுடனே, லோபனும் அவன் மனைவியாகிய இச்சையும் மடிந்தொழிந்தார்கள். அப்பால் ஆங்காரன் முதலானோருடைய வலியைச் சமன் முதலானோர் அழித்தொழித்தார்கள். இந்தப்பிரகாரம் காமனாதியர் இறந்தொழிதலும், வைதிகராகிய விவேகனாதியர்மேல் சார்வாகன்முதலானோர் போர்செய்யத் தொடங்கினார்கள்.

காமனாதியர் வதைச்சருக்கம் முற்றிற்று.

---

## 31. உலகாயதன் வதைச்சருக்கம்.

கொடுங்கோல் செலுத்தி யுலகத்தை யாளுகின்ற மோகனடிமைத் தொழிலைச் செய்கின்ற மூர்க்கருக்குள்ளே வேதநெறிக்குப் புறமாகிய மதங்களை மேற்கொண்டு விவேகன் படைமேல் புலிபோலப் பாயாநின்ற கொடியோர் கூட்டத்திலொருவனாகிய உலகாயதனென்று சொல்லப்பட்ட ஒரு கொடியவன், மின்னற்கொடிகள் ஆகாயத்தை விட்டு இவ்வுலகத்தில் வந்தாற்போல விளங்குகின்ற மாதரது போகத்தை யநுபவிக்காமல் வீணே பொழுது போக்கி என்னபயனை யடையத் தவஞ்செய்ய முயல்கின்றீர், அறிவிலிகாள்! என்று உலகத்தாரை யிகழுஞ்சொல்லை முன்னாகச் சொல்லிக்கொண்டு வாதப்போர்க்களத்தையடைந்தான். அடைந்தவன் விவேகன் படையிற் புகுந்து, சிற்றறிவாகிய மதயானையைத் தார்க்கிகராஜன் எதிரே நடத்தி, தெளிவில்லார் சொன்ன நூலாகிய வில்லைவளைத்துத் தீத்தொழிலாகிய நாண்பூட்டி மையலையுண்டாக்குகின்ற சொல்லாகிய கணைகளைத் தொடுத்துப் போர்செய்யத் தொடங்கினான். எப்படியென்றால், வேதவேதாங்கங்களின் நெறிகளையாராய்ந்தறிந்த தார்க்கிகராஜன் தோள் பூரிப்பைக்கண்டு, இவன் நெஞ்சு பறையறைந்தாலும் நேரே நின்று போர்செய்வானென்று தெளிந்து, வஞ்சகனாகிய உலகாயதன் சில சபதவார்த்தைகளைச் சொல்வானாயினன். அவை வருமாறு:-குளிர்ந்தநதி நீரைவிட்டுக் கானனீரால் தாகந்தணிப்பவர்போல மாதரது சுகாநுபவத்தைவிட்டு முத்திப்பயனை யடையுமாந்தர் இடிபோன்ற விதண்டாவாதிகளால் வருந்திப் புண்பட்ட செவி குளிரவும் மோகன்கேட்டு மனமகிழவும் சொல்லுகின்றான்:மனமுதலாகிய ஆறு பொறிகளாலும் காணத்தகுந்த காட்சிப்பிரமாண மில்லாமல் அநுமானம் உபமானமுதலிய வெல்லாம் யாம் விரும்பேம். அவற்றை

விரும்புவோர் மெய்புணர் வில்லாதவராவர். அந்தப்பிர மாணங்களைக்கொண்டு அளவிட்டறிதல்யாவர்க்கும்அரி து. பூதம்எவ்வியல்புடையதென்றால்கடின சீதங்களாகிய இயல்போடு சலநமே வேறாகப் பெறப்படுகின்றன. அந் தப் பூதங்களாவன: நிலம் நீர் நெருப்பு வாயுவாகிய இவைகளே. அவற்றின் குணங்கள் கந்தம் இரதம் உருவு ஊறு என்பனவே. இவை நித்தப்பொருள்கள்; இவை ஒன்றோடொன்று சம்பந்தித் திருப்பதும் இயற்கை யேயாம். பலவடிவங்களாயிருக்கிற கடாதிகள் மண்ணி லுண்டாதல் போலப் புத்தி குணம் பொறிபுலாதிகள் யாவும் அந்தப் பூதங்களி லுண்டாகும். எதுபோல வென்றால், கடலிலுண்டாகின்ற குமிழியைப் போலா கும். ஒரு பூதம் நீங்கினால் அதின் புலனுமொடுங்கும். மற்றுள்ள சராசரங்கள் நிலைபெற்றிருக்கும். அவைபோ லக்காரியங் கெட்டால் அதுவும் தன் காரணத்திலடங் கும். இவ்வகையாய்ப் பேசுகின்ற சபதவார்த்தைகளை யிகழ்ந்து பின்னப் படுத்துகின்ற பகைவரது பெரும் படை நடுங்கும்படி அவன் ஊகமென்னும் படை சேர் த்துப் போரில் வெற்றியடைய முயல்வானாயினன்.

நாளிவ்வாறு சொன்ன இந்தச் சூளுறவுக் கெதி ராக உடலெடுக்கச் செய்யும் வினையும் ஆன்மாவும் வினைப்பயன்களை நுகர்விக்கும் இறைவனும் உண் டென்று சொல்லுதல் மலடி மகன் முயற்கொம்பிற் கால்வைத்தேறி ஆகாயத்திற் பூத்த தாமரை மலரின் வாசனையை நுகர்ந்ததுபோலாகும்.

ஒருவன் செய்த கருமம் அவனைத்தொடருமென் றால், இவ்விடத்தில் இறந்துபோனபோது தொடரும் விதம்யாது? தூலவினை யழிந்தாலும் விரைவாயொடுங் கிச் சூக்குமத்தை யடையும்; தீபம் அவிந்தால் ஒளியெங் கே யுண்டாயிருக்கும்? இதற்கு விடை சொல்வாயாக. அறிவும் உருவும் ஒவ்வாதிருப்பது கருமத்தாலே யென் னில், விரல்கள் ஒன்றையொன் றொவ்வாமல் நீண்டும்

குறுகியுமிருப்பது எந்தக் கருமத்தாலே சொல்லக் கடவை. இன்பதுன்பங்கள் கருமத்தாலே உண்டா வன வென்றால்,நீர் சந்தனம முதலியவைகளும் நெருப் பும் பொருந்துதலால் உடம்பிலுள்ளதோல் முதலியவை சுருளுதல் குழைவடைதல் முதலிய செய்கைகள் நிக ழா நின்றன. இதற்குக் காரணமாவது எந்தக் கருமம்? உடற்குணமல்லாமல் வேறோ ரான்மாவுண்டென்றால் அவ்வான்மா குடற்புரையில் புகுந்திருக்கிறானோ? அறு பொறியாலும் அவ்வான்மா அறியப்படுவோ னல்ல னென்பாயாகில், அச்சொல் ஆமைமயிருக்கும் முயற் கொம்புக்கும் அளவுசொல்லுதற்கு நிகராகும். இறை வன் அருவமாகில் ஆகாயம்போல அறிவில்லையாகும். உருவமாகில் பூதசம்பந்திகளி லொன்றாகும். இவ்விரண் டுதன்மையு முண்டென்றால் அச்சொல் ஆகாயமானது இமயமலையை யேந்திக்கொண்டு தெரு வழியாய்ப் போயிற்றென்று ஒருவன் சொல்லுவதற்கு நிகராகும். பூதங்களால் அன்னமுண்டாகும்; அதனால் உடல்களும் புத்திமனங்களும் வேறு வேறாய்த் தோன்றும். அறி வில்லாதவனே! இவ்விஷயங்களை யெல்லாம் முன்னமே வேதங்கள் மொழியா நிற்கவும் உலகத்தார் மூர்க்கராய் தெளிவில்லாமல் அலைகின்றார். இதென்ன ஆச்சரியம்! நீர்ப்பெருக்கில் நின்றும் நாவறண்டு தாகத்தோடு நிற் கின்ற அறிவிலிகள்போல மேலுலகத்திற் சென்று வெறும்பயன் பெறவிரும்பி இவ்வுலகத்தில் மின்கொடி போன்ற மாதரது சுகானுபவத்தை யிழந்து மாண்டு போகின்ற பேயர்க்கு அறிவுறுத்த வல்லார்யார்? இந்திரன் தன் மனைவியாகிய இந்திராணியைத் தன் தொடைமீது உட்காரவைத்தும், பிரமன் தன் மனைவியாகிய சரஸ்வதியைத் தன் நாவிற் பதித்தும், விஷ்ணு தன் மனைவியாகிய இலக்குமியைத் தன் மார் பிலணைத்தும், சிவன் தன் மனைவியாகிய பார்வதியைத் தன் இடப்பாகத்திற் சேர்த்தும் மாதர் சுகானுப

வத்தை அனுபவியா நின்றார்கள். ஆதலால் நீங்களும் இந்த மின்கொடிபோல்வாராகிய மாதரை விருப்பத் தோடுகூடிச் சுகித்துவாழ்ந்திருங்கள். மூங்கில்போன்ற தோளினையுடைய மாதரது பாதத்திலூட்டிய செம் பஞ்சின் சுவடு நம்தலைமீது படும்படி அவரது புலவியை நீக்கி, இளமுலைப் போகத்தை யநுபவிக்காதவர்களாய், உமியைக் குத்திக் கைநோவார்போலப் பொய்வேஷந் தாங்கிச் சிலர் இவ்வுலகில் திரிவர். இதென்ன பாவம்! மாதரது கனத்து இறுமாந்து விம்முகின்ற ஒளிபொருந்திய முலைத்தடத்தில் மூழ்கி அவரது சிவந்த அதரமாகிய புதிய அமிர்தத்தையுண்டு, அவரது கூந்தலாகிய மணமலர்பெய்த சோலையின் இனியநிழலில் இன்புற்று வாழ்ந்திராமல் சிலர் வீணாகவே காட்டில் காய் கனி கிழங்குகளைப் புசித்து மறுமையின்பத்தை விரும்பித்திரியாநிற்பர். பிணங்கிய மாதரைப் பிணக்கந்தீர்த்து மகிழச்செய்வதும், அவரைக் கூடி இன்புறுவதும் ஆகிய இவைகளே அரியதவமாகும். அவரது இளமுலையில் தோய்ந்து திளைப்பதே ஜீவன் முத்தியாம். இந்தமதத்தை இவ்வுலகத்தில் எவர் மேற்கொண்டாரோ அவரே ஜீவன் முத்தர். முத்தி ஒன்று உண்டென்றும் அதனைப் பெறவேண்டுமென்றும் வீணாக இவ்வுடம்பை வருத்துவதனால் என்னபயன்? அந்த முத்தியைக் கண்டவர், கேட்டவர், அவர்க்குச் சாக்ஷி சொல்பவர் உண்டாயின் அவர்களைக் காட்டுங்கள்; காட்டமாட்டீராயின், நீதிநெறி தவறாமல் பொருளைச் சம்பாதித்து அதைக்கொண்டு கோவைக்கனிபோன்ற அதரத்தையுடைய மாதரது சுகானுபவத்தை அனுபவியுங்கள். மாதரது யாழோசையினும் இனிமையாகிய சொல்லையும், ஏந்திய இளமுலைகளையும், செம்பொன்னாற் செய்யப்பட்டதை நிகர்த்த வடிவத்தையும், பவழம் போன்றவாயையும், முடிமாலையின் நறுமணத்தையும் அனுபவித்துச் சுகிக்காமல் வீணே காலங்கழிப்பவர்

அறிவிலிகளே! அவர்களுக்கும் பிணத்துக்கும் வேற்றுமையுண்டோ? சந்திரனில்லாத இரவும், தாமரைகள் மலராத பொய்கையும், குங்குமக் குழம்பணிந்த கொங்கைகளையுடைய மாதரின்பம் அநுபவியாதவரது வாழ்வும் சமானமாகும். இவ்வுலகத்தில் மாதர்போகம் அநுபவியாதார் மக்கட் பதடியென்று சொல்லப்படுவார். உலகத்தில் மானிடஜன்ம மெடுத்தவர் கற்கவேண்டுவது காமநூலையே, கற்றபின் அதற்கேற்ப நிற்கவேண்டுவது மாதர் தோளிற்றூங்கிச் சுகிக்கும் பொருட்டுத் தம்மை விற்றாயினும் விரகநோயைத் தீர்த்துக்கொள்வதே. என்று இவ்வாறு பலவற்றைக் கூறி உலகாயதன் போரில் வெற்றியடைந்தவன்போலக்களித்து நிற்குஞ்சமயத்தில், தார்க்கிகன் வந்து விவேகவேந்தனை வணங்கி, யான் சென்று ஒரு கணப்பொழுதில் இவ்வுலகாயதனது செருக்கை அழித்துவருகிறேன்; எனக்கு விடை தந்தருளவேண்டும் என, அவ்வாறே விவேகனும் விடை தந்தனுப்பினன். அப்பால் அந்தத் தார்க்கிகன் சென்று லோகாயதனை எதிர்த்துநின்று, ஓ அறிவிலி! நீ காட்சிப் பிரமாணமே உண்மை; அநுமாநம் ஆகமம் என்பன பொய்; என்றாய். அவ்வாறாயின், உன்னை ஈன்றதாயானவள் அக்கணத்திலே இறந்தொழிந்ததை நீ காட்சிப்பிரமாணமாகக் கண்டாயோ? அன்றி நீ இருத்தலால் உன் தாயொருத்தி இருத்தல் வேண்டுமென்று கொண்டது காட்சிப் பிரமாணமா? அநுமாநப் பிரமாணமா? ஒரு நதியில் பெருவெள்ளமானது சந்தனமரம் முதலிய பொருள்களை வாரிக்கொண்டு வருவதைக் கண்டவர்கள், இவ்வெள்ளம் இவ்வாறு வருதற்குக் காரணம் மேற்றிசையில் பெருமழை பெய்திருக்கலாம் என்று கருதுவது காட்சியா? அல்லது அநுமாநமா? உலகத்தில் ஜோதிஷமும் வைத்தியமும் முற்காலத்திலேயே பெரியோர்களால் சொல்லப்பட்ட பிரகாரம் பலித்துவருகின்றமையால் வேதாதி

நூல்களின் வாக்கியங்கள் உண்மையேயாம். பாக்கு, வெற்றிலை, சுண்ணும்பு இம்மூன்றும் ஒன்ருய்க் கூடினுல் அக்கூட்டத்தில் செந்நிறம் உண்டாதல் இயல்பேயாயினும் அவற்றைக் கூட்டுவோன் ஒருவன் வேண்டுமன்ருே? அதுபோலப் பூதாதிகள் பிரபஞ்சரூபமாகத் தொழிற்படுதல் இயல்பேயாயினும் அவற்றை அவ்வாறு தொழிற்படுத்தற்கும் ஒரு முதல்வன் வேண்டுமன்ருே? பூதகாரியங்கள் யாவும் உதித்துநின்று அழிந்துபோகின்றதனுல் இவற்றை இவ்வாறு தொழிற்படுத்துவோனுகிய இறைவனெருவன் உளனென்று நீ தெரிந்துகொள்வாயாக. அது எதுபோலவெனில், மண்ணினின்றும் குடம் முதலிய பொருள்கள் உண்டாமென்பது இயற்கையேயாயினும் ஒரு குயவனில்லாமல் தாமே உண்டாகாத தன்மைபோலவென்றறி. நீ மாதரின்பம் பெரிது, மாதரின்பம் பெரிது என்று பலகால் வியந்தோதுகின்றனை. ஆனுல் அம்மாது என்னும் பொருள் காணப்படுகின்ற அவ்வுடம்பின் கண்ணேயுள்ள தோலா? இரத்தமா? ஊனு? என்பா? நரம்பா? மச்சையா? சுக்கிலமா? இவற்றில் எதனை நீ வியந்து மாது மாது என்று கூறுகின்றனை. சோழைமிகுந்தொழுகுகின்ற வாயோரத்தில் ஊறும் எச்சிலை அமிர்தமென்று புகழ்ந்து, வயிருகிய உவர் நீர்ச்சாலின் துவாரத்தில் ஒப்பற்ற இன்பமுண்டென்று மருண்டு பேரின்பவீட்டை இழந்தனையே. அழுக்கு, வேர்வை, சீ, பீளை, முதலியவைகட்குப் பிறப்பிடமாயுள்ள நவத்துவாரங்களையுடைய புழுக்கூட்டிற்கு மாது என்னும் ஒரு பெயரையிட்டு அதன் இன்பத்திற்கு இச்சிப்பது உன் பேதைமையின் காரியமேயன்றி வேறன்று. வெயிற்காலத்தில் குளிர்ந்த நீரைவிரும்பியும் மழைகாலத்தில் நெருப்பை விரும்பியும் நீ அடைகின்ற சுகமும் ஒரு சுகமாகுமோ? அழிவற்றதும், பரிசுத்தமானதுமாகிய சச்சிதாநந்தமே மேலான சுகமாம். ஒருவன் ஆராயத் தக்

கது வேதாந்தமே. ஆராய்ந்தால் ஒழியத்தக்கது ஆசைப்பெருக்கமே. அது ஒழிந்தால் அடையத்தக்கது இறைவனது கருணையே. அதை யடைந்தால் மூழ்கத்தக்கது ஆநந்தக் கடலே. இவையாவும் உண்மையென்று துணிவாயாக. என்றிவ்வாறு அநுமானப் பிரமாணம் முதலியவும், இருவினைகளும், ஜீவனும், இறைவனும் உண்டென்றும், மாதர் போகம் மோக்ஷமன்றென்றும் சொல்லி முடித்துநின்ற தார்க்கிகனோடு போர்செய்வதற்குப் புத்தர் ஆயத்தப்பட்டு வந்தார்கள்.

உலகாயதன்வதைச் சருக்கம் முற்றிற்று.

---

## 32. புத்தர்வதைச் சருக்கம்.

சௌத்ராந்திகன், யோகாசாரன், மாத்தியமிகன், வைபாஷிகன் என்னும் இவர்களுள் முதல்வனான சௌத்ராந்திகன் போகனது ஏவலால் கோபித்தெழுந்து, ஒருமூடன்யமனைப் போருக்கழைப்பதுபோலத் தார்க்கிகனைப் போருக்கழைத்து எதிர்வந்து நின்றான். அச்சமயத்தில் அவனுக்கு இடக்கண் துடித்தல் தலைக்குமேல் பருந்துவட்டமிடல் முதலிய துர்நிமித்தங்கள் காணப்பட்டன. காணப்பட்டும் அவைகளுக்கு மனந்தளர்ந்து பின்னிடாமல் நின்று சில சபதவார்த்தைகளைச் சொல்லுவானாயினன். முற்றுமுணர்ந்து, கொலை முதலான தீமைகளை வெறுத்து, சாந்தகுணத்தையடைந்து, பரதுக்கம் பொறுக்காதவனாய், தேவர்கள் முனிவர்கள் முதலியோர் வணங்கும்படி முற்காலத்தில் பிடகநூலை அருளிச்செய்த எமது தெய்வமே அருட்டெய்வமாவன்; காட்சி, அநுமானம் எனப்பிரமாணம் இரண்டு. அவற்றால், விரும்பிக் காணவருகின்ற பொருள்கள் ஞானஞேயங்கள். அவையும் கணத்திலழிவன. அப்பொருள்கள் உரு, அரு, வீடு, வழக்கு

என நான்கு; அந்தநான்கும் ஒவ்வொன்று இவ்விரண்டாய் எண்வகையாய் விரியும். இதுவே எனது பிடகாகமத்தின்றுணிபு. இந்த எண்வகையின் விவரம் யாதெனின், உருவின் வகை பூதம் உபாதாநம் என்றிரண்டாகும்; அருவின் வகை சித்தம் கன்மம் என்றிரண்டாகும்; வீட்டின் வகை குற்றம் கந்தம் என்றிரண்டாகும்; வழக்கின் வகை உள்ளது இல்லது என்றிரண்டாகும். இன்னும் இவற்றின் விரிவெல்லாம் நான் எவ்வளவா யெடுத்துச் சொல்லினும் உனக்குப் புலப்படாது என்று சொல்லி இருதோள்கொட்டி ஆரவாரித்தான். அன்றியும் இப்பொழுது நான் சொன்ன இந்தநான்கேயன்றி வேறுபொரு ளில்லாதிருக்கவும், ஆன்மா, ஆகாயம், காலம், திக்கு, இறை என்பனவும் உளவெனச் சிலர் கூறுதற்குக் காரணம் மதுபாநமோ, உன்மத்தமோ அறியேன். ஆயினும் அந்த ஆன்மா முதலியவை உளவென்னுங் கக்ஷியையும் ஒரு க்ஷணகாலத்தில் வெல்லுகிறேன் என்று அதற்கு வேண்டிய யுக்திகளையெல்லாம் பிடகநூல்களினின்றும் எடுத்துச் சொல்லி ஆரவாரித்து நின்ற சவுத்திராந்திகனை நோக்கின தார்க்கிகனும், அந்தச் சவுத்திராந்திகனது கக்ஷிகளையெல்லாம் பலவகையாகிய யுக்திகளை யெடுத்துச் சொல்லிக் கண்டித்து நின்று ஆரவாரித்தான். இதைக் கண்ட யோகாசாரன் விரைந்தெழுந்து தார்க்கிகனோடு விதண்டாவாதப் போர்செய்யத் தொடங்கினான். தார்க்கிகன் அந்த யோகாசாரன் சொன்ன கக்ஷிகளையும் க்ஷணகாலத்தில் பலவகையாகிய யுக்திகளாற் கண்டித்து நின்றான். அதன்பிறகு மாத்திமிகன் எழுந்து தார்க்கிகனை யெதிர்த்துத் தன் வல்லமையெல்லாம் காட்டியும் தார்க்கிகனை வெல்லமாட்டாமல் அவனால் அபஜயப்பட்டு நின்றான். அப்பால் தார்க்கிகன் தாமதியாமல் புத்தன் தன் மார்பிலெறிந்த வேற்படையை யறுத்து அவனையும் வென்று வெற்றிமாலைசூடிப் புலி

போல நின்றான். அப்படி நின்ற தார்க்கிகன் மேல் வைபாஷிகன் என்பவன் பாம்புபோற் சீறிவந்துநின்று, மஞ்சளும் சுண்ணாம்பும் கூடினால் அவற்றின் கூட்டத்தில் செந்நிறம் தோற்றுவதுபோலப் பொருளும் அறிவும் கூடுதலால் சகம் தோன்றும்; இதனை யறிந்தவர்கள் வீடடைவார்கள் என்னும் சொல்லாகிய பாணத்தைப் பிரயோகித்தான். அந்தப்பாணத்தைத் தார்க்கிகன், ஞானம் உள்ளிருப்பது; ஞேயம் புறத்திருப்பது; இவ்விரண்டுங் கூடுதலில்லையாகும்; மேலும் நீ சொல்லுகின்ற ஞானம் அருவம்; ஞேயம் உருவம்; இவை யொன்றோடொன்று பொருந்துதல் இசையாது என்னுஞ் சொல்லாகிய பாணத்தால் அறுத்துத் தள்ளினான். இவ்வாறு ஞானமே பொருளாய்த்தோன்றுமென்றும், அங்கமே பொருளாய்த் தோன்றுமென்றும், ஞானமும் பொருளுங் கூடினால் சகமுண்டாகுமென்றும் வாதித்த சவுத்திராந்திகன் முதலானோரை வென்று நின்றதார்க்கிகனோடு சமணர்வந்தெதிர்த்து நின்றார்கள்.

புத்தர் வதைச்சருக்கம் முற்றிற்று.

---

## 33. சமணர் வதைச்சருக்கம்.

---

அசோகத்தை விரும்பி, மயிற்பீலியைக் கைக்கொண்டு, பாயையுடுத்து, ஆடையை விடுத்து, உதிரந் தோய்ந்த புலால் நாற்றம் நாறுகின்ற சரீரத்தை யுடையராய் நின்று, உணவைக்கையினாலுண்டு, இல்லறவாழ்க்கையை நீங்கி, வேதமார்க்கத்தைத் தவறி நடக்கின்ற சமணர்களுக்குள்ளே நிகண்டவாதி, ஆசீவகன் என்று சொல்லப்பட்ட இருவகை யினருண்டு. அவருள்ளே முந்தினவனாகிய நிகண்டவாதி தார்க்கிகனை யெதிர்த்து நின்று அவனைநோக்கி, எலிப்படை பாம்பின் எதிரே நின்று கர்ச்சிப்பதுபோலச்சிற்சில வார்த்தைகளைப் பிதற்றி, ஆத்யந்தங்கள் வேறுபடும்படி ஒரு பசுநூலாகிய

பேரணிவகுத்துக் கொண்டு, வேதநூலாகிய கோட்டையை இடிப்பேனென்று சொல்லிக்கொண்டு போர் செய்யமுயன்றான். எப்படியெனின், கலைகளோடு கூடிய சந்திரன் குளிர்ச்சி யடைந்திருப்பதுபோலக்குடையிலா அறிவு முதலாகிய எண் குணங்களையு முடையவனாகி, ஞானவாளைக் கைக்கொண்டு நியமம்முதலாகிய நான்கு குற்றமு மொழித்து, நாநா அற்புதச் செய்கைகளைப் பெற்று, மலர்களையுடைய அசோகமரத்தின் கீழ் முக்குடைநிழலில் தேவர்களும் வாழ்த்தும்படி எழுந்தருளி விளங்குகின்ற அந்த அருகனே எமது கடவுளாவன். ஐம்பொறிகளின் வழியே மனஞ் சென்று புலன்களை நுகர்தலொழித்து முக்காலத்தும் நிகழுஞ் செய்தியை ஒரு க்ஷணகாலத்தில் அறிந்துகொள்ள வல்லவனும், தன்னை வழிபடுவாரையும் வழிபடாதவரையும் சமமாக நினைக்கின்ற மனத்தை யுடையவனும், பதினெண் குற்றத்தையும் நீக்கினவனும் ஆகிய அவ்வருகனே எல்லாத் தேவர்களுக்குந் தேவனாவன். பசித்தல், தாகித்தல், பயம், கோபம், சந்தோஷம் முதலிய பதினெட்டுக் குணங்களையும் வெறுத்து வட்டமாகிய பொன்மதிற்குள்ளே வாழ்கின்றவனாகிய அவ்வருகன் இகலன் வந்து வினாவினபோது அவன் மனங் கொள்ளும்படி ஒரு சொல்லைச் சொல்லினான். அவன் சொல்லிய நூல்களுக்குள்ளே பத்துப் பதார்த்தங்கள் உள்ளன. அவை அனாதியாய் காலம், ஜீவன், தன்மாத்திகாயம், அதன் மாத்திகாயம், புண்ணியம், பாவம், ஆகாயம் புற்கலம், பந்தம், வீடு என்று சொல்லப்படுவன. இவையாவும் ஒருவரால் படைக்கப்படாமல் தாமே உண்டாவன. நிற்றல் போதல் முதலிய நிகழ்ச்சியை யுடையதாய், அந்வயவ்ய திரேகங்களைச் செய்து ஒரு கணத்தி லழியும்படி செய்வதே காலமாகும். தன் சரீரத்தில் கரும்பிற் சுவைபோல நிறைந்திருப்பதே சீவனாகும். தன்மாத்திகாயமும் அதன்மாத்திகாயமும் எவை

யெனின், பொருளைச் சார்ந்து ஒரு கணத்தில் சலித்தலை யும் நிலைத்தலையும் செய்வனவேயாம். புண்ணியம் நன் மையைச் செய்வது; பாவம் தீமையைச் செய்வதாய்ச் சேர்ந்துநிற்கும்; புற்கலமாவது எவ்விடத்திலும் அணு ரூபமாய் வியாபித்து இரும்பு பொன் மரம் முதலி யவுருவங்களா யிருக்கிற பொருளேயாம்; அறுதொழி லேபந்தமென்று சொல்லப்படும்; அத்தொழிலை யொழி த்துத் தவத்தொழிலை மேற்கொண்டு பழவினைகளை யநு பவித்தொழித்தலே வீடாகும். என்றிப்படிச் சொன்ன நிகண்டவாதியை ஒரு க்ஷணகாலத்தில் வெல்வேனெ ன்று தார்க்கிகனெழுந்து, ஒரு மதயானையின்மீது சிங்க வேறு பாய்ந்தாற்போலப் பாய்ந்து நின்று, அந்தநிகண் டவாதியை முன்னிலையாக்கி, ஓ பேதாய்! அருகனுக்கு அனந்த ஞானகுணங்களுண்டென்று சொன்னையன்றி அவனிடத்துள்ள தீக்குணங்களை யெடுத்துச் சொன்னு யில்லை. ஜீவகோடியி லொருவனாகிய அருகனுக்கு ஞான குணங்களும் அஞ்ஞானகுணங்களு மாகிய இரண்டு முண்டன்றோ? தருமஞ் செய்து அந்தக் குற்றத்தை நீக் கிக்கொண்டானென்றால், தருமஞ்செய்வித்தவன் வேறு வான்; செய்த அருகன் வேறுவான்; அநவஸ்தாதோஷ மும் ஏற்படுகின்றது. இந்திரிய சம்பந்தமொழிந்து எல் லாவற்றையு மறிந்தானென்றாய். அவன்தேகியாதலால் மனுதிகளுண்டு; அல்லவென்றால் எல்லாவற்றையும் அறியுமாற்றலுண்டாகாது. வழிபடுவோர்க்கும் வழி படாதோர்க்கும் விருப்பு வெறுப்புக்களின்றிச் சமமா யிருப்பனென்றாய். அப்படியாயின் அவன் வெற்றுடம் புள்ளவனுவன்; பொன்னெயில் வட்டத்தில் அரசர் போலிருப்பதற்கோர் பயனுமில்லை. மனமுதலியபொ றிகளில்லாதவன் இகலன் கேட்ட கேள்விக்கு விடை சொன்னதெப்படி? அவன் வினவினதும் இவன் விடை சொன்னதும் ஊமையர் தம்முள்ளே சொல்லிக்கொண் டதை நிகர்க்கும். சீவன் உடம்பில் நிறைந்திருப்பா

னென்றாய். அப்படியானால் உடம்பை யிருகூறாய் வகிர்ந்தபோது சீவனும் இருகூறாகி, வகிர்ந்தவுடம்பின் கூறுகளில் தங்கியிருத்தல்வேண்டும். அவ்வாறு தங்கியிராமையை நீயுமறிந்திருக்கிறாயாதலால், கரும்புஞ் சுவையும்போ லென்ற வுவமை பொருந்தாது. நீரும் குடமும்போலத் தேகம் அழிந்தபோது சீவனும் அழிந்தொழிவதாய் முடியும். கருத்தாவொருவனிருந்து புண்ணிய பாவ வினைப்பயன்களை இசைவியானாயின் அப்பயன்களை யநுபவிப்பாரில்லை. அம்பானது தன் குறியைச் சென்றடைவதுபோல வினைப்பயன்களாகிய புண்ணிய பாவங்களும் செய்த சீவர்களை யடையும் என்பையாயின், அந்த அம்பைச் செலுத்துதற்கு ஒரு வில்வல்லான் வேண்டும். ஆதலால் நீ சொன்ன உபமாநம் பொருந்தாது. உடம்பை வருத்தினால் வீடுண்டாகு மென்றாய். அப்படியானால், நோவாளியி னுடம்பு வருந்துவதனால் அவனுக்கும் வீடுண்டாகவேண்டும். உலகத்தில் வருந்தினவர்க்கு இன்பமுண்டாகுமென்றாய். அப்படியானால் உன் மூக்கை வாளால் அரிந்துகொண்டு இன்பத்தை அநுபவிக்க நான் பார்க்கவேண்டும், அப்படிச் செய்வாயாக. முன்னைய வினைகளெல்லாவற்றையு முற்றுமநுபவித்த பிறகு பொன்னெயில் வட்டத்திற் புகுவானென்றாய். அவ்வினைகள் கடலின் மணற்றொகையைப் பார்க்கினும் மேற்பட்டிருத்தலால் அவற்றை யநுபவித்துப் பின்பு பொன்னெயில் வட்டத்திற புகுதல், கடலின் நீர்முழுதும் வற்றினபிறகு அதிலுள்ள மீன்களை உண்ணவெண்ணங்கொண்டிருக்கிற பூனையை நிகர்க்கும். பந்தத்தை யறுத்துப் பேரின்பவீட்டை யடைவிப்பதற்குரிய ஒருகருத்தா வின்றி நீயே யடைதல்கூடாது. அது எதுபோலவென்றால், கிணற்றில் நீர்மொண்டதோண்டி, எடுப்பாரின்றித் தானே மேல்வந்ததுபோலாகும். ஆதலால் உடம்பை வருத்தாமல் கருத்தனை

நோக்கித் தவஞ்செய்து வீடடையக்கடவையென்றான். அருகன் தேவனல்லனென்றும், அவன் ஆதிவேதஞ் சொல்லத் தகுந்தவன் அல்லனென்றும், பத்துப்பொருள்களில்காலம் ஆகாயம் என்னுமிரண்டொழிய நின்ற எட்டுப் பொருள்களினிலக்கணம் வழுவாமென்றும் பலவகை யுக்திகளைக் கொண்டு கண்டித்து வென்று நின்ற தார்க்கிகனோடு வாதித்து வெல்லுவேனென்று ஆசீவகனென்பவனொருவன் புறப்பட்டு வந்துநின்று, தார்க்கிகனைநோக்கித் தன் மதக்கோட்பாடுகளெல்லாவற்றையும் விரிவாயெடுத்துச் சொல்லிவாதிக்க, தார்க்கிகன் அவற்றையெல்லாம் ஒருநொடிப்பொழுதில் தன் தர்க்கயுக்திகளால் பஞ்சுபோலப் பறக்கடித்தான். இவ்வாறு நிகண்டவாதி, ஆசீவகன் என்கிற சமணரைத் தார்க்கிகன் வென்றபிறகு, மோகனொருவன் நீங்கலாக மற்றக் காமன் முதலானோர் போரிலழியும்படி வென்று வாகைமாலை சூடின நிரூபகன் முதலானவர்கள் பஞ்சகோசமென்னும் போர்க்களத்தின் ஒரு பக்கத்தில் நின்ற விவேகனை வணங்கி நின்றார்கள்.

சமணர் வதைச்சருக்கம் முற்றிற்று.

---

## 34. மோகன் வதைச்சருக்கம்.

விவேகன் தன்னை வணங்கிநின்ற நிரூபகன் முதலானவரைத் தன் அருட்கடைக் கண்ணால் நோக்கி மனமகிழ்ந்து, அவர்களெல்லார்க்கும் இன்சொற்சொல்லிப் போர்செய்த வருத்தத்தையொழித்து, சொன்னபடியே தமது சபதத்தை முடித்துவந்த துணைவரோடும் சுமதியென்னும் தன் தேவியோடுங்கூடி ஆநந்த சாகரத்திலழுந்திக்களித்திருக்குங் காலத்தில், காமன் முதலிய வீரர்கள் யாவரும் யுத்தகளத்தில் விவேகனது படைவீரரால் இறந்தொழிந்ததை மோகன் அறிந்து மிகவும் மனங்கலங்கித் துக்கசாகரத்தில் மூழ்கினான். அதைக்

கண்ட அவன் மனைவியாகிய துன்மதியானவள் தன் கணவனாகிய மோகனை நோக்கி, நீ யிப்படித்துன்பப்படு தல் தகாதகாரியம்; நமது புதல்வனாகிய அஞ்ஞானும் நானும் அழியாதிருக்கையில் இறந்தொழிந்த நமது படைஞர் யாவரும் மறுபடியும் பிழைத்தெழார்களோ? நமது உறவினர் யாவரும் மாண்டதனால் நமது வலி குன்றிப்போயிற்றென்று துக்கித்தல் யாதுக்கு? மூண் டெரியாநின்ற செந்தழல் நீறு பூத்திருப்பது கண்டு அதன்மீது விறகுகள் பலவும் போய்விழுந்தால் அவற் றை அந்த நெருப்பானது சுட்டு நீறுக்காமல்விடுமோ? உன் வலிக்கு எதிர்நிற்பவர்யாவர்? பிரமன்முதலானவர் களுடைய அறிவைமயக்கினவுனக்கு இந்த விவேகன் படைஞரை வெல்லுதல் அருமையோ? நான் விடயத் தேரைச் செலுத்துகிறேன், நீ அந்தத் தேர்மேலேறி இந்தப்பகைவரை வெல்லக்கடவை யென்று சொன் னாள். அதைக்கேட்ட மோகன் அவ்வாறே செய்கிறே னென்றுசொல்லி, வலியமனத்திலுள்ள வஞ்சனையாகிய வில்லில்அநாதரவாகிய நாண்பூட்டி, தீமைபுன்மைகளா கிய அம்புகளையும் அம்புக்கூட்டையும் தன் முதுகிலே தாங்கி, எதனையும் அறியாமல் மயங்குதலாகிய உடற் கவசம் பூண்டு, தீச்சொற்களாகியவீரக்கழலைத் தரித்து, பிறவிகளொழியாமல் வரப்பண்ணுகிற வினையாகிய சக் கரத்தை யேந்தி, துர்ப்போதனை யென்னும் வேலாயு தங் கைக்கொண்டு, அயுக்த மென்னும் சுரிகையை ஒரு பக்கத்திற்கட்டி, விகடமாகியகச்சையை அரையிற் றரித்து, மடமையென்னும் கேடகம்தாங்கி, மற்றுமுள்ள தன் ஆயுதங்க ளெல்லாவற்றையும் அவ்வவற்றுக்குரிய இடங்களி லணிந்து, தன் மனைவியாகிய துன்மதியாற் செலுத்தப்படுகிற விடயத் தேர்மேலேறினான்.

அந்தச் சமயத்தில் விவேகனானவன் இவன் வர வைக்கேட்டு, கீழோர்க்குள்ள துர்க்குணம் அவர்கள் இறந்தொழிந்தாலன்றி அவர்களை விட்டு நீங்காதாத

லால் இந்தமோகனை யினிவைக்கப்படாது, மாள்விப்பதே தகுந்தகாரியமென்று துணிந்து, சிவ பக்தியாகிய அணங்குதந்த சிவகவசந்தரித்து, விஷ்ணுபக்தியாகிய அணங்குதந்த திருவெட்டெழுத்தென்னுஞ் சக்கராயுதம் தாங்கி, அந்தச் சிவசரிதம் விஷ்ணுசரிதங்களாகிய கச்சையும் உடைவாளும் தரித்து,பிறவியை யழிக்கின்ற பிரமோபதேசமாகிய வீரபட்டங்கட்டி, நாதப்பிரமமாகிய வீரக்கழலணிந்து, அங்கநியாசம் கரநியாசம் என்னுங்கேடகம்தாங்கி, சிவபெருமானது ஸ்ரீ பஞ்சாக்ஷரமாகிய சூலமேந்தி, பதினெட்டுப்புராணங்களாகிய ஆயுதங்களையுந் தரித்து, தாரகமாகிய வில்லையேந்தி, அதில் ஆவிருத்தியென்னும் நாணேற்றி, சிவநாம விஷ்ணுநாமங்களாகிய அம்புகள் அமைக்கப்பெற்ற தனது இதயமாகிய அம்பறாத்தூணியையும் தாங்கி, தன் குணங்களாகிய மற்ற ஆயுதங்களெல்லாவற்றையுந் தரித்து, தத்துவத்தேரிலேறித் தன் மனைவியாகிய சுமதியோடும் போர்க்களத்தைச் சேர்ந்த காலத்தில், முற்காலத்தில் இராவணன் ஸ்ரீராமரோடு போர்செய்யவந்தது போல மோகன் இவ்விவேகனோடு போர்செய்யத் துணிந்து வந்தான். வந்தவன், சுமதியாகிய தேவியோடும் நிரூபகன் முதலாகியபடைஞர் சூழ்ந்துவரவும், அவர் நடுவே ஞானியர் நெருங்கிநின்று புகழ்ந்துவரவும் தத்துவத்தேரேறி தேவர்கூட்டத்தினடுவே இந்திரன் விளங்குவதுபோல விளங்குகின்ற விவேகனைக் கண்டான். கண்டவுடனே, தன் படைஞர் மாண்டதையும் பகைவர் வெற்றியடைந்ததையும் நோக்கி மனமயங்கி, துன்மதியின் போதனையால் அறியாமையை மேற்கொண்டு யுக்தாயுக்தங்களை யறியாமையென்கிற புருவங்களிரண்டும் மேலேறவும், கலக்கமென்னும் கண்கள் சிவக்கவும், குடிலமாகிய வில்வளைத்து, கொடுந் தொழில்களாகிய அம்புகள் கோடானு கோடியாகத் தெரிந்தெடுத்து விவேகன் மேலும் அவன் படைவீரராகிய நிரூபகாதி

யர் மேலும் மலைகளின்மீது சோனைமாரி பெய்வதுபோலச் சொரிந்து ஆரவாரித்தான். அந்தச்சமயத்தில்விவேகனைவன் மோகனேடு போர்செய்யத் துணிந்த தன் படைஞராகிய நிருபகாதியரைத் தடுத்து, நான் செய்யும் யுத்தத்தைப் புறத்தேயிருந்து பாருங்கள் என்று சொல்லித்தன் வில்லைவளைத்து, ஒரு கடுங்கணை தொடுத்தேவி மோகன் விட்ட கணைக ளெல்லாவற்றையும் பொடியாக்கினன். அதைக்கண்ட மோகன், வேதங்களால் சத்தியமென்று சொல்லப்படுகிற யாகபலபோகமென்கிற வாளாயுதத்தால் இந்த விவேகனது அறிவை யழிப்பேனென்று அதனையேவ, விவேகன் அதற்கு மாருக எல்லாப்பதங்களும் அசத்தியமென்றொழிக்கிறபுத்தியாகிய வடிவேலொன்றைவிடுத்து அதைப் பொடிசெய்து வெற்றியடைந்து நின்றுன். பின்னும் மோகனைவன் குதர்க்கமாகிய ஒரு கடுங்கணையை விடுத்தான். அதை விவேகன் தர்க்கமென்னுங் கணையாற் கண்டித்தான். அது கண்டமோகன்சௌகதமென்னும் வாளெறிந்தான். அதைவிவேகன் கன்மகாண்டமென்னும் அம்பினல் கண்டித்து விழுத்தினன். இவ்வாறு இவ்விருவரும்போர்செய்யுங் காலத்தில், மோகன் மனைவியாகிய துன்மதியென்பவள்அவிஞ்சையென்னுஞ் சூலத்தையெடுத்து விவேகன் மனைவியாகிய சுமதியின் மீது எறிந்தாள். அதைச் சுமதியானவள் விஞ்சை யென்னும் வேல்விட்டு அறுத்துவீழ்த்தி, நல்லொழுக்கமென்னும் வேல்விட்டுத்துன்மதியின்உயிர்வாங்கினள். அவளிறந்ததைக் கண்டமோகன் வேறுபேச்சுத் துணையுமின்றி மிகவுந் துக்கித்து, யானையுண்ட விளங்கனிபோல வெற்றுடம்பாய் நின்றுன். அப்பால் மோகன் சிறிது தெளிந்து தன்மாயையாகிய கணையையேவ, அந்தக்கணையின் மாயாவல்லபத்தால் முன்னே யிறந்த காமனுதியோர் உயிர்பெற்றெழுந்து விவேகன்மீது தங்கள் தங்கள் ஆயுதங்களை ஒருமிக்கச் செலுத்துதலும், விவேகனும் சிறிது

மயங்கி நின்றான். அந்தச்சமயத்தில் யுக்தியென்பவ னெழுந்து நின்று, ஐயனே! மோகனது மயக்கமாகிய இதனையாராயாமல் துக்கிக்கலாகாது. அரிநாமமாகிய உன் அம்புப்புட்டிலில் மாயாதீதம் என்கிற கணையொன் றிருக்கிறதே அதையெடுத்துப் பிரயோகிக்கக் கடவை யென்றான். அதுகேட்ட விவேகன் ஆம் ஆம் என்று மனமகிழ்ந்து அந்தக்கணையை யெடுத்துப்பிரயோகித்த வுடனே மோகனது வஞ்சகத் தொழில்கள் யாவும் சூரியனைக் கண்டு அந்தகாரம் நீங்குவது போல நீங்கின. பின்னும் அந்தக் கணையொன்றை யெய்தான். அது சென்று மோகனது கன்னெஞ்சிற் பட்டுருவிக் கங்கா நதியில் முழுகி விவேகனது அம்பறாத் தூணி யை வந்தடைந்தது. அந்தக் கணை தன் மார்பிற்பட்டு உருவியோடினமையால் மோகன்முகங்கவிழமண்மேல் விழுந்திறந்தான். அவனிறந்தவுடனே அவன் மனைவி யாகிய துன்மதியும், நெருப்போடு புகையு மழிவது போல இறந்தொழிந்தாள். இதைக்கண்ட தேவர்கள் மலர்மழை பொழிந்தார்கள். தேவதுந்துமி முழங் கிற்று. வேதங்கள் ஆரவாரித்தன. முனிவர் வாழ்த்தி னார். யோகியரிதயங்கள் களித்தன. விவேகராஜன் வெற் றிமாலை சூடிச்சுமதியாகிய தன் மனையாளோடும்தேரை நடத்தி நிருபகாதியர் சூழப்போய்த் தனது அரசிருக் கையைச் சேர்ந்தான்.

மோகன்வதைச்சருக்கம் முற்றிற்று.

---

## 35. மானதன் புலம்புறு சருக்கம்.

அப்பால், மோகனுதியராகிய மைந்தரெல்லாரும் இறந்தொழிந்த செய்தியை மானதனென்னும் தந்தைக் கும் பிரவர்த்தியென்னும் தாய்க்கும் சொல்லும்பொ ருட்டுச் சில தூதர் விரைவாகப்போய் மானதனைக்

கண்டு வணங்கி, ஐயனே! நீ பெற்ற புதல்வனுகிய மோகவேந்தன் முதலியோர் தம் உறவினரோடும் விவேகவேந்தனது படைவீரர் தாக்குதலால் போர்க்களத்தில் தம் உயிரிழந்தொழிந்தனர் என்று சொன்னுர்கள். அச்செய்தியைக் கேட்டலும், மானதன் நெருப்புப் பொறிபறக்க உலைக்களத்திற் காய்ந்த கூரிய வேற்படையானது தன் இரண்டு செவிகளிலும் நுழைந்தாற்போலத் தவித்து, தன்மேல் இடி விழப்பெற்ற மலையின் உச்சியில் வாழ்கின்ற பாம்புபோல ஏங்கித் துடித்து, யாரோ சில பாவிகள் வந்து நீ பெற்ற பிள்ளைகள் மடிந்தொழிந்தனர் என்றூர்கள். அது உண்மையோ? அல்லவோ? அன்றி தூதர்வந்து இவ்வாறு சொல்லக் கனவு கண்டேனே? விவேகனுக்கு மோகனுதியரை வெல்லத்தகுந்த சாமர்த்திய முண்டோ? இந்தப் பொய்வார்த்தையை யாரோ கற்பித்து விட்டதுபோலக் காணப்படுகின்றது! என்று இவ்வாருகப் புலம்பி எழுந்து, இனி நானேபோய் இச்செய்தியின் உண்மையை அறிந்து வருவேனென்று நெருப்பின் மீது நடப்பவன்போல அடி பெயர்த்துவைத்து, கண்ணும் சிந்தையுங் கலங்கி, அந்த மோகனுதியர் இறந்து விழ்ந்த யுத்தகளத்தை யடைந்து, விவேகன் முதலிய புதல்வர்களால் மோகன் முதலிய புதல்வர்கள் இறந்து கிடக்கின்ற நிலைமையை நோக்கி, நஞ்சுண்டவன்போல மனமயங்கி, வாய்குழறி, மண்ணில் விழ்ந்து புலம்பத் தொடங்கினுன்.

எப்படி யெனின், மேகவண்ணனுகிய திருமாலையும், வேதாதிகாரியாகிய பிரமனையும், பார்வதீ நாயகனுகிய பரமசிவனையும் வென்று அத்விதீயமாகிய பிரமத்தையும் பந்தித்த மோகனே! இப்படிப் புலம்புகின்ற என் முகத்தைத் திரும்பிப்பாராயோ? எல்லாப் பொருள்களையும் படைத்தவன் யானே யன்றி வேருெரு தெய்வம் அல்லவென்று சொல்லுகின்ற அஹங்கார

னே! நான் பெற்ற செல்வமே! உன் பாட்டனைக் கொடிய பாசத்தால் கட்டின உனது பாலலீலையை இன்னம் ஒரு கால் நான் காணப்பெறுவேனே? காமனே! நிரு பகனுக்கு எதிர் நிற்கமாட்டாமல் உன் வீரத்தன்மையை யிழந்து உயிர் நீங்கினையோ? உன் கரும்பு வில்லில் வண்டு நாண்பூட்டி, பஞ்சபாணங்களைத் தொடுத்து, இனி யொருகால் நீ உலகங்களையெல்லாம் வெல்லக் காண்பேனே? கோபனே! மண்ணும் விண்ணுங் குலையும்படி யெழுகின்ற வாக்கும், நெருப்புப் பொறி பறக்கும் பார்வையும், கோரமாகிய நெட்டுயிர்ப்பும், பெருவேர்வையுங்கொண்டு இனி யொருகால் முனிவரிடத்தில் அடையக் காண்பேனே? லோபனென்னும் புதல்வனே! வைராக்கியன்விட்டவிரதமாகிய வேலினால் வலியிழந்து எல்லா உலகங்களிலும் சென்று விளையாடிய உன் கால் ஓய்ந்து இந்த யுத்தகளத்தில் தூங்குகின்றாயே. மதனே! மச்சரனே! மானனே! இராசதனே! தாமதனே! சங்கற்பனே! சந்தேகனே! உங்களுக்கும் உங்கள் மனைவியர்க்கும் உங்கள் புதல்வர்க்கும் இப்படிப்பட்ட தீங்கு விளையுமென்று சிறிது மறியாமற் போனேனே! என்றிவ்வாறு பலவகையாய்ச் சொல்லிப் புலம்பி ஏங்கிப் பரதவித்து, மனம் நொந்து உருகி மானதன் சோர்ந்து விழுந்தான். அச்சமயத்தில், மக்கள் மாண்டதும் மணாளன் சோர்ந்ததும் பிரவிர்த்தியானவள் கேள்விப்பட்டு, அவ்விடத்துக்கு வந்து தன் மக்களாகிய மோகனாதியரும், மருமக்களாகிய தீவினை முதலோரும் போர்க்களத்தில் இறந்து கிடந்ததை நோக்கி மிகவுந் துக்கித்து ஏங்கி யழுது புலம்பத் தொடங்கினாள். எப்படியெனின், ஓ மக்களே! நான் வாழ்ந்த வாழ்வையெல்லாம் பொய்யாக்கி, பருந்து பந்தலிட்ட படுகளத்தில் நீங்கள் யாவரும் இறந்துகிடக்கின்றதைப் பார்த்தும் இன்னமும் யான் உயிரோடுகூடி வாழ்ந்திருக்கின்றேன்! என்னைப்போல்

வன்னெஞ்சுடையார் இவ்வுலகத்தில்யாரிருக்கிறார்கள்? உங்கள் பாட்டனாரை உங்கள் தந்தை சிறைப்படுத்தின அக்காலத்தில் அவரைநீங்கஎல்லோரும்பிணித்த பேராற்றலானது இன்று இந்த நிவிருத்தி மக்களாகிய விவேகன் முதலானோர்க் கெதிரில் பயன்படாதொழிந்ததோ? அக்காலத்தில் திருமால் சிவன் என்னும் இருவரையும் வென்ற நீங்கள் அவ்வரிபக்தி சிவபக்தியென்னும் இருவரைத் துணைகொண்டுவந்த விவேகனுதியர்க்கு இன்று இளைத்துத் தோல்வியடைந்தது புதுமையா யிருக்கின்றது! கத்துருவின் புதல்வருக்கு வினதை புத்திரனாகிய கருடன் சத்துருவாயிருந்தும் எல்லாரையும் மடிக்காமல் சிலரைத் தப்பவிட்டிலனோ? அவ்வகையாய் உங்களில் ஒருவரையாயினும் தப்ப விடாமல் கொன்ற விவேகன் மிகவும் புத்திசாலியாவன். கௌசலையின் புதல்வனாகிய ஸ்ரீராமபிரானைக் கைகேசியானவள் வனம்புகுவித்ததைக்கேட்டு இறவாமலிருந்த கௌசலையை வைத நான், இன்று என் மக்கள் இறந்தொழிந்ததைக் கண்டும் உயிரை விடாதிருத்தல் நன்மையாமோ? என்றிவ்வாறு பலவகையாய்ப் புலம்பித் தானும் உயிர் நீங்கினாள்.

அப்பொழுது மானதன் செய்தியை அறிந்துவரப்போன தூதர்வந்து விவேகனை வணங்கி,தாயாகிய பிரவிருத்தி இறந்ததையும் தந்தையாகிய மானதன் சோர்ந்ததையும் சொன்னார்கள். அந்தச் சொல்லைக் கேட்டவுடனே விவேகன் இரக்கமுற்று, தனக்கெதிரே யிருக்கிற கலைமகளைக் கைகுவித்து வணங்கி, தாயே! புத்திரசோகம் பொறுக்கமாட்டாமல் அயர்கின்ற எமது தந்தையாகிய மானதனை மனந்தேற்றி வரக்கடவையென்று பிரார்த்தித்தான். அதைக்கேட்ட கலைமகள், அவ்வாறே செய்கிறேனென்று விரைந்து சென்று, போர்க்களத்தில் இறந்து கிடக்கின்ற பிரவிருத்தியையும், தன்னை மறந்து அயர்ந்துகிடக்கின்ற

மானதனையும் கண்டு, அந்தமானதன்மேல் தனது அன்பென்னும் தீர்த்தத்தைத் தெளித்து இன்சொல்லாகிய மருந்தூட்டித் தேற்றுதலும், மானதன் ஒருவாறு தெளிந்தெழுந்து, தன் மனைவியாகிய பிரவிருத்தி எங்கேயிருக்கிறாளோ என்று கேட்க, கலைமகள் அந்தப் பிரவிருத்தியானவள் படுகளத்தில் இறந்து கிடக்கிறாள் என்றாள். அதைக்கேட்ட மானதன், மயிலினால் வலியிழந்த பாம்பானது கருடன் தாக்க உயிர் பதைப்பது போல மைந்தர் மடிந்த துக்கத்தின்மேல் மனைவி மடிந்த துக்கம் வந்து தாக்குதலால் மிகுதியாய் மனமயங்கிப் பின்னும் சிலவற்றைச் சொல்லிப் புலம்புவானாயினன். யான் உண்ணும் அமிர்தமும், மெய்யுறவும், என்னுயிரும், என் கண்ணும், கருத்தும், கருமமும், அக்கருமத்தால் அடையப்படுகின்ற செல்வமும், அச்செல்வத்தின் பயனும், என் எண்ணமும் ஆகிய உன்னைவிட்டுநான் எவ்வாறுபிழைத்திருப்பேன்? என்று இவ்வாறு பலவகைப்படச் சொல்லி, இனி அரைக்கணப்பொழுதில் அக்கினியில் மூழ்கி உயிரை விடக்கடவேனென்று ஒருப்பட்டமானதனை அங்கு வந்த கலைமகள் தனது அங்கையாலமைத்து, இனிய சொற்களால் அவன் பிழைக்கும்படி அறிவு மூட்டித் தெளிவிக்கத் தொடங்கினாள்.

மானதன் புலம்புறு சருக்கம் முற்றிற்று.

---

## 36. கலைமகள் தேற்றச் சருக்கம்.

மானதனே! அறிவிலார்போல் நீ மயங்குவது யாதுக்கு? நல்லோரால் சொல்லப்பட்ட நூல்களெல்லாம் பகுத்துணர்ந்தவன் நீ யல்லவோ? அப்படிப்பட்ட நீ இவ்வாறு துக்கிக்கலாமோ? இவ்வுலகமுழுதும் மின்னலை நிகர்த்து அழிந்துபோம் என்கிற உண்மைச் சொல்லையாயினும் கேட்டிலையோ? நிலம் நீர் முதலிய பஞ்சபூதங்களும்,அவற்றால் உண்டாக்கப்படுகிற எல்லா

வுயிர்களும், ஆயிரங்கண்களையுடைய இந்திரனும், மற்றத் தேவர்களும், எல்லாப் பொருள்களையும் படைத்த பிரமதேவனும் மாண்டொழிவதை அறிந்திலையோ? இப்படியே தோன்றும் பொருள்களெல்லாம் அழிவனவேயன்றி நிலைத்திருக்கமாட்டா வென்பதை அறிந்த நீ இப்படித் துக்கித்தல் தகாதகாரியமாமென்று கலைமகள் பலவாறு சொல்லித்தேற்ற, மானதன் தேறி, ஓ கலைமகளே! உன்சொல்லாகிய குளிர்ந்த நீரும் துக்கமாகிய உலையிற்காய்ந்த என் நெஞ்சாகிய இரும்பின் வெப்பத்தைத் தணிக்கமாட்டாததனால், என்னுடைய துயரத்துக்கு ஒரெல்லையுண்டோ? நான் எவ்வாறு உயிர்தரித்திருப்பேன் என்றான்; இப்படிச் சொல்லிய மானதன் வசநத்தைக் கேட்ட கலைமகள், அவனை நோக்கி, என் மனைவி, என் மக்கள், என் சுற்றம் என்கிற இவ்வாசையினால் இத் துக்கம் உனக்கு விளைந்தது. ஆதலால் நீ இவ்வாசையைவிட் டொழிப்பாயாக என்றாள். அதைக்கேட்ட மானதன் மீட்டும் கலைமகளை நோக்கி, தாயே! என் தாய்ச்சொல்லைக் கேட்டு என்தந்தையைச் சிறைப்படுத்தினேன். என் மக்களைக்கொண்டு அவனைப் பிணிப்பித்தேன். அந்த நிவிருத்தி மக்களுக்குத் துன்பத்தை யுண்டாக்கி, அவர்களால் இத்தனை பேரையும் கொல்லும்படி யமனை வருவித்தேன். ஆதலால் இனி ஒருபொழுதும் உயிர் வாழேன். எவர் சொன்னாலும் தெளிவடையமாட்டேன். அக்கினிப்பிரவேசமாகி உயிர்விடுப்பேன் என்றான். இப்படி மானதன் சொல்லக்கேட்ட கலைமகள் மானதனைநோக்கி, நல்லறிவுடையோர் தாமே தம் உயிர்க்கொலை செய்துகொள்ள நினைப்பரோ? மனைவி மக்களது அன்பின் மிகுதியால் மனமயங்கி இவ்வாறு சொல்லுகின்றனை. அம்மயக்கமொழிந்து தெளிவடைவாயாக. நீயாகிய பாற்கடலில் தோன்றின ஆலாகல விஷம்போன்ற மோகனுதியர் போகட்டும். அமிர்தம்போன்ற விவேகனுதியராகிய

மக்களும், நிவிருத்தியென்னும் மனைவியும், இன்னும் பல உறவினரும் உனக்குப் பெருஞ்செல்வமாய் அமைந்திருக்கின்றார்களே! உன் அறிவாகிய சந்திரனை மூடிக் கொண்ட துக்கமென்கிற மேகத்தைத் தெளிவென்கிற காற்றினால் அழித்து, இளையமனைவியாகிய அந்த நிவிருத்தியை அழைத்து அவளோடுகூடி வாழ்வதைப் பார்க்கிலும் உனக்கு வேறொரு உறுதியில்லை; என்று இவைபோன்றனவாகிய இன்சொற்கள் பலவுங் கூறி, தலைக்கேறின விஷத்தை இறக்கும்படி மந்திரிப்பவர்கள்போலக்கலைமகளானவள் மானதனைத்தேற்ற அவன் தெளிவடைந்து, கலைமகளை நோக்கி, அம்மா! இவ்வுலகத்தில் இளைய மனையாளிடத்துவைத்த மோக மிகுதியால் மூத்தமனையாளை மறப்பது இயற்கையென்றுசொல்லுவார்கள். அந்தச்செய்கையும்நான்செய்யாது அவ்விருவரையும் சமமாகப் பார்ப்பதையும் ஒழித்து, இளைய மனைவியாகிய நிவிருத்தியையும் அவள் மக்களையும் உறவினரையும் நீக்கி, மூத்தமனைவியின் உறவினரால் அவர்களுக் கெல்லாம் துன்பத்தையுண்டாக்கின பாவியாகிய நான் நாண மில்லாமல் எப்படி அவர்கள் முகத்தில் விழிப்பேன்? என்றான். அதைக் கேட்ட கலைமகள் மானதனை நோக்கி, உலகத்தார்க்குப்பகையும் உறவும்மாறிமாறி வருவதுண்டு. அதைப்பற்றி நீ துக்கிக்க வேண்டியதில்லை. கணவனுக்கும் மனைவிக்கும் பகையும் உறவும் உண்டோ? உன் இளைய மனைவியாகிய நிவிருத்தி நீ முன்னே செய்த குற்றங்களைப் பாராட்டமாட்டாள்; அதற்கு நீ அஞ்ச வேண்டியதில்லை யென்று சொன்னாள். இந்தச் சொல்லைக் கேட்டமானதன் இருசெவியுங் குளிர்ந்து, துக்கசாகரத்தில் மூழ்கி இறக்குஞ் சமயத்தில் ஒரு கைமிதப்பு கிடைத்தாற்போல மிகவும் மனமகிழ்ந்து கலைமகளை நோக்கி, நீ கருணை செய்ததனால் என்னுயிர் தரிக்கப்பெற்றேன் என்று சொல்லிஅவள் வார்த்தையைச் சிரமேற்கொண்டான்.

கலைமகள் தேற்றச்சருக்கம் முற்றிற்று.

---

## 37. விவேகன் முடிசூடு சருக்கம்.

அந்தச் சமயத்தில் கலைமகள் மானதனை அவ்வி டத்தில் நிறுத்தி, உன் மனைவியாகிய நிவிருத்தியையும் மக்களாகிய விவேகன் முதலானோரையும் ஒரு இமைப் பொழுதில் அழைத்து வருகிறேன் என்று சொல்லி, அன்ன வாகனத்திலேறிச் சென்று விவேகனைக்கண்ட வுடன், விவேகன் நிகழ்ந்த செய்தி யாதென்று கலை மகளை வினவ, அவளும் ஆதியந்தமாக நிகழ்ந்தசங்கதி முழுதும் சொல்லினாள். அதுகேட்ட விவேகன் மகிழ் ந்து அந்தச் செய்தியை எல்லார்க்கு மறிவித்து, இனி என் தந்தையினிடம் போவேன்; நீங்களெல்லாம் அவ் விடத்தில் வந்து சேருங்கள் என்றுசொல்லி, மனப்பரி வாகிய குதிரையின்மீதேறி விரைவாகச் சென்றான். கலைமகள் முன்னும் தான் பின்னுமாகச் சென்ற விவே கன் தன் தந்தையைக் கண்களிக்கக் கண்டு வணங்கி னான். அப்படி வணங்கின புதல்வனை மானதன் விரைந் தெடுத்து மார்போடிறுகத் தழுவிக்கொண்டு, உச்சி மோந்து தன் பக்கத்தி லிருத்திக் கொண்டு, சிறிது நேரம் நாணத்தினால் முகங்கவிழ்ந்திருந்து, பின் தெளி வடைந்து அன்போடு நோக்கி, ஐயனே! உன் சொல்லை உறுதியாகக் கொள்ளாமல் நானடைந்த துன்பங்களு க்கு ஓரளவில்லை. அத்துன்பங்களெல்லாம் இரும்பா னது பரிசவேதியால் மாற்றுயர்ந்தபொன்னாதல்போல உன் வரவால் நீங்கப்பெற்றேன். இனி உன் சொல்லை நான் எக்காலத்தும் மறவேன் என்றான். இப்படி மான தன் சொல்லக்கேட்ட விவேகனும் தந்தையைநோக்கி, யான் இதுவரையும் வனத்தில்போய்ச் செய்த தவப்ப யனால் பின்னும் வந்து உன் திருவடியை வணங்கப்பெ ற்றேன்; எனக்கு உன்னையன்றி வேறோராதரவில்லை யென்று சொல்லி நின்றபோது, பொறையென்னும் புதல்வன் பின்செல்ல, நிவிருத்தியும் தன் மணாளனாகிய

மானதனுக்கு எதிரேவந்து அவனைக் கண்களிக்கக் கண்டு வணங்கி, அவனது சிந்தையாகிய பெருங்கோயி லிலிருந்தாள். பொறையனும் தந்தையாகிய மானதனை வணங்க, அவனும் அந்தப் பொறையனை மகிழ்வோடு எடுத்து மார்பிலணைத்துக்கொண்டான். அப்பால் நிரு பகன், வைராக்கியன், சமன், தமன், சந்தோஷன், சமாதானன், சத்துவன், தவன், அட்டாங்கயோக மந்திரத்தலைவர் என்று சொல்லப்பட்ட புதல்வரெல் லாரும் வந்து மானதனை வணங்கினார்கள். அவர்கள் யாவரையும் மானதன் தனித்தனி எடுத்துத் தழுவி, இனிய வசனங்களைச் சொல்லித் தன்பக்கத்தில் இருத் திக்கொண்டான். பிறகு, தருமன், நிச்சயன், அடக் கன், சன்மானன், சுகன், பரோபகாரன், அற்புதன், அவிரோதன், நிர்விகற்பன், மோனன் முதலாயுள்ள பேரெல்லாரும் பாட்டனை வணங்கி நின்றார்கள். அ வர்களுக்கும் மற்றை மருகியர் முதலானோர்க்கும் இன் சொற்சொல்லி ஆசிகூறிக் கலைமகளை நோக்கி, உன்னால் அடியேன் உய்ந்தேன் என்று சொல்லி மனமகிழ்ந் திருந்தான். அப்படி மானதனிடத்து நிவிர்த்திவர்க் கத்தாராகிய விவேகன் முதலிய எல்லோரும் வந்து அமைந்திருக்குங்காலத்தில், அவனிடத்தில் அரிபக்தி சிவபக்தி என்னும் ஞானயோகினிகள் இருவரும் மு றையே கருடவாகனத்தின் மீதும் இடபவாகனத்தின் மீதும் ஏறி வரக்கண்டு, மானதன் முதலிய எல்லோ ரும் எழுந்து வணங்கி வாழ்த்தினார்கள். அவ்விருவ ரும் அவர்கள் வழிபாட்டுக்கு மகிழ்ந்து, தம் வாக னங்களின் நின்றிறங்கி, மானதன் சமர்ப்பித்த சிந்தை யாகிய பொற்பீடத்தில் எழுந்தருளி, அருகே நிற்கிற கலைமகளை நோக்கி, இவ்விடத்து இருக்கக்கடவை என்று அன்போடு சொல்லி அருட்கண்ணால் நோக்கி னார்கள். அப்பால் மானதன் அந்த யோகினிகளை வ ணங்கி, தாய்மாரே! உங்களை யான் முன்னே அறிந்து

கொள்ளாத குற்றத்தை ஒழித்து நிலைபெற்ற புகழை எனக்குத் தந்த மக்களால் நீங்கள் இவ்விடத்து எழுந்தருளுதற்கு என் சிறு குடிலாகிய இது என்ன தவஞ்செய்ததோ என்றான். அந்தச் சமயத்தில் அந்த யோகினிகளுடைய அருள்பெற்ற விவேகன், தாய் அருகே வரக்கண்ட கன்றுபோல, அடைந்து வணங்கித் தந்தையை நோக்கி, இவ்விருவரருளால் தீவினைகள் யாவும் நீங்கப்பெற்று, இன்பத்தை யடைந்தேன் என்று விஸ்தரித்துச் சொன்னான். அதைக்கேட்ட மானதன் விவேகனை நோக்கி, நீ என்னைப் பிரிந்துபோன பிறகு இவர்களுடைய கருணையால்; திருமணஞ்செய்துகொண்டேன் என்று நீ சொன்னமாது இங்கு வரவில்லையே? என்று வினவினான். அதைக்கேட்ட விவேகன் ஆம் அது உண்மைதான்; உபநிடதையென்னும் அந்த மாதைக்கீதையென்னும் பாங்கியோடு நான் அருந்தவஞ் செய்த ராடாபுரத்தில் வைத்துவந்தேன். உமது கிருபையினால் அவர்களையும் இவ்விடத்திற்கு வரவழைப்பேன் என்று சொல்லிச் சத்துவன் மகளாகிய சிரத்தையை நோக்கி, அந்த உபநிடதையென்னும் மாதை இவ்விடத்துக்கு அழைத்துவாவென்று சொல்ல, அவளும் அச்சொல்லைச் சிரசாவகித்துச்சென்று ராடாபுரத்தை யடைந்து உபநிடதையை நோக்கிச்சொல்வாளாயினள்.

மோகன் முதலானோரும் அவன் கிளைஞரும் ஒருங்கே மடிந்தொழியும்படி போர்செய்து, நமது தலைவனாகிய விவேகனும் அவன் படைவீரரும் வெற்றிமாலை சூடி, தந்தையாகிய மானதனை யடைந்து, ஹரிபக்தி சிவபக்தி யென்னும் யோகினியருடைய அருளால் சுகமாய் வாழ்ந்திருக்கிறார்கள். அன்றியும், உன்னைப் பெற்றவளாகிய கலைமகளும் அவ்விடத்தில் வந்திருக்கிறாள். உன் மாமன் உன்னைப் பார்க்கவேண்டுமென்னும் விருப்பங்கொண்டு உன்னை யழைத்துவரச் சொன்னா

னென்றுசொல்லுதலும், அதைக்கேட்ட உபநிடதையா னவள் அகமுகமலர்ச்சியுடையவளாய் உடல்பூரித்து, சிரத்தையை இன்சொல்லாகிய அமுதத்தால் களிக்கச் செய்து, அன்போடு தழுவிக்கொண்டு, உடற்சாயை போல க்ஷணகாலமுந் தன்னைவிட்டு நீங்காத இன்மொழிக்கீதையோடும் சிரத்தையோடும் எழுந்து தபோதநருடைய நாவாகிய சிவிகைமீதேறிவந்து மான தன் சமுகத்தை யடைந்து, முன்னே இரண்டு யோகினிகளையும், அதன் பிறகு கலைமகளையும், அதன் பிறகு மாமனாகிய மானதனையும், அதன்பிறகு நிவிர்த்தியையும் அடிவணங்கித்தன் நாயகனாகிய விவேகனையும் தன் மனத்தால் வணங்கி அருகேயிருந்தாள்.

அப்பொழுது மானதன் தன் மருகியாகிய உபநிடதையைக் கண்டு களிப்படைந்திருந்தான். அந்தச் சமயத்தில் அங்கிருந்த யோகினியரிருவரும் மானதவேந்தனை நோக்கி, இனி நீ உன்புதல்வனாகிய விவேகனுக்கு முடிசூட்டி மண்ணுலகம் விண்ணுலகம் என்னும் இரண்டுலகங்களிலும் அரசாட்சிசெய்யும்படி யேற்படுத்துவது நன்மையென்றார்கள். அது கேட்ட மானதன் மனமகிழ்ந்து அவ்விருவரையும் வணங்கிஅவர்களைநோக்கி, முற்காலத்தில் பிரகலாதனுக்கும் விபீஷணனுக்கும் துருவனுக்கும் முடிசூட்டுவித்ததும், மார்க்கண்டனுக்கும் அசுவத்தாமனுக்கும் தண்டி முதலானோர்க்கும் நித்தியத்துவம் அடையச்செய்ததும் நீங்களல்லவா? அவர்க்கருள் செய்ததுபோல இப்போது உன் புதல்வனாகிய விவேகனுக்கு முடி சூட்டும்படி நியமித்ததற்குக் காரணம் என் தவப்பயனன்றோ என்று பணிமொழிகள் கூறி, பிறகு தன் இதய மண்டபத்தைப் புதிய வெண்சுதையால் புதுக்கி, புண்ணிய கருமங்களாகிய விதானத்தை மேலேபரப்பி, பரிசுத்த விரதமென்னும் மலர்மாலைகளைத் தொங்கக் கட்டி, கல்வியென்னும் செம்பொன் மணிகளாற் சமைக்கப்பட்ட சிங்காசனத்

தை அந்த மண்டபத்தின் நடுவேயமைத்து, தெளிவெ ன்னும் சுடர்மணி விளக்கேற்றி, இன்னுஞ்செய்யவேண் டியஅலங்காரங்க ளெல்லாவற்றையுஞ் செய்யுங்களென் று தன்னருகே யிருக்கின்றவர்களுக்குக்கட்டளையிட்டு, அந்த மண்டபத்தின் ஒரு பக்கத்தில் ஹரிசிவ பக்திக ளாகிய யோகினியர் நாமகளோடு வீற்றிருக்கவும், நிவிர் த்தியானவள் தன் புத்திரவர்க்கத்தோடு ஒரு பக்கத் தில் வீற்றிருக்கவும், கருணையும்முதிதையும் உபேக்ஷை யும் நீதியும் மைத்திரியும் தத்தம் கணவரோடும் ஒரு பக்கத்தில் கண்களிக்க நோக்கியிருக்கவும், மக்களும் மகளிரும் மற்றுள்ளவரும் கூடி அருகே யிருக்க, சுமதி யும் உபநிடதையும் வேந்தனும் பெரியோர்களுடைய அருட்கடலில் மூழ்கித் தத்தமக்குரிய ஆடையாபரணு திகளணிந்து வந்து சிங்காதனத்தில் வீற்றிருந்தார் கள்.

அப்போது சதுமறைப் பேரிகை முதலியவை முழங்கவும், விதிமுறையாய்ச் செய்யப்பட்ட வெற்றி வெண்குடையை நிரூபகன் ஏந்தவும், பொறையனும் விராகனும் இரண்டு பக்கத்திலுங் கவரிவீசவும், மான தஞனவன் மாதவருடைய ஆசியாகிய முடியை விவே கனுக்குச் சூட்டினன். அப்பொழுது ஹரி நாமசங்கீர்த் தநமும் சிவநாம சங்கீர்த்தனமும் மங்கள கீதங்களும் உலகமெங்கும் வியாபித்தன. தேவர் மலர்மாரிசொரிந் தார்கள். முனிவர் எழுந்து ஆனந்தக் கூத்தாடினர்கள். கலைமகளும் யோகினியரிருவரும் விவேகனுக்கு இவ் வித ஆடம்பரங்களோடு முடிசூட்டித் தமது பொருளா கிய அருளை அவனகத்தில் வைத்து அவனிடத்தில் இனிது வாழ்ந்திருந்தார்கள். அந்தணர் அறுதொழில் முதலியசற்கருமங்களைப் பயன் குறியாமற் செய்வாரா யினர். முன்னே மோகன் முதலானோரால் உலகத்தை விட்டோடிப்போன அஷ்டதிக்குப் பாலகர் முதலான வர் விவேகவேந்தன் அரசுரிமை பூண்டிருத்தலால் இங்

தப் பூமண்டலத்தை யடைந்து இனிது வாழ்வோராயி னர். எல்லா வளங்களும் தழைத்தோங்கும்படி மேகங் களும் மழைபொழிந்தன. கறவைப்பசுக்கள்பெருகின. புலியும் மானும் ஒரு துறையில் நீருண்டன. பூமிதேவிக் கு அதிபாரம் நீங்கிச் சரீரந்தடித்ததனுல் ஆதி சேஷ னுக்குத் தலைச்சுமை நீங்கிப் பூமியையொருமலர்போ லத்தாங்கலாயினன். அந்தக் காரணத்தாலன்றே இன் றும் பூமிக்குப்பூவென்னும் பெயர் நிலைபெற்றிருக்கின் றது. பொறையன், வைராக்கியன், சத்தியன், சமன், தமன், நிச்சயன், அடக்கன் முதலிய யாவரும் உல கெங்கும் பரந்து உலாவலாயினர். விவேக வேந்தன் மோகனுதியாகிய வன்பகைதொலைத்து முடி சூடிய பிறகு இவ்வுலக முழுதும் ராகுகேதுக்களால் விழுங்கி யுமிழப்பட்ட சந்திரன்போலப் பிரகாசித்தது. விவேக வேந்தன், தன் தாயாகிய நிவிர்த்தியோடு கூடித் தந்தை யாகிய மானதன் களித்திருக்க, தானும் தன் மனைவிய ராகிய சுமதி, உபநிடதை யென்பவர்மீது அன்புள்ளவ னுய் நிரூபகன் முதலானோர் தன்னைச் சூழச்செங்கோல் செலுத்திவாழ்ந்திருந்தான்.

விவேகன் முடிசூடு சருக்கம் முற்றிற்று.

---

## 38. மாயைச் சருக்கம்.

இவ்வாறு விவேகன் முடிசூடி அரசாட்சி நடத்தி வருங்காலத்தில், ஒரு தூதனவன் அஞ்ஞன்வாழ்ந் திருக்கும் ஊரையடைந்து அஞ்ஞனை வணங்கி, ஐய னே, நம்மவர் யாவரும் இறந்தார்களென்று சொன் னுன். அந்தச் சொல்லைக்கேட்ட அஞ்ஞன் இடியோ சையைக்கேட்ட நாகம்போல மனங்கலங்கித் துன்பக் கடலிலழுந்தி, மறுபடியும் ஒருவாறு மனந்தெளிந்து, அந்தத்தூதனை நோக்கி, போர்நடந்த விதம் இன்ன

தென்றும் இறந்தவர் இன்னாரின்னாரென்றும் சொல்ல வேண்டுமென்று கேட்க, அந்தத் தூதன், மோகன் காசியைச்சேர்ந்தது முதல் அவனும் அவன் உறவின ரும் இறந்தது வரையும் ஆதியந்தமாகச் சொன்னான். அந்தச்செய்தியை முழுதும் கேட்ட அஞ்ஞன் மிகவும் துக்கித்துப் பதைத்து நிலத்தில் விழுந்து தானும் இறந் தவன்போலாகி, மீட்டுந்தெளிந்து, என் பாட்டனாகிய மானதன் எவ்விடத்திலிருக்கிறானென்று கேட்க, தூ தன், ஐயனே! உன்பாட்டன் நிவிர்த்தியோடும் தன் மக் களாகிய விவேகனாதியரோடும்கூடி வாழ்ந்திருக்கிறான். பிரவிர்த்தியும்தன்மக்களாகிய மோகனாதியரிறந்த துன் பம் பொறுக்காமல் மடிந்தாள் என்றான். அந்தச் சொல் லைக்கேட்ட அஞ்ஞன், ஆட்டுவிப்பாரில்லாதசூத்திரப்பா வைபோலவும், பகைவன் கப்பல் வந்து தாக்கத் திகை தப்பிக்கலங்கும் கப்பல்போலவும் மனமயர்ந்து, மறு படியுந் தெளிந்து, என் திண்டோள்வலியும் வஞ்ச மும் என்னிடத்திலிருக்கும்போது நானிப்படி வருந்த வேண்டியதில்லை. மோகனாதியரை இப்பொழுதே யெ ழுப்புவேன் என்று துணிந்து, கடலைக் கடப்பதற்கு ஒரு புணையை யடைந்தாற்போல, மாயையினிடத்திற் குப்போய் அவள் பாதத்தை வணங்க, அவள் இவனை யெடுத்து மார்போடணைத்து, உன் மனத்துயரத்துக் குக் காரணமென்னவென்று கேட்டாள். அது கேட்ட அஞ்ஞன், முற்காலத்தில் உன் பிள்ளையாகிய மானதன் உன்சொற்படியே தன் தந்தையாகிய பிரமத்தை நவத் துவாரபுரந்தோறும் சிறையிட்டு, விவேகன் சொல்லைக் கேளாமல் என் தந்தையாகிய மோகனுக்கு முடிசூட் டின செய்தியெல்லாம் உனக்குத் தெரியாததல்லவே. அப்படியிருக்க, காட்டுக்குப்போன விவேகன் யோகி னிகளுடைய அருளால் உபநிடதையை மணம்புரிந்து, பல படைஞரோடு கூடிவந்து, அரசாட்சிசெய்கிற என் தந்தையோடு போர்செய்தபோது, விவேகனாதியரால்

என் தந்தை முதலானவர் யாவரும் மடிந்தார்கள். நானொருவன்மாத்திரம் உயிர் பிழைத்தேன். பிறகு, மக்களை யிழந்த துன்பத்தைப் பொறுக்கமாட்டாமல் பிரவிர்த்தியும் இறந்தாள். உன் மகனாகிய மானதனும் விவேகனுதியராகிய நன்மக்களிடத்திற் சேர்ந்து விவேகனுக்கு முடிசூட்டிக் களித்திருக்கிறான். நீயேயன்றி இனி யெனக்கு வேறுகதி யில்லையென்று சோதிடநூல் வல்லோர் சொன்னதும் தப்பாமல் பலித்தது. அவர்களே உபநிடதையொரு மகனைப்பெறுவாள், அவனால் நானிறப்பது சத்தியமென்று சொல்லியிருக்கிறார்களென்றும், அச்சொல் தப்பாதென்றும், விவேகனுதியர் படைஞர் உலகமுழுதும் நிறைந்து அவித்தியாபுரத்தையும் நீறுக்கினார்கள், இனி உன் மணாளனையும் சிறை விடுவிப்பார்க ளென்பதற்குச் சந்தேகமில்லை யென்றும் சொன்னான். அது கேட்ட மாயையானவள் நெஞ்சு துணுக்கிட்டு, பனியைக் கண்டு கருகிப்போன தாமரை மலர்போல முகங்கருகிப் பதைத்து, அஞ்ஞானமார்போடணைத்து, அப்பா, நீ மனங்கலங்க வேண்டாம். விவேகன் உபநிடதையோடு கூடி மகனைப் பெறுதிருக்கும்படி செய்வேன் என்று சொல்லி, நாமகள் துணையும், வேதச்சிறுவராகிய மீமாஞ்சன், தர்க்கன், சாங்கியன், யோகன் என்னும் நால்வரும், ஹரிபக்தி சிவபக்திகளாகிய மாதரீன்ற சிறுவராகிய வைஷ்ணவன் சைவன் என்னுமிருவரும் தன்னருகே வரும்படி மனத்தில் நினைத்தவுடனே அவர்களும் வந்து சேர்ந்தார்கள். மாயையானவள் அவர்களை நோக்கி, முன்னாளில் நான்செய்த முயற்சியை நீங்கள் அறியீர்போலும்! என் மகனாகிய மானதனைக்கொண்டு என் மணாளனை நவத்துவாரபுரந்தோறும் சிறை செய்வித்தது யாமெல்லாம் பிழைக்கத்தானே. மூத்த மனைவி மாண்டதனால் என் மகனாகிய மானதன் இளைய மனைவியாகிய நிவிர்த்தியின் போகத்தை அநுபவிப்பா

ணயினன். அவன் மகனாகிய விவேகனும் தன் மூத்த மனைவியிருக்க உபநிடதை மாதை மணம் புரிந்தது நன்றோ? அப்படி அவன் மணம்புரிய முயன்றபோது, இது தகாதகாரியமென்று நீங்கள் தடுக்கக்கூடாதா? தடுத்தீரில்லை. "வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்-வைத்தூறுபோலக்கெடும்" என்ற நியாயத்தையும் எண்ணாமற் போனீர்கள். இனியாயினும் நீங்கள் பிழைக்கும் வகையைக் கேளுங்கள், சொல்லுகிறேன். விவேகனைச் சேர்ந்து, அவன் உபநிடதையைக் கூடிப் பிரபோதன் என்னும் மகனைப் பெறுதிருக்கும்படி உங்களாலியன்ற புத்தியுக்திகளால் விலக்குவீராக வென்றாள். அதுகேட்ட அந்த மீமாஞ்சன் முதலானோர் மாயையைநோக்கி, தாயே! நீ சொன்னது உண்மையே; நாங்கள் உன்சொல்லைத் தடுக்கிறவர்களல்ல; ஆனால் இந்தச்செய்தி முழுதும் ஆதிகாலத்தில் நாங்களறிந்தோமில்லை. விவேகன் உபநிடதையினிடத்தில் வைத்த விருப்பத்தை மாற்ற இனியெவராலு முடியாது. ஆயினும் நீ சொன்னபடியே செய்கிறோமென்று சொல்லி, விவேகனிருக்குமிடத்தை யடைந்து வாயிற் காப்பாளரைக்கொண்டு தமது வரவை விவேகனுக் கறிவிக்க, அவனும் உள்ளேவரும்படி கட்டளையிட்டான். பிறகு இவ்வறுவரும், சுமதிபழகைக் கண்டு களித்து, உபநிடதையின் சொல்லாகிய தேனைப்பருகி, வேதாந்தி, நிரூபகன், பொறையன், அடக்கன், மெய்யன், சமன், தமன்முதலானோர் சூழவீற்றிருந்த விவேக வேந்தனைக் கண்டு வணங்கி, ஐயனே, எல்லாமறிந்திருக்கிற வுனக்கு யாம் சொல்லவேண்டுவதொன்றில்லையாயினும், நாங்கள் சொல்லுஞ் சொல்லைக்கேட்டு அப்படிச்செய்வதேஅரசியலென்றார்கள்.விவேகன்அதுயாதுசொல்லுங்களென்றான். மீமாஞ்சன் முதலானோர் சொல்லுவாராயினர்: எப்படியென்றால், மூங்கிலோடு மூங்கில் உரிஞ்சுதலாலுண்டாகிற நெருப்பு கிளைமுழு

தும் சுட்டெரிப்பதுபோல, உபநிடதையும் நீயும் கூடினால் ஒரு பிரபோதன் என்னும் புதல்வன் பிறப்பான்; பிறந்தால் அவன் உன்னைமட்டோ, உன் குலமுழுதும் நாசஞ்செய்வான். ஆதலால் அவ்வுபநிடதையினிடத்துள்ள உன் விருப்பத்தைநீக்கி, சுமதியோடு கூடிவாழ்தலே நீதிநெறியாகுமென்றார்கள். அந்தச் சமயத்தில் மீமாஞ்சரில் பட்டாசாரிய னென்பவனொருவன் விவேகனை நோக்கி, இறைவனன்றி வேதம் சொன்னபடியே வேள்வி செய்வாராயின், செய்தவர் சுவர்க்கத்தையடைந்து, அங்குள்ள போகங்களை யநுபவித்துக் களிப்போடுவாழ்தலே வாழ்வென்று சைமினிநூலிற் சொல்லப்பட்டிருக்கின்றது; என்றிவ்வாறு சிலவற்றைச் சொல்லலாயினன். எப்படியென்றால்:—

மாயைச்சருக்கம் முற்றிற்று.

---

## 39. மீமாஞ்சச் சருக்கம்.

அதிட்டத்தாருக்கு உபயகாரணத்தால் உயர்ந்த வினையுண்டாகி, ஆகாயமுதலிய பிரபஞ்சம்வித்தும்முளையும்போலக் கிடைத்து, நீரொழுக்கம்போல அநாதியாய்த்தோன்றி நிலைபெற்று அழியாநிற்கும். இவ்வகைக்கு ஒரு இறைவனில்லை. விண்ணுலகத்துத்தேவர், மற்றைப்பெயர், பயன் என்பவைகளைக் கொடாமல் தந்திரமாகிய வேதஞ் சொல்லுகின்ற தனிப்பெயரைத் தருதலால் இந்திரனுக்கு என்றுசொல்லப்படுவதுமுதல் ஆகமங்களிலெடுத்துச் சொல்லப்படுகிற மந்திரச் சொற்களல்லால்வானவர்வேறில்லை. காண்டல், நினைத்தல், ஒப்பு, கட்டுரை, பொருள், அபாவம் என்னுமிவையாறே பிரமாணங்களாவன. வேதங்கள் நித்தியம். காற்றில்லாமல் மூங்கிலோசை வெளிப்படாததுபோல் நாவோட்டமுதலிய இல்லையாயின் வேதம் புலப்படாது.

காம முதலியவைகள் அறிவை நீக்கும். அவை அறிவைப் பெருக்கும் என்றால் வேதம் பொய்யாகும். எந்தவேதம் அறிவை யுண்டாக்குமோ அந்தவேத மில்லையாயின் அறிவானது ஊமையும் குழந்தையும் போலாகும். ஒருவராலுஞ் சொல்லவொண்ணாத மறுமைப்பயனை விளக்கமாகச்சொல்லுதலாலே வேதத்தை முனிவர் சித்தர் முதலானோர் பரம்பரையாய் ஓதிவருகிறார்கள். தாதுக்கள் பிரத்தியயங்கள் பிராதிபதிகம் ஆகிய இவற்றைப்பற்றி விரிவாகச் சொல்லுதலாலந்த வேதத்தை யோதினால் சொர்க்கத்தை யடைவது உண்மையாகும். தெய்விகமாகிய வேதம் ஆறங்கங்களையும் உபவேதம்மூன்றையுந்தன்னுள்ளேயடக்கி,தோற்றநாசங்களில்லாமல் என்றும் ஓரியல்பா யிருப்பதாகும். அறங்கங்கள் எவையெனின்:—சிக்ஷை,கற்பம்,வியாகரணம், நிருத்தம், சோதிடம், சந்தம் என்பவைகளே. உபவேதமூன்றென்பனஎவையெனின்:—ஆயுர்வேதம், தநுர்வேதம், காந்தர்வவேதம்என்பவைகளே. இருக்குவேதம் மந்திரங்களெல்லாவற்றையுஞ் சொல்லும். தைத்திரிய வேதம் யாகங்களைச் சொல்லும். சாமவேதம் இவ்விரண்டையுஞ் சொல்லும். அதர்வணவேதம் ராஜநீதத்தைப்பற்றிச் சொல்லும். உயிரானது நித்தியமாய் அறிவுடையதாய் அநேகமாய் தெருள்மருள் இரண்டையும் பொருந்துவதாய் அருவமாய் வினைக்கேற்ற சரீரத்தை யடைந்து இந்திரியங்களின் வாயிலாக எல்லாவற்றையும் அறிவதாகும். உலகத்தில் எருக்கள் கெட்டு வயலிற் சேர்ந்து பயிர்களை விளைவித்தல்போல தூல கன்மங்கள்கெட்டுச் சூக்கும கன்மங்கள் ஆன்மாவைப் பொருந்தி நின்று இன்ப துன்பங்களைக் கொடுக்கும். வேதங்களெல்லாம் பத்திவைராக்கியம் ஞானம் பிரமத்தினுண்மை என்பவற்றை விஸ்தரித்துச் சொல்லினும் சற்கருமங்களைச் செய்வதற் கேதுவாகவே சொல்லாநின்றன. கன்மம் நித்தியம்,நைமித்தி

கம், காமியம், நிஷித்தம், பிராயச்சித்தம் என ஐந்துவகை யாகும். இந்தக் கன்மங்களெல்லாம் சீவகோடிகளுக்குத் துன்பத்தை யொழித்து இன்பமாகிய பயனைத் தரும். இவற்றுள் நித்தியகன்மங்கள்எவையெனின், நீராடல், சந்தியாவந்தநம், ஜபம், ஹோமம், தேவதார்ச்சனை, வைசுவதேவம், விருந்து, ஆதாநம், இஷ்டி, அக்நிஷ்டோமம், பசுபந்தம், த்ரேதாக்நி முதலியவைகளாம். அயநங்கள், விஷுவக்கள், சங்கிராந்திகள், உபராகங்கள், புஷ்கலங்கள், பர்வங்கள், அர்த்தோதய மஹோதயங்கள் ஆகிய இந்தத் தினங்களில் புண்ணிய தீர்த்தஸ்நாநம், தாநம் முதலியவும் செய்தல் நைமித்திகங்களாம். அயமேதம், ராஜ சூயம், பௌண்டரிகம் முதலிய வேள்விகளும் சோமவார விரதம் முதலியவும் காமியங்களெனப்படும். களஞ்சமுண்டல், பிறனில் வேட்கைமுதலியவை நிஷித்தங்கள் எனப்படும். அநசநம், பராகம், சாந்திராயநம், க்ருச்சிரம், நீரிற்கிடத்தல், காற்றைப்புசித்தல், தீயிடைநிற்றல், கோயில்விளக்கல், தீர்த்தயாத்திரை இவைபோல்வனயாவும் பிராயச்சித்தமெனப்படும். சீவனிருக்குமளவும் நித்திய நைமித்திகங்களைச் செய்தால் பிராரத்தங்கள் தொலையும். காமியத்தால் சுவர்க்கமுண்டாகும். நிஷித்தத்தைவிட்டால் ஆகாமியத் துன்பம் நீங்கும். பிராயச்சித்தத்தால்சஞ்சிதமொழியும். இந்தச் சஞ்சிதம் முதலாகிய பந்தங்களை பஞ்ச கர்மங்களாலும் நெருப்பிற்பட்ட பஞ்சுபோலழியப் பண்ணிச் சுவர்க்கலோகத்தை யடைந்து அவ்விடத்தில் வாழ்ந்திருத்தலே முத்தியெனப்படும். இதுவே வேதமுடிவாம். கர்மத்தால் உலகமுண்டாகும். கடவுளென் றொருவனில்லை. வேதவாக்கியம் ஒருவனாற் சொல்லப்பட்டதல்ல. சுவர்க்கமே முத்தி: என்றிவ்வாறு சொன்ன மீமாஞ்சனுக்கு ஒருமைப்பாடுள்ளவனாகிய வேதாந்தியானவன் தானுஞ் சிலவற்றைச் சொல்லத் தொடங்கினன். எப்படியெனின், காரணங்கள் சடமாதலால் அவை ஒரு கருத்

தனில்லாமல் தோன்றமாட்டா. அதிட்டம் உயிருக்கு ளுட்டுமென்றால் அதற்கும் அறிவில்லாமையாலும் காரணங்களோடு சேர்ப்பதென்கிற அதிட்டமும் பொருந்துதலில்லாமையாலும் இந்தவுலகமானது ஒரு இறைவனால் நிலைபெற்றிருக்கின்றது. நசித்தவினை பின்னும் நின்று பயன் தருதல் எருநசித்துப் பயிரை விளைத்தலுக்கு நிகராகும் என்றால், வேள்வியின் பயன் அந்த வேள்வியைச் செய்த தேசத்திற்றானே உதவவேண்டும். அன்றியும் கருமம் அசேதநமாகையால், அதற்குரிய கூலிகொடுக்க ஒரு இறைவன் வேண்டும். வேதம் சுயம்பு என்றாய், சுயம்புவென்று வேதம் சொல்லுமானால், வேறு பிரமாண முண்டாயினும், சொல்லப்பட்ட பாரதமும் ஒரு சுயம்பாதல் வேண்டுமென்று சொன்னாயில்லை; சொல்லாகையால் ஒருவனால் சொல்லப்படவேண்டும். பேதாய், காரியம் காரணமில்லாமல் தானே யுண்டாகுமோ? வேதம் இறைவனது திருவாக்கிற் பிறந்ததேயாகும். அந்த இறைவனும் ஒரு புருடனாதலால், ராகமுதலிய குணங்கள் அவனையும் வந்து சூழுமாதலால் அவன் சொல்லிய வேதமும் உண்மையல்லவென்பையாயின், அவ்விறைவன் காமமுதலாகிய முக்குற்றங்களும் நீங்கினவனும் முழுதுணர்ந்தவனுமாகையால் அவன் தன் கருணையால் தந்த வேதம் எக்காலத்திலும் ஒரு குற்றமில்லாதிருப்பது, இது சத்தியம், பரமகாரணத்வம் முதலியவற்றை யுடைய இறைவர் ஒருவருளர் என்பதற்கு வேதாகமாதிகளும் அநுமாநமும் பிரமாணங்களெனப் பெரியோர் கொள்வார்கள். வேதமானது ஒரு சுயம்புவால் சொல்லப்பட்டு வந்ததாதலால் அவ்வேதமும் சுயம்புவென்று சொல்லப்படும். அப்படிச்சொல்லுதல் எதுபோலுமெனின், அரசர் வாய்மொழி யெழுதினவோலையை இவ்வுலகத்தார் திருமுகமென்று சொல்லி யேற்றுக்கொள்ளுதலை நிகர்க்கும். அப்படிப்பட்ட காரணமும் அவயவத்தைப் பொ

ருந்தினுல் கடப்படாதிகள்போல அழியும்; அவயவத்தைப் பொருந்தர்தாயின் ஒன்ருேடொன்று பொருந்த மாட்டா; இவ்வகையால் இவ்வுலகுதோன்றிற்றில்லே. வித்தும் முளேயும்மழையினுற்செழித்துவளர்ந்து வெயிலினுலழிவதுபோல உலகம் தோன்றி நின்று அழியும். உயிர் எங்கும் நிற்குமென்ருல், ஊழ்வலியடைந்து நின்றழிதலில்லேயாம். கடத்தில் பூமணம்போல உடலில் தங்குமென்பாயாயின், உடலழிந்தபோது எங்கேயிருக்கும்? யோகியானவன் பரகாயப்பிரவேசம் செய்துவருவதையும்வேதமரியாதையையும் அறிந்தாயில்லே. அந்தச் சீவன் சுவர்க்க போகத்தை யநுபவிப்பதே முத்தியென்ருல் அதுவும் கடாதிகள்போலஅழிவதாகும். வினேயினுல் வருவதைப் பெறலால் இந்தத் தன்மையால் முத்தியானது நித்திய நிரதிசயமானதென்று சொன்ன வேதத்தோடு விரோதிப்பதையும் அறிந்தாயில்லே. இன்பதுன்பங்கள் வேறு வேறுடப்புகளிலிருத்தலால் உயிர் அநேகமென்று சொன்னுலும் ஒன்றென்றுசொன்னுலும் அந்தரிந்திரிய வுபாதியினுல் பின்பு அனேகாவிதமென்று விளங்குதலன்றி, தன் தன்மையால் முன்னே சொல்லப்பட்ட வுயிர் ஏகமன்றி வேறன்றென்று வேதமுடிவுஞ் சொல்லாநிற்கும். சற்கருமமானதுசித்தசுத்தியைத்தரும், முத்தியைத் தராது. ஆதலால் வேதமுடிவை யறிந்து, ஞானநெறியை யடைந்து, மோக்ஷத்தைப் பெற்று வாழக்கடவாயென்று வேதாந்தி சொல்லக்கேட்டு, மீமாஞ்சன் பாம்பின் வாயிலிருந்துவெளிப்பட்ட வெண்மையாகிய சந்திரன்போல விளங்கினுன். ஈசன் ஒருவனுண்டு, அவனுல் உலகமுளது, கன்மமும் அவனேயன்றித் தானே பயன் தருதலில்லே, முத்தியும் அதனுலுண்டாகாது, என்று இவையாவுஞ்சொன்ன வேதாந்திக்கெதிரே சமுச்சயன் என்பவனெருவன் வந்து சிலவற்றைப் பிதற்றுவானுயினன்.

மீமாஞ்சச் சருக்கம் முற்றிற்று.

---

## 40. சமுச்சயன் சருக்கம்.

பறவைகள் தமது நீண்ட சிறகுகளைக்கொண்டு ஆகாயத்திற் பறப்பதுபோலப் பயன் கருதாமல் ஈசுவரார்ப்பணமாய்ச் செய்கிற கருமமும், அகண்ட சச்சிதாநந்தப் பிரமஞானத் துறுதியுமாகிய இரண்டைக் கொண்டு உயிர்கள் இன்பவீட்டை யடையுமென்றான். இப்படிச் சொல்லக்கேட்ட உபநிடதைக்குத் தமையனாகிய வேதாந்தியானவன் சமுச்சயனை நோக்கி, சற்கருமத்தால் முத்தியுண்டாமென்றால், கருமத்தாலுண்டான எல்லாப்பொருள்களும் மாடமாளிகை மேடையாதிகள் அழிவதுபோல ஒரு கணப்பொழுதிலழியும். அன்றியும் முத்தியடைந்தவன் மறுபடியும் பிறவிக்கடலிலழுந்தவேண்டும். பொருந்தின கேவலன் மீண்டால் பிறவிக்கும் வீட்டுக்கும் பேதமுண்டோ? முத்தருக்கு எக்காலத்திலும் பிறவியில்லையென்றும், முத்தி நித்தியமென்றும் சொன்ன மேலோர் திருவாக்குக்கும் அது விரோதமாகும். மெய்யுணர்வாற் பெறப்படுகிற வீடும் கருமத்தாலுண்டாகிற பொருள்கள்போல அழியுமென்றால், சூரியனை மறைத்த மேகத்தைச் சண்டமாருதம் விலக்குதல்போலப் பொய்யுணர்வை மெய்யுணர்வு விலக்குதலேயன்றி நித்தசுத்த சொரூபமான சச்சிதாநந்த வொளியை யுண்டாக்குந் திறத்ததன்று. இருளும் ஒளியும்போலக் கருமமும் ஞானமும் பொருந்துதலும் இசையாது. அதுவுமன்றி ஞானத்தாலன்றி மற்றொன்றால்முத்தியடைய வொண்ணாதென்று சொன்ன வேதவாக்கியத்துக்கும் விரோதமாகும். கருமமானது சித்தசுத்தியை யுண்டாக்கி முத்தியையுங் கொடுக்குமென்றால் சித்தசுத்தி யல்லது வேறொன்றும் முத்தியைத் தராது. கருமத்தாற் சித்தசுத்தியுண்டாகி, அந்தச் சித்தசுத்திவாயிலாக ஞானமுதித்து, அவனால் முத்தியடையவேண்டும் என்று சொன்ன வே

தாந்திக்கெதிரே மாலைக்காலத்து நக்ஷத்திரங்கள்போ லச் சமுச்சயன் அற்பவுணர்ச்சி யுடையவனாய் நிற்கும் போது, சாங்கியன்வந்து வேதாந்தியைநோக்கிச் சொல் லத் தொடங்கினான்.

சமுச்சயன் சருக்கம் முற்றிற்று.

---

## 41. சாங்கியமதச் சருக்கம்.

கடல்சூழ்ந்த இவ்வுலகமுதலாகிய எல்லா வுலகங் களுக்கும் உபாதாநகாரணமாகி நின்ற பகுதி யிது, புரு டன் இவன் என்று பகுத்துணர்ந்து, தான்வேறாகி நிற் பதே முத்தியென்று கபிலர் சொல்வார்கள். சொல்லப் பட்ட பகுதி, புருடன் என்னு மிரண்டனுள்ளே பகுதி யில் முக்குணங்களுந் தோன்றும். அவற்றால் இவ்வுல கந்தோன்றும்; இவ்வகையால் காரணமில்லாமல் காரி யந்தோன்றாது; அந்தப்பகுதி சடரூபத்தையும் சலரூ பத்தையு முடையதாம். அந்தப் புருடன் சேதந ரூபத் தையும், அசலரூபத்தையு முடையனவன். அவனுக் கேற்ற போகமோக்ஷங்களைத் தருதற்பொருட்டுப் ப குதியானது தானே சுதந்தரமாய் நின்று இவ்வுலகத் தைத் தோற்றுவிக்கும். இத்தன்மையாகிய பகுதியின் வகையைச் சொல்லுமிடத்தில், மூலமென்றும், புரி யட்டகமென்றும், விகுதியென்றும்மூன்றுவகையாம். அதனைப்பரமென்றும், சூக்குமமென்றும், தூலமென் றும் சொல்வார்கள். அவற்றுள், சித்த மூலமென் னும் சத்தமுதலாகிய ஐந்தும் மனம் புத்தி அகங்காரங் களும் ஆகிய இவ்வெட்டும் புரியட்டகமென்றும், தேகாதிகளுக்கேற்ற பிரபஞ்சக் கூறே விகுதியென்றும் அறிஞர் சொல்வார்கள். நித்தியமாய்த்தான் ஒன்றி னின்றும் தோன்றாமையால் எல்லாவற்றுக்கும் வித் தாகிய அந்தப்பகுதி விகுதியாகாதெனவும், புத்தி ஆங்

காரம் பஞ்ச தன்மாத்திரைகள் ஆகிய இந்த ஏழும் பகுதி விகுதியெனவும், அந்தக்கரணமிரண்டும் தன்மாத்திரைகளைந்தும் பகுதியிற்றோன்றினமையால் விகுதியெனவும் சொல்லுவார்கள். அகங்காரத்தில் மனத்தினேடு இந்திரியங்கள் பத்தும், பஞ்ச தன்மாத்திரைகளில் பஞ்சபூதங்களும் தோன்றுதலால் அவைகள் விகுதியே யாவதன்றிப் பகுதி பகுதியுடன் விகுதியாகா. புருடன் ஒன்றில் தோன்றுமையாலும், அவனிடத்தில் ஒன்றும் தோன்றுமையாலும், விகுதி பகுதிகளை நீங்கிநின்று அசங்கவுதாசீநனென்றும், அநேகனென்றும் சொல்லப்படுவான். அன்றியும் அவன் நித்தியனுவன்; அவனை மதித்தற்கு வேறுகருத்தாவில்லை. பகுதியும் புருடனும் அநாதியாகும். அந்தப்பகுதி காரணகாரியகருத்தாத் தன்மைக்கேதுவாகும். இந்தப் பகுதி புருடர்களியல்பு இப்படி இருக்கையால், பகுதியிடமாய் நின்று அதனுள் பயிலுமொரு முக்குணங்களையும் புருடன் அநுபவிப்பான். அந்தக் குணத்திற் பற்றுய் நிற்பதே உயர்ச்சி தாழ்ச்சிகளாய்த் தோன்றும் யோனிதோறும் பிறத்தற்குக் காரணமாவதை விட்டால் கொடிய பிறவியில்லையாகும். பகுதி யிதுவென்றும், புருடன் இத்தன்மையனென்றும், வெவ்வேருய்ப் பகுத்துணர்ந்து, அந்தப்புருடன் பகுதிக்கு வேருனவனுயிருத்தலே முத்தியாகும். இதுவே நிச்சயம்; இதைப் பார்க்கிலும் வேறொரு நிச்சயமுண்டென்று சொல்ல வல்லவர் யாவர்? பகுதியும் முக்குணங்களும் ஒத்தே இன்ப துன்பங்களையும் முத்தியையும்புருடன் அடைவான். அவன் சுயமாய் உலகத்தைத் தோற்றுவிப்பனென்றும், அவன் அநேகனென்றும், அவனுக்கு ஈசனில்லையென்றும் இப்படிப் பலவற்றையும் சொன்ன சாங்கியனை நோக்கி வேதாந்தியானவன் சொல்லத்தொடங்கினுன். பகுதியானது உலகை ஒரு கர்த்தாவின் ஏவலால் படைத்ததோ? அன்றிச் சுய

மாய்த்தானே படைத்ததோ? ஏவலாற் படைத்ததென்றால் நீயும் எமது வழிவந்தவனாய். சுயமாய்த்தானே படைக்குமாயினும், எல்லாவற்றையும் படைத்தல் இசையாது. பகுதியியல்பாகிய இன்பதுன்பமோகங்கள் அகத்தன்றிப் புறத்தில்லாமையால் கடபடாதிகள் ஒருவனாற் பிறவாது தாமே யுண்டாதல்வேண்டும். அதுவன்றிப் புருஷார்த்தத்தைத் தருதலால் ஒருவனது தருதற்றொழிலும் உளதாகின்றது. இதற்குச் சுருதியின் பலமும் உண்டு. சொல்லப்பட்ட பகுதி அசேதனமாயிருத்தலால் பிரபஞ்சத்தை வருவிக்கவும்மாட்டாது. வருவிக்குமென்றால் குயவனின்றி மண்தானே குடத்தையுண்டாக்கும். ஊர்தோறும் தேர்கள் இழுப்பாரில்லாமல் தாமே ஓடவேண்டும். முடிவற்ற பகுதி அசேதனமாயிருந்தும் ஆற்றில் நன்னீர் பெருகுவதும், மடியில் பால் ஒழுகுவதும்போல உலகத்தில் தோற்றுவிக்குமென்னில், நீரானது ஒருவன் செய்த பள்ளத்தின் வழியே பெருகியோடா நிற்கும். பசுவின்மடி தன் கன்றுக்கிரங்கிச் சுரந்து பாலைச்சொரியும். அதனாற் பகுதியானது சேதனனுடைய ஏவலினால் எல்லாவுலகங்களையும் முற்காலத்தில் வகுத்ததென்று சொல்லவேண்டும். பசும்புல்லானது பாலாகும் விதம்போலப் பகுதியும் இவ்வுலகாகுமென்றால் பசுவானது பசும்புல்லைப் பதமாய்த்தின்றாற் பாலாகும்; பசும்புல்தானே பாலாகுமோ? நீர், மண் என்பவை கூடி வித்தையும், முளையையும் விளைப்பதுபோலப் பகுதியும் ஒன்றோடொன்றாய்க் கலந்து ஒரு கருத்தனின்றித்தானே யுலகையுண்டாக்குமென்றால்வித்துப்போல அவயவியாய்த்தரியாது அழிந்துபோம். தன் சுதந்தரமும் தனக்குப் பொருந்தாது. ஜடமாதலால் ஒருவன் இல்லாமற் பொருந்தியிருக்கும் உறுதிப்பாடும் கூடாது. முக்குணங்களும் தாழ்தலும் உயர்தலும் ஒருவனாற் செய்யப்படுதல் திடமாதலால் வெவ்வேறாகிய

ஜகத்தை இறைவனொருவனின்றி முறையாய் வகுத்தல் பகுதியினால் ஆகுமோ? சிறிதும் ஆகாது. இருகாலும் இல்லாத ஒரு முடவனானவன் இருகண்ணுமில்லாத ஒரு குருடன்மீதேறி வருவதுபோலப் பகுதியைப்புருடன் நடத்துவானென்றால் அவ்விருவர்க்கும் உருவாகிய அவயவம் உள. அவற்றின் உதவியும் உண்டு. பகுதி அருவாகையால் அதனை நடத்துதல் அப்புருடனுக்கும் இசையாத காரியமாம். காந்தத்தினெதிரே இரும்பு அசைகின்ற காட்சிபோலப் புருடனெதிரே பொருந்திய பகுதியானது உலகத்தை வகுக்குமென்றால் அவ்விருவகைக்கும் சந்நிதானமொன்று எக்காலத்தும் இருக்கும். இவ்வுலகு அழிந்துமீளவும் உற்பத்தியாகுமென்று சொல்லுதல் எவ்வாறு? இந்திரியங்கள் பதினொன்றென்றும், ஏழென்றும்; புலன்கள் மூன்றென்றும், ஒன்றென்றும் ஒன்றுக்கொன்று விரோதிக்கும்படி சொல்லுகின்ற சொன்மயக்கத்தாலும், இறைவனுக்கு அது பொருந்தாமையாலும், நிச்சய ஞானம் உண்டாகாது; ஆதலால் உனது சாங்கிய மதம் குற்றமுள்ளது. புருடன் அநேகனென்றதும் கற்பனையேயன்றி இயற்கையாலல்லவாம். மற்றென்னெனின், சூரியன் ஒன்றாயிருந்தும் பிம்பம் கடங்கள்தோறும் உருவெவ்வேறாகி யுதிக்குந் தன்மைபோலாம். பகுதிக்கு அறிவில்லையாதலால் அது புருடன் பயன் கொள்ளத்தகு மிச்சையினால் இவ்வுலகத்தைத் தராது. புருடன் இச்சையைக்கொண்டு உலகத்தைத் தந்தானென்றால் அவனுக்கு என்றும் அதுவுள்ளதாகி மிகுவதனால் போகமேயன்றி மேலாகிய வீடு அடையவொண்ணாது. அந்தப் புருடன் இச்சையினால் உலகத்தைத் தருவானென்பையானால், நீயும் வேதாந்தியாவாய். இச்சை எமக்கு ஆரோபிதமாகும், உனக்கு மெய்யாகும். இவ்வகையால் எமக்குமுத்திகிடைக்கும், உனக்குத்தடையுண்டு. இதுவரைக்கும்பூருவபக்ஷமாகும்,

இனிச்சித்தாந்தத்தைக்கேட்பாயாக. உன்னைநீயறிந்து, இரண்டற்று ஒன்றாகி, சச்சிதாநந்தத்தை யடையக்கடவாயென்று வேதாந்திசொல்லக் கேட்ட சாங்கியனும் உதயகால தாமரைமலர்போல முகமலர்ச்சி கொண்டிருந்தான். அக்காலத்தில் தார்க்கிகன் வந்து வேதாந்தியை நோக்கிச் சிலவற்றைச் சொல்லத்தொடங்கினான்.

சாங்கியமதச் சருக்கம் முற்றிற்று.

---

## 42. தார்க்கிகன்மதச் சருக்கம்.



திரவியம், குணம், கர்மம், சாமாநியம், விசேடம், சமவாயம் என்று சொல்லப்பட்ட ஆறுபதார்த்தங்களோடு அபாவமென்றொன்று சேர்ந்து ஏழாகும். அந்த ஏழில் திரவியமானது பூதமைந்து, காலம், திசை, ஆன்மா, மனம் என்னும் ஒன்பது வகையாயிருக்கும். குணமானது உரு, சுவை, கந்தம், பரிசம், கணனை, பரிமாணம், பேதம், சையோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், ஆபாரம், திரவத்வம், ஸ்நேஹம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி, தர்மம், அதர்மம், வாசனை என்னும் இருபத்துநான்கு வகையாயிருக்கும். கருமமானது குவிதல், விரிதல், நடை, கீழ் மேற் செல்லுதல் என்னும் ஐவகையாயிருக்கும். சாமாநியமானது சாதிஉபாதியென்கிற இருவகையாயிருக்கும். விசேடமானது ஒரேவகையாயும், சமவாயமானது ஒரே வகையாயு மிருக்கும். அபாவமானது அந்நியோந்நியாபாவம், அத்தியந்தாபாவம், பிராகபாவம், ப்ரத்வம்ஸாபாவம் என்னும் நான்கு வகையதாகும். இனிக்கௌதமத்தியலையுஞ்சொல்லக்கேட்பாயாக. பிரமாணம், பிரமேயம், சமுசயம், பிரயோசனம், திட்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தர்க்கம், நிர்ணயம்

ஆவர்த்தம், செற்பம், விதண்டை, ஹேத்வாபாசம், சலம், சாதி, நிக்கிரகம் எனப்பதினாறுவகையதாம். அவற்றுள்ளே, பிரமாணமானது பிரத்யக்ஷம், அநுமாநம், உபமானம், சப்தம் என நால்வகைத்தாம். பிரமேயமானது ஆன்மா, சரீரம், இந்திரியம், பொருள், புத்தி, சித்தம், ப்ரவிர்த்தி, தோஷம், பிரேத்தியபாவம், பேறு, இடர், முத்தி எனப்பன்னிருபகுதியதாம். சமுசயமானது மூவகையாயும், அவயவமானதுஐவகையாயுமிருக்கும். திரவியங்களுள்ளே மண்முதலாகிய நான்குபூதங்களுள்ளே, பரமாணுக்களென்பவையும், ஆகாயம், காலம், திக்கு, ஆன்மா, மனம், என்னும் ஐந்தும் நித்தியப்பொருள்களாம்; அவற்றுள்ளே, மண்முதலாகிய நான்கு பூதங்களும் தோன்றுவதும் ஒடுங்குவதும் சொல்லுகிறேன்கேள். சகத்துக்குப்பிரமம் உபாதாநமன்றாதலால் சச்சிதாநந்தரூபமகத்துவமின்மையால், கந்த முதலிய நான்கு முண்மையால், மண்முதலாகத் தொகுத்த பரமாணுக்கள் அதிட்டமாகிய ஆன்மாவைத்தொட்டுச் சலித்து நீங்காமல் ஒன்றோடொன்றிசைந்து உபாதானமாய்ச் செய்யும். இவ்வகையால் உண்டாகிறவுலகத்தில் உபாதாநம் குணங்கள் உண்டாகும். இந்தநான்கினுள்ளும் மண்ணில் குணம்நான்கும் காரணகாரியங்களினும் பொருந்தும். அவை அநித்தியம்; நீர் காற்று என்பவற்றின்குணம்முடியாது; என்றும் நித்தியமாகிய உலகத்தைக்காக்கும்; இறைவிருப்பாகிய அணுநீக்க அவைநீங்கும். சமவாயிமுதலாகிய மூவகைக்காரணத்தால் சகத்தையெல்லாம் பரமான்மாவாகிய இறைவன் முக்குணத்தோடுகூடிநின்று படைத்தல் காத்தல் அழித்தல்களைச் செய்வான். அவனே எம்மையாண்டருளும் பரம தயாநிதி. தீவினைநல்வினைகளைச் செய்து அவற்றுக்கேற்றவுடல் களெடுத்து உழலும் சீவான்மாக்கள் அளவற்ற பலகோடிகளென்று சொல்லலாம். அதவுடல் தோறும் மனம், மற்றுள்ள பகுதித்தொகுதி

யென்பவையாவும் அணுரூபமாயும் நித்தியமாயும் அங் கங்கேயுண்டு. இவற்றின் பாகுபாடுகளெல்லாவற்றை யும் ஆராய்ந்தறிந்து, தானே தானுதல் தத்துவஞான த்தின்றன்மையாம். அந்த ஞானத்தால் பொய்யுணர்வு நீங்கிவிடும். அது நீங்கினவுடனே சாதிபேத தோஷம் நீங்கும். அது நீங்குதலும் தருமாதருமப் பிரவிர்த்தி நீங்கும். அதுநீங்குதலும்பிறவித்துன்பம்நீங்கும். அது நீங்குதலும் இருபத்தொரு வகையாகிய துன்பங்களும் நீங்கும். இந்திரியங்கள் அவற்றின் விடயங்கள் துக்க சுகங்கள் என்பவற்றை விடுத்தலேகைவல்லியபதமாம். இதுவே உண்மை நிலையென்று சொன்னுன். இவைக ளைக் கேட்டவேதாந்தியானவன் தார்க்கிகனைநோக்கி ச்சொல்லத்தொடங்கினுன்.

தார்க்கிகன் மதச் சருக்கம் முற்றிற்று.

---

## 43. வேதாந்திமறுத்தற்சருக்கம்.

பரமாணுத்துவணுகத்தின் பரிமாணம் திரணுகத் திற்பரிமாணத்துக்குக் காரணமாகாமையாலும், கண னையைக் கொண்டாகையாலும், தன் சாதியைத்தந்திடு நியமமின்மையாலும், சகத்துக்கெல்லாம் பிரமம் கார ணமாகாது; பரமாணுவேகாரணமென்று நீ சொன் னது பொருந்தாது. அன்றியும் உயிர்களின் அதிட்டத் தால் ஒன்றேடொன்றசைந்து கூடுதலால் சகமுண்டா கும். அவ்வசைவுண்டாதற்குக் காரணம் வேண்டும். அதுதிட்டமோ அதிட்டமோ? திட்டமென்றுல், அது முயற்சியென்பதல்லது அசைதலென்பதோ? அவ்விர ண்டுங் கூடாமல் உலகு தோன்றுங் காலத்தில் உடலின் மையால் அதிட்டமென்பாயாயின், அது அணுவுக்கோ சீவனுக்கோ? அணுவுக்கே யென்பாயாயின் அது அப சித்தாந்தமாகும். அது உயிருக்கென்பாயாயின், பர

மாணுக்கள் நெருங்கும் பொருட்டு அசையாத அணுக்களில் அந்த அதிட்டமின்மை சொல்லாலல்லவே. அதிட்டமாகிய உயிரை அணுத்தொடுதலால் அதற்கும் அசைவுண்டாமெனின், சகத்துக்குத் தோற்றம் எக்காலத்து முண்டு. உயிரை யெப்பொழுதும் அணுத்தீண்டுதலால், பின்னும் அணுச்செறிவு எங்கு முண்டென்றால் காரியமும் அவ்வாறேயாகும். ஓரிடத்தில்விதிக்கப்பட்ட தென்றாலும், உருப்பிலதென்றாலும், உருதுண்டாயினும், அழியும், செறியும் விதங் கூடாது. ஒரு புறத்தில் அவயவத்தைக் கற்பனையாலுண்டாக்கி, அதனாற்கூடிச்சகத்தை அணுவுண்டாக்குமாயின் அது கற்பனையாம். இந்தக் கூட்டம் பொருந்தும் வகையால், அந்தக் கற்பனையாலுண்டாகும் சகமுங் கற்பிதமாகும். இதனால் ஒழியாதகவலையையுடைய இவ்வுலகம் கந்தர்வ நகரத்தையும் கனவையும் நிகர்க்கும். அணுமுயற்சியுண்டானால் உலகழியாது, இல்லையானால் உலகமில்லை. அணுமுயற்சியுண்மையும் இன்மையுமில்லையாயின் எப்போதும் அதிட்டத்தை அணுப்பொருந்துதலால் அதற்கு ஒருகாலும் முயற்சி நீங்காது. கந்தமுதலிய நான்கு காரணமும் தூலமும் அழிகின்றகடாதிகளுக்குண்டாய் வந்தமையால் கந்தாதிகள் போல மற்ற மூன்றும் பரமாணுவுக்கும் வரவேண்டும். அப்படியே முடியுமென்றால், அந்த அணுவானது ஒருக்காலும் சகத்காரணமாவதற்கிசையாது. துக்கசுகங்கள் வெவ்வேறாய்த் தோன்றுதலால் உயிர்கள் பல தொகையாமென்றும், பேரறிவாலும் சிற்றறிவாலும் பரனும் சீவனும் வேறாகத்தக்கதென்றும் சொன்னையானால், அவ்விரண்டும் உபாதியினால் வந்ததல்லாமல் இயற்கையால் வந்ததல்ல ஆதலால் அநேக மென்றும் வேறென்றும் சொல்லவொண்ணாது. இருபத்தொரு துக்கங்களும்நசித்தால் முத்தியுண்டாமென்றுசொல்வாயாயின், உண்மையாயும் அகண்டசச்சிதாநந்தமயமா

யும், அழியாநிலையதாயு மிருப்பதுவே முத்தியென்று நால்வேதமும் சொல்லாநின்ற சொற்கள் பழுதாகுமாதலால் உனது தார்க்கிகமதம் தகுதியானதன்று, பழிப்புக்கேது வானதென்றான். இவ்விதமாக வேதாந்தி சொல்லுதலும், கேட்டதார்க்கிகன் கார்காலக்குயில் போல வாய் பேசாதடங்கினன். அதன் பிறகு யோக மதஸ்தன் ஒருவன் வந்து, வேதாந்தியை நோக்கிச் சிலவற்றைச் சொல்லத் தொடங்கினன்.

வேதாந்திமறுத்தந் சருக்கம் முற்றிற்று.

---

## 44. யோகமதச் சருக்கம்.

---

எமது யோகம் அங்கி, அதற்கு இயமாதியெட்டும் அங்கங்கள். அவற்றுள், கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, பிரமசரியம், கருணை, வஞ்சமின்மை, பொறை, திடன், ஊண், சுசியென்னும் பத்துப் பகுப்புள்ளது இயமமெனப்படும். இந்தப் பத்தில், வேதமார்க்கத்தாலன்றித் திரிகரணத்தாலும் ஒருயிரையும் அழிக்காதிருத்தல் கொல்லாமையாம். உண்மைப் பொருள்பற்றிச்சொல்லுஞ்சொல்வாய்மையாம். பிறர் பொருளைக் கவரமனத்தாலும் நினையாதிருத்தல் கள்ளாமையாம். விலக்கப்பட்டநாள்களில் மாதர்போகத்தை நீக்கியிருத்தல் பிரமசரியமாம். தன்னுயிர்போல எவ்வுயிர்க்கும் இரங்குதல் கருணையாம். நடுவு நிலைமையாயிருத்தல் வஞ்சமின்மையாம். ஒருவர் தன்னைவருத்தினால் அதற்கு மனம் வருந்தாமை பொறையாம். வேதமார்க்கத்தாலன்றி முத்தியடைய வொண்ணாதென்று துணிந்திருத்தல் திடனும். மிதாகாரம் கொள்ளுதல் ஊணும். நீர்மண் இவைகளைக்கொண்டு மாசுதீர்ப்பது சுசியாம். தவம், மகிழ்ச்சி, உண்மை, தானம், பூசை, நூல்கேட்டல், இலச்சை, மதி, செபம், நோன்பு என்னும் இப்பத்துப்

பகுப்புள்ளது நியமமெனப்படும். இவற்றுள், தவமாவது வேதத்திற் சொல்லப்பட்ட கிரிச்சிரமுதலியவற்றாலுண்டாகும் சரீரவருத்தம் பாராட்டாமலிருப்பதாம். மகிழ்ச்சியாவது செயலில்லாமல் வரும் பொருள்மேல் சந்தோஷம். உண்மையாவது வேதத்திற் சொல்லப்படுகிறகன்மத்தில் சிரத்தையாம். தானமாவது அறநெறியில்வந்த பொருளைத்தக்கோர்க்குக் கொடுத்தலாம். பூசையாவது திரிமூர்த்திகளையும் இயன்றளவுவணங்கிவழிபடுதல். நூல்கேட்டலாவது வேதாந்தசாத்திர சிரவணஞ்செய்தல். இலச்சையாவது உலகவொழுக்கத்தையும் வைதிகவொழுக்கத்தையும் விடுதற்குவெட்குதல். மதியாவது வைதிகத்தில் விசுவாசம். செபமாவது தனக்குரியதைவமந்திரத்தைச் சிந்தித்தல். நோன்பாவது அருட்குருவைக்கொண்டு உய்யவுபாயந்தேடுதல். இது நிற்க, ஆதநம் சோத்திகம், கோமுகம், பதுமம், வீரம், சிங்கம், பத்திரம், முத்தம், மயூரம், சுகம் எனவொன்பது வகையினையுடையதாகும். அவற்றுள், சோத்திகமாவது தொடைக்கும் முழங்காலுக்கும் நடுவே இரண்டு உள்ளங்கால்களையுஞ்செலுத்தி யிறுமாந்திருத்தல். கோமுகமாவது பின்புறத்தில் சகனப்பக்கத்தில் இருகாற்பரட்டை மாறிவைத்து அவற்றில் கைப்பெருவிரலால் மாறி வளையப் பிடித்திருத்தல். பதுமாசநமாவது இரண்டு தொடைகளின் மேலும் இரண்டுள்ளங்காலையு மாறித் தோன்றவைத்தல். வீரமாவது வலத்தொடையில் இடக்காற் பரட்டைச்சாத்தி இறுமாந்திருத்தல். சிங்கமாவது பீசத்தின்கீழே சிவனியிற் பரட்டைச் செலுத்தி இடது முழங்கையை முழங்காலின்மேல் வைத்து, அங்குலியை விரித்து நாசியைப் பார்த்திருத்தல். பத்திரமாவது பீசத்தின்கீழ்ச்சிவனிப்புறத்தில் இரண்டுபரடும்வைத்து அந்தப்பாதத்தை இருகையாலும் இறுகக்கட்டி அசையாதபடியிருத்தலாம். முத்தம் என்பது இடப்பரட்டால்

சிவனியை அழுத்தி, வலக்காற்பரடு அந்த இடக் காற்பரட்டின் கீழழுந்தும்படி யிருத்தலாம். மயூரமாவது முழங்கை யிரண்டும் உந்திப் புறத் தழுந்தும்படி பூமியிற் கையூன்றி, மனமொருமித்துக் காலை நீட்டித் தலை நிமிர்ந்திருத்தலாம். சுகமாவது எப்படியிருந்தால் சுகமாயும் அநுகூலமாயும் திடமாயு மிருக்குமோ அப்படியே யிருத்தலாம்.

இனிப்பிராணாயாம விதியைச் சொல்லுகிறேன் கேள். உந்தியின் கீழே நாடி யுதிக்குங் கிழங்கொன்றுண்டு; அதனிடத்தில் நாடியின் முளைகள் அநேகமாயுண்டாகும். அந்தநாடிகள்எழுபத்தீராயிரமாம். அவை யாவும் கீழும் மேலும் நாபியின் பக்கமுமாகச் சக்கரம்போலச் சூழ்ந்திருக்கும். அவ்வெழுபத்தீராயிர நாடிகளுள்ளே பிரதானமானவை பத்து நாடிகளாம். அவையாவையெனின்:—இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சிங்குவை, புருடன், அலம்புடை, குகு, சங்கினி என்பனவாம். இவற்றுள்ளே இடை பிங்கலைகள் சுழுமுனைக்கு இடம் வலமா யிசைந்து மாறிக்கொண்டே யிருக்கும். இம்மூன்று நாடிகளுக்கும் ஐந்து தொளைகளும் ஐந்து முடிச்சுகளும் உண்டு. இந்த நாடிகளின் தன்மையை யறிந்து, வெயில் காற்றில்லாத தனியிடத்தில், சுத்தசரீரியாய், வெண்ணீறணிந்து நியாசம்செய்து, மெல்லிய ஆசநத்தின்மேல் தருப்பையை விரித்து, அதன்மீது மான்தோல் முதலியவற்றை விரித்து, அதில் உட்கார்ந்து, விநாயகரைவணங்கி, இஷ்ட தேவதையையும் ஆசாரியனையும் துதித்து, கிழக்கு முகமாய் அல்லது வடக்குமுகமாய் ஆசநத்திலிருந்து, வாய்பேசாமல், உடம்பசையாமல், புருவநடுவில் சந்திரன் அமிர்தத்தைச் சிந்துவதாகப் பாவித்து, இருகண்ணும் நாசிநுனியிற் பொருந்தும்படி மாறுமல் விழித்து நோக்கி, இடை நாடியினால் வாயுவை வாங்கி வயிறுமுழுதும் பூரித்து, அதன் நடுவில் அக்

கினி சொலிப்பதாகப்பாவனைசெய்து, விந்துவுடன்கூடி, ரேபத்தைச் சிந்தித்து, பிங்கலை நாடியால் அந்தக் காற்றை வெளிப்படுத்தி, பின்னும் பிங்கலையால் பூரித்து இடைநாடியால் வெளிப்படுத்தி, இவ்வாறே நாளொன்றுக்கு அவ்வாறு விசை முக்காலத்திலுஞ் செய்து, மூன்று அல்லது நான்கு வருஷகாலம் முயன்றுவந்தால் நாடிகள் சுத்தியாகும்; சுத்தியானால் உடம்பு லேசாகும், சாடராக்கினி சொலிக்கும், நாதம் செழிக்கும், ஒளியதிகரிக்கும். இவ்வாறு நாடி சுத்தியான பிறகு, பதினாறு மாத்திரையால் வாயுவை யிடைகலையாற் பூரித்து, பதினாறினால் கும்பித்து, சிவமந்திரத்தையேனும் விஷ்ணு மந்திரத்தையேனும் தியாநித்து, அதன்பின்னே பிங்கலையால் முப்பத்திரண்டு மாத்திரையிற் போக்குதலாம். இந்தக்கும்பகத்தில் பூரகரேசகத்தோடுகூடின கும்பகமென்றும் அவற்றோடுகூடாத கும்பகமென்றும் இருவகையுண்டு. இவற்றிற்கு முதலில் பூமியை விட்டெழுதலும் இடையில் உடல் நடுங்குதலும் முடிவில் வெயர்த்தலும் குறிகளாம். பிரத்தியாகாரமாவது மனமானது விடயங்களிற் செல்லாதபடி தடுத்தலாம். தாரணையாவது மநோவியாபாரமின்றி லக்ஷியத்திற் சாரப்பண்ணுதலாம். தியாநமாவது ஆதார ஆதேயங்களிரண்டையும் ஆராய்தல். ஆதாரம் மூலாதாரமுதலாக அறுவகையாம். மூலாதாரம் இலிங்கத்தின்கீழே குதத்தின்மேலே முக்கோணவடிவாயிருக்கும். அந்த மூலாதாரத்தில் ஒரு குண்டலி சத்தியுண்டு; அது படத்தையுடைய பாம்பின் வடிவங்கொண்டு மும்மண்டல மிட்டுக்கொண்டிருக்கும்; அதற்கு அதிதெய்வம் ஒற்றைக்கொம்பினையுடைய விநாயகர். சுவாதிஷ்டாநமென்பது அறுகோணமாய் இலிங்கத்தினடியிலிருக்கும்; அதற்கு அதிதெய்வம் பிரமனுவன். உந்தியின் நடுவில் வட்டமாய் மணிபூரகமானது விளங்கும். அதற்குத் திருமால் அதிதேவதையாவன்.

மார்பில் அநாகதம் சக்கரரூபமாய் விளங்கும்; அதற்கு உருத்திரன் அதிதேவதையாவன். விசுத்தியென்பது கழுத்தில் நிலைபெற்றிருக்கும்; அதற்கு சீவான்மாவே அதிதெய்வமாகும். ஆக்கினையென்பது புருவநடுவில் அறுகோணமாயிருக்கும்; அதற்குப் பரமான்மாவே அதிதெய்வமாம். இது நிற்க, சமாதியாவது ஆறாதாரங்களைக் கடந்து மேற்போய், அசபையொடு பிரமரந்திரத்தளவுஞ் சென்று, அவ்விடத்தில் வாழைமொக்குப்போல் முகங்கவிழ்ந்திருப்பதாகிய ஒரு ஆயிரவிதழ்க்கமலத்தை சோதியுட் சோதியென்னும் பதோச்சாரணத்தால் மலரச்செய்து, அந்தப் பூவினிதழ்நுனியில் சந்திரனையடக்கி, அக்கினிபீசத்தால் மூலாக்கினியை யெழுப்பி, நாடீவலயத்தைப் பேதித்து, இளகச்செய்து, அந்தச் சந்திரனிடத்தினின்று பெருகிவருகிற அமிர்த வெள்ளத்தில் அழுந்துதலாம். இவ்விதமாகச் சொல்லப்பட்ட எண்வகையாகிய இயமமுதலியவற்றை அங்கமாகக்கொண்டு விளங்குகின்ற யோகமானது, அவ்வங்கங்களாற் றேன்றுமொளிகளெல்லாம் சூரியனுக்கெதிரே நக்ஷத்திரங்கள் ஒளிமழுங்குதல் போல மழுங்கிப்போகும்படி யெங்கும் வியாபித்துப் பேரொளியாய் விளங்கும் வண்ணம் பாவித்திருத்தலாம். இந்தயோகத்தின் பயன் யாதெனின், எவ்வகையாகிய பிணிகளும் நீங்கிப்போதலும், வினைகள்யாவு மொழிதலும், எல்லாச் சித்திகளும் கைகூடுதலுமாம். இந்தயோகியர்க்கு மூன்றுலகங்களிலும் கிடைத்தற்கரிய பொருள் ஒன்றுமில்லை. பிரமாதியருடைய தொழில்களும் இவரால் அரைக்கணத்தில் செய்து முடிக்கக்கூடும். ஆதலால் இந்த யோகமதம்போலப் பெருமையுள்ள மதம் வேறென்றில்லையென்று சொன்னான். அன்றியும் வாயிலிரண்டையுந் தடுத்து, ஐம்புலன்களையொடுக்கி, மனத்தை லக்ஷ்யத்தில்வைத்து, ஆதாராதேங்களை யறிந்து, அசையாமல் அந்தத் தேவதைகள்

அபிமுகமாய்த் திரும்பச்செய்து, பிரமரந்திரத்தினி டையேசென்று, சந்திரமண்டலத்தில் அமிர்தவெள் ளத்திலமுழ்ந்தி, சோதிசொரூபமாகப் பாவித்தலாகிய இந்த யோகநெறியினுஞ் சிறந்தது வேறொன்றில்லை யென்று சொன்னான். இதைக்கேட்ட வேதாந்தியான வன் அவனைநோக்கி, நீ சொன்ன சொற்களெல்லாம் உண்மையேயாயினும், நான்சொல்வதையும் நீயும் சற் றேசிரத்தையுடன் கேட்பாயாக:—என்னெனின், இந் தப்பாவனையை விட்டு ஒன்றாகும்படி நீயே நீயாகுந் தன்மையை நோக்கிச் சச்சிதாநந்த சாகரத்தில் மூழ் கக்கடவாய், இதினுஞ் சிறந்ததொன்றில்லையென்றான். இதைக்கேட்ட யோகமதஸ்தன் அப்படியே யாகட்டு மென்று சொல்லியமைந்திருக்கிற சமயத்தில், பாஞ்ச ராத்திரி யென்பவன் வந்து வேதாந்தியை நோக்கித் தன் மதக் கோட்பாட்டைச் சொல்லத் தொடங்கி னான்.

யோகமதச் சருக்கம் முற்றிற்று.

---

## 45. பாஞ்சராத்திரச் சருக்கம்.

அருமையாயும், அநந்தகோடி அற்புத குணங்க ளால் அலங்கரிக்கப்பெற்றவனும், ஆதியாயும், ஞான வொளியுருவமாயும், எங்குந்தானேயாகியும் விளங்கு கிற பரவாசு தேவரானவர் தமது பெருங்கருணையால் உலகத்தை யுண்டாக்கவேண்டுமென்று சுயேச்சையால் உருவங்கொண்டார். அவர், பிரமதேவனைத் தமது திரு நாபியில் தோன்றுவித்து, அவனைக்கொண்டு உலகை யுண்டாக்கி, அவனது புருவத்தில் உருத்திரனை யுண் டாக்கி, அவனைக்கொண்டு உலகை யழிப்பித்து, உல கைக் காப்பாற்றுந் தொழிலைத் தான் பூண்டு விளங்கு வார். இவ்வுலகமுழுதும் தமது திருவடியை வணங்கி நற்கதியடையும்படி கருணையால் இவ்வைந்தினையும்

ஐந்து ராத்திரியில் திருவாய் மலர்ந்தருளிச் செய்த தனுல் இந்த நூல் பாஞ்சராத்திரம் என்று சொல்லப் படும். இவர் சங்கருடணர், வாசுதேவர், பிரத்தியும் நர், அநிருத்தர் என்னும் நால்வகையாய் அவதரித்தரு ளினர். இதற்கு வியூகாவதாரமென்று பெயர். மேலும் அம்ஸாவதாரஞ் செய்தருளினர். மச்சம், கூர்மம், வரா கம், நரசிங்கம், வாமநம், பரசுராமர், பலராமர், ஸ்ரீரா மர், கிருஷ்ணர், கற்கி என்று சொல்லப்பட்ட தசாவ தாரமுஞ் செய்தருளினர். இந்தத் தசாவதாரங்களுள் ளே, வேதத்தைத் திருடிக் கடலிலொளித்த சோமுகா சுரனைக் கொல்லும்பொருட்டு மச்சாவதாரமும், திருப் பாற் கடல் கடையும்போது மந்தரமலையைத் தாங்கும் பொருட்டுக் கூர்மாவதாரமும், இரணியாக்கன் பூமி யைப் பாயாகச் சுருட்டினபோது அதை விரிக்கும் பொருட்டும் அவனைக் கொல்லும்பொருட்டும் வராகா வதாரமும், தமையன் பழிவாங்கச் சருவதேவ வணக் கத்தை விலக்கின இரணியனைக் கொல்லும்பொருட் டு நரசிங்காவதாரமும், மாவலியை யடக்கும்பொ ருட்டு வாமனவதாரமும், அரசரால் தாழ்த்தப்பட்ட வேதியர் நிமித்தமாக அவ்வரசரைக் கொல்லும்பொ ருட்டுப் பரசுராமாவதாரமும், இராவணன் முதலியோ ரைக் கொல்லும்பொருட்டு ஸ்ரீராமாவதாரமும், பிர லம்பன் முதலிய பல ராக்ஷஸரைக் கொல்லும்பொருட் டுக் கிருஷ்ணவதாரமும், தருமத்தை நிலைநிறுத்தும் பொருட்டுக் கற்கியவதாரமும் செய்தருளுவர். அன் றியும் ஒரு முதலைவாயில் அகப்பட்டு மெலிவடைந்த ஒரு யானையானது ஆதிமூலமேயென்று அழைத்த வுடனே விரைந்துவந்து அந்த முதலையைத் தமது திரு வாழியால் கொன்று யானைக்கு முத்தி தந்தருளினர். இவ்வாறு அவர் உலகத்துக்குச் செய்கிற கருணைச் செயல்களுக்கு ஒரு எல்லை இல்லை. அவரருளால் உண் டாகின்ற அண்டகோடிகளெல்லாம் அநித்தியமுமன்று;

ஆயினும் அவையாவும் அவர் கருணையாலே உய்யா நின்றன. அவை ஏகமன்று, அநேகமாம். பிரபத்தி பக்தி என்னும் வழியால் ஆசாரியனருள்பெற்று, அந்தப்பரந்தாமனை வணங்கி, அர்ச்சிராதி மார்க்கமாகப் போய், விரஜாநதியில் மூழ்கி, திவ்வியரூபம் பெற்று, அநந்தகருட விஷ்வக்ஸேநாதிகள் எதிர்கொள்ள, அவர்களிடத்தில் தமது சுகதுக்கங்களையெல்லாம் விண்ணப்பஞ் செய்து, பிறகு பகவதநுக்ரஹத்தால் சாலோகசாமீப சாரூபசாயுஜ்யங்களை யடைந்து, அப்பிராகிருத வுலகத்துச்சென்று, சங்காதி பஞ்சாயுதங்களும் தாங்கி, ஸ்ரீபெரியபிராட்டி களிக்கும்படி பீதாம்பரந்தரித்து, கௌஸ்துபமணி யணிந்து வாழ்கின்ற எம்பெருமானது ஏவற்பணிவிடையைச் சிரசாவகித்து, இங்கே தாஸோஹமென்று பாவித்த காரணத்தால் அங்கே திருமாலின் கல்யாண குணங்களையெல்லாம் சேவித்து வாழ்வார். இதுவே உண்மையாதலால் யாவரும் திருமாலுக் கடிமைபூண்டு, அவனடியார்களை வணங்கிக் கைங்கரியஞ்செய்து, இம்மையிற் புகழும் மறுமையில் முத்தியும் அடைவார் என்றான். இதைக் கேட்ட வேதாந்தியானவன், உலகம் யாவும் மித்தையன்றென்றும் ஆன்மா வேறு வேறாய் அநேகமென்றும் நினைத்த பாஞ்சராத்திரியின் மனோவிகாரத்தையொழித்து, வேதமுடிவை நோக்கி நீ வாழக்கடவையென்றான். வேதாந்தியானவன் இந்தப் பிரகாரமாகப் பாஞ்சராத்திரியை வாய்பேசாதிருக்கும்படி செய்த பிறகு, சைவசித்தாந்தி என்பானொருவன் வந்து, விவேகனும் தலையசைக்கும்படி வேதாந்தியை நோக்கித்தன் மதக்கொள்கைகளைச் சொல்லலாயினன்.

பாஞ்சராத்திரச் சருக்கம் முற்றிற்று.

---

## 46. சைவசித்தாந்தச் சருக்கம்.

காண்டல், அநுமான முதலாக, உவமை, அருத்தாபத்தி, அபாவம் என்று சொல்லப்படுகிற இவைகளே பிரமாணங்களென்று சொல்லப்படும். இவையன்றிவேறுபிரமாணங்களுஞ் சிலவுள; இவற்றைக் கொண்டு அளக்கப்படும் பொருள்கள் மூன்று: அவை பதி, பசு, பாசம் என்பன. அம்மூன்றனுள் பதியென்று சொல்லப்படுவது, ஆதிமத்தியாந்தரஹிதமாய், சச்சிதாநந்தமாய், அகண்டமாய், வேதமுடிவாய், பிரமாதி தேவர்களுக்கு நாயகனுய், உமாஸஹிதனுய்ப் பஞ்சகிருத்தியங்களேயும் நடத்துவதும், பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, என்னும் பஞ்சசத்திகளோடு கூடி, அபின்னுபாவசத்தி யிடமாகி, விகாரமில்லாமல் சூரியனுக் கெதிரே தாமரைபோல எல்லாத் தொழில்களும் மாயையினிடத்தில் பொருந்தக் காட்டி, உருவலயபோகாதி காரங்களாகிய மூன்று வகையாய்ப் பிரகாசிக்கும். அன்றியும் படைப்பு முதலிய ஐந்தொழில் களேயும் நடத்தாநிற்கும். இவையாவும் பதிக்கு இயல்பாகும். பசுவருக்கங்களெல்லாம், எல்லேயின்மை நாசமின்மையென்பவற்றை யியற்கையாகக் கொண்டு, மலத்திலழுந்தி, இருவினேகளுக் கிடாகச்சிவனருளால் உடம் பெடுத்து, சுகதுக்கங்களே யநுபவித்து, மலபரிபாகம் வருதலும், திருவருளால் பந்த முழுதும் நீங்கப்பெற்று, நீங்காத அன்பங்கள் நீங்கி, பேரின்பவீட்டையடையா நிற்கும். விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர், இம்மூவர்க்கும் ஈசனே மலமொழித்தருளுவன். பாசமானது மலம் மாயை கன்மம் எனமூவகையாம். இவற்றுள், மாயை விந்து, மோகினி, மாயேயம் என மூன்று வகைப்படும். கர்மமானது தருமாதருமம் என்றிரண்டு வகையாயிருக்கும். இவ்விரண்டும் நினேவு, சொல், செயல் என்னும் மூன்றினுலும் வரும். மூலவா

ணவமொன்றாய் நித்தமாய் இருண்டமோகமாகி, தாமிரத்திற்களிம்புபோல ஆன்மாவைப் பற்றி நின்று நீங்குங்காலம் வந்தால் விட்டு நீங்கும். அனந்தசத்தியைப் பொருந்தி அறிவு முழுதும் மறைக்கும். இத்தன்மையுள்ளதே மலமென்று அறிஞர் கூறுவர். சித்துக்கும் அசித்துக்கும் அருள்வது இயல்பாதலால், பாசக் கூட்டத்துக்கு மலபரிபாக முண்டாக ஈசன் அருள்வதாய், பித்தை நீக்குதற்குரிய சிவசத்தி திரோதாநசத்தியென்றொருபேராய், எப்படிப்பட்டவொளிக்கும் நீங்காத இருளுருவாய் மலமென்று சொல்லப்பட்டு மிருக்கும். விந்து வானது மாமாயை, குடிலை முதலிய பல பேர்களைப் பெற்று, இறைவனருளுக்கிடமாகி, சிவம், சத்தி, நாதம், விந்து, சாதாக்யம், ஈசுரம், சுத்தவித்தை என்பவற்றையும் தந்து, நாதத்தில் வைகரிமுதலிய வற்றையும் தருந்தன்மையை யுடைத்தாயிருக்கும். சுத்தமாயை அருவாய், ஒன்றாய், அநித்தமாய், அணுக்களுக்கு ஆவரணமாகி, விரிவாய், தன் கருமத்தால் அசலமாய், சித்தாய், ஊழிகாலத்தில் உயிர்களுக்கிடமாகி, மலமாகி உலகமுழுதும் உண்டாதற்குஉபாதாநகாரணமுமாகும். தனுகரணபுவன போகங்களாகிய நான்கு தன்மையாக முன்னே சொல்லப்பட்ட மாயாகாரியம் தோன்றும். அது காலம், நியதி, கலை, வித்தைகளாய், அவ்வித்தையில் அராகம் உண்டாகும்; இவற்றின் செறிவில் புருடனுண்டாவன். கலாதத்துவத்தில் அவ்வியத்தம் முக்குணத்தின் செறிவாய்த் தோன்றும்; அதில் உருத்திரரால் சித்தம், புத்தி, அகங்காரம் என மூன்றாய்த் தோன்றும். அகங்காரம் தைசதம், வைகாரி, பூதாதியென மூன்றுவகையாம். அவற்றுள் மனமும் ஞானேந்திரியமும் தைசதமாம் வைகாரி கன்மேந்திரியங்களைந்தையும் தன் மாத்திரை களைந்தையும் தரும். பூதாதியாகிய ஐந்தில் ஆகாய முதலிய பஞ்சபூதங்கள் தோன்றும். இவ்வகையால் தத்துவங்கள் முப்பத்தா

றாய் முடிவுபெறும். சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தையாகிய ஐந்தும்சிவதத்துவமாகியசுத்த தத்துவமென்றுசொல்லுவர். காலம், நியதி, கலை,வித்தை, அராகம், புருடன், பிரகிருதியாகிய ஏழும் வித்தியா தத்துவமாகியசுத்தாசுத்ததத்துவங்களென்றுசொல்லுவார்கள். சித்தம் புத்தி அகங்காரம் மனம் ஆகிய நான்கும், மெய் வாய் கண் மூக்குச் செவி ஆகிய ஐந்தும், வாக்கு பாதம் பாணி பாயுரு உபஸ்தம் ஆகிய ஐந்தும், சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் ஆகிய ஐந்தும், பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் ஆகிய ஐந்தும், இவ்விருபத்து நான்கும் ஆன்ம தத்துவமாம்; அசுத்ததத்துவ மென்றும் சொல்லப்படும். ஆற்றுநீர் போல, இடையீடின்றி, அநாதியாய், சரீரங்கள் யாவும் தோன்றுதற்கு ஏதுவாய், நசிப்பதற்கும் காரணமாய்த் தொடர்ந்து, ஆன்மாவுக்குப் பலவகையாய் இன்பதுன்பங்களைப் பொருந்துவித்து, உலகமழியுங்காலத்தில் மாயையிலடங்கும். இது கன்மமலம் வகுத்தவாறும். மந்திரம் பதம் வன்னம் புவனம் தத்துவம் கலை என்னும் இவ்வாறும் சடத்துவா எனப்படும். இவற்றுள் மந்திரம் பதினொருவகையாயும், பதம்எண்பத்தொருவகையாயும், வன்னம் ஐம்பத்தொன்றாயும், புவனம்இருநூற்றெண்பத்துநான்காயும்,தத்துவம் முப்பத்தாறாயும், கலைகள் ஐந்தாயும் வகுக்கப்பட்டிருக்கும். ஒன்றிலொன்று வியாத்தியாய்ப் பொருந்துகின்றபந்தமாகிய இவையாறும் நீங்கிமேலாய்ச் சென்றுநிலைபெற்ற திரோதானசத்தியும் அருள் வழியாய்நிற்க, பொதுவினின்று நடநஞ் செய்வோனாகிய இறைவன் சச்சிதாநந்தமாய்ச் சமாசமாயிருக்கிற நிருவாணபதத்தைக் கொடுக்கப் பெற்றுப் பேரின்பத்தையடையாநிற்பர் என்றான். அது கேட்ட வேதாந்தி, சைவசித்தாந் தியைநோக்கி,உன்னுடைய ஆராய்ச்சியும் சுபசரிதமும் எமக்கொத்ததேயாயினும்முத்திமார்க்கமொன்று

மாத்திரப்பேதப்படுகின்றது. இன்னமும்சிவபெருமான துதிருவடித்தாமரையைவணங்கி,வேதமுடிவைக்கண்டு இரண்டற்று, நிலைபெற்ற சச்சிதாநந்த நிரதிசயமுத்தி யையடைந்து வாழக் கடவாயென்றான். இப்படி வேதா ந்தி சொல்லிச் சைவ சித்தாந்தியை வாயடக்கி நின்ற போது,பாசுபதன், வாமி, வைரவன், மகாவிரதி, காளா முகன் என்பவர்கள் வந்து வேதாந்தியை யெதிர்த்து வாது செய்து, அபஜயமடைந்து வாயடங்கினார்கள்.அப் பொழுது விவேகன் தன் மைத்துனனாகியவேதாந்தியை நோக்கி, நீயிதுவரைக்கும் பலமதஸ்தரையும் வாதிட்டு வென்றது சரிதான், இனி உன்மதக் கோட்பாட்டைச் சொல்லக் கடவாயென்றலும், வேதாந்தி சொல்லலா யினன்:

சைவசித்தாந்தச் சருக்கம் முற்றிற்று.

---

## 47. வேதாந்தச் சருக்கம்.

கங்கை முதலாகிய பல நதிகளும் இறுதிக்காலத் தில் சமுத்திரத்திற் பிரவேசித்து அதனோடொன்றாய்ப் பொருந்துவது போல மீமாஞ்ச முதலாகிய சமய நெறிகளெல்லாம் எனது வேதாந்த நெறியி லடங்கி யொன்றாய்விடும். சத்தாய், அகண்டபரி பூரணமாய், அருவாய்,தற்பரமாய்,சித்துமுதலியவாய் விளங்குகின்ற அந்தப் பிரமமானது, ஒரு சூரியனே பலகுடங்களி லுள்ள நீரிலும் பிரதிபிம்பித்திருப்பது போலச் சரீர ங்களி லெல்லாம் நிற்கும். அப்படி நின்றும் பொறிக ளால் அறிதற்கரிதாகவும் காட்சி முதலாகிய பிரமாண ங்களால் அளவிடப்படாததாகவுமிருக்கும். மாலைக்கா லத்தில் பழுதையானது பாம்பாகத் தோற்றும்; சூரிய னுதித்த காலைப்பொழுதில் பழுதை மெய்யாகிப் பா ம்பு பொய்யாய்ப்போம். அதுபோல இவ்வுலகம் அவி த்தையால் மெய்யாய்த் தோன்றினும் பிரமஞான

முண்டானல் பொய்யாயொழியும். மேலும் கிளிஞ்சில் வெள்ளி போலவும் பொய்யாயொழியும்; சிலந்திப்பூச்சியானது தன் வாய் நூலால்வலை பின்னி விரித்து மறுபடியும் தன்னுள்ளே யிழுத்தடக்கிக் கொள்வது போல பிரமமானது தன்னிடத்திலிருந்து உலக முழுதும்தோன்றுவித்துக் காத்து அழிக்குமாதலால் அந்தப் பிரமம் உலகத்துக்கு நிமித்தகாரணமும் உபாதானகாரணமுமாகும். அந்தப் பிரமத்தினின்று ஆகாயமும், அதில் வாயுவும், அதில் நெருப்பும், அதில் நீரும், அதில் நிலமும், இவ்வைந்தில் பயிருண்டாகி, அந்தப் பயிரில் அமுதுண்டாகி, அவ்வமுதில் துவக்கு முதலாகிய தாதுக்களுண்டாயின. அந்தத் தாதுக்களின் கூட்டத்தில் அன்னமய கோசந்தோன்றும்; அதனிடத்தில் பிராணமய கோசந்தோன்றும்; அதனிடத்தில் மனோமயகோசந்தோன்றும்; அதனிடத்தில் விஞ்ஞானமய கோசந்தோன்றும்; அதனிடத்தில் ஆனந்தமய கோசந் தோன்றும். ஆகாயமானது தன்னிடத்துண்டான வாயுமுதலிய நான் கினுள்ளும் நிறைந்து புறத்திலும் நிறைந்திருத்தல் போல, பிரமமும் தன்னிடத்திலுண்டான பஞ்சகோசவுடல்கள் தோறும் நிறைந்து உள்ளும் புறம்பும் விளங்காநிற்கும். சூரியனது ஒளிகுறைந்து குடங்கள் தோறும்நின்றாற்போலப் பிரமமும் பஞ்சகோசசரீரங்கள் தோறும் நிற்கும். அப்படி நின்றாலும், நீருக்கேயன்றிப் பிரதிபிம்பத்துக்குச் சலநமில்லாதது போலச் சரீரத்துக்கேயன்றிப் பிரமத்துக்குச் சலநமில்லை. செய்கின்றதொழில் வேறுபாட்டினல் பல பெயர்கள் பெற்றுப் போகபோக்கியங்களால் விரியாநின்ற நனவுகனவு சுழுத்தி துரியம் என்னும் அவஸ்தைகளையடையும். இவற்றிற்கு முறையே கரணங்கள் பதினன்கும் நான்கும் ஒன்றும் இவையொன்று மில்லாதொழிதலுமாம். கருவிகரணங்கள் யாவும் நானெனல் பந்தமாம். ஒன்றை யொன்று யறிகின்ற மருளினல்

மாத்திரய்பேதப்படுகின்றது. இன்னமும்சிவபெருமான துதிருவடித்தாமரையைவணங்கி,வேதமுடிவைக்கண்டு இரண்டற்று, நிலைபெற்ற சச்சிதாநந்த நிரதிசயமுத்தியையடைந்து வாழக் கடவாயென்றான். இப்படி வேதாந்தி சொல்லிச் சைவ சித்தாந்தியை வாயடக்கி நின்ற போது,பாசுபதன், வாமி, வைரவன், மகாவிரதி, காளாமுகன் என்பவர்கள் வந்து வேதாந்தியை யெதிர்த்து வாது செய்து, அபஜயமடைந்து வாயடங்கினார்கள்.அப்பொழுது விவேகன் தன் மைத்துனனாகியவேதாந்தியை நோக்கி, நீயிதுவரைக்கும் பலமதஸ்தரையும் வாதிட்டு வென்றது சரிதான், இனி உன்மதக் கோட்பாட்டைச் சொல்லக் கடவாயென்றதும், வேதாந்தி சொல்லலாயினன்.

சைவசித்தாந்தச் சருக்கம் முற்றிற்று.

---

## 47. வேதாந்தச் சருக்கம்.

கங்கை முதலாகிய பல நதிகளும் இறுதிக்காலத்தில் சமுத்திரத்திற் பிரவேசித்து அதனோடொன்றாய்ப் பொருந்துவது போல மீமாஞ்ச முதலாகிய சமய நெறிகளெல்லாம் எனது வேதாந்த நெறியி லடங்கி யொன்றாய்விடும். சத்தாய், அகண்டபரி பூரணமாய், அருவாய்,தற்பரமாய்,சித்துமுதலியவாய் விளங்குகின்ற அந்தப் பிரமமானது, ஒரு சூரியனே பலகுடங்களிலுள்ள நீரிலும் பிரதிபிம்பித்திருப்பது போலச் சரீரங்களி லெல்லாம் நிற்கும். அப்படி நின்றும் பொறிகளால் அறிதற்கரிதாகவும் காட்சி முதலாகிய பிரமாணங்களால் அளவிடப்படாததாகவுமிருக்கும். மாலைக்காலத்தில் பழுதையானது பாம்பாகத் தோற்றும்; சூரியனுதித்த காலைப்பொழுதில் பழுதை மெய்யாகிப் பாம்பு பொய்யாய்ப்போம். அதுபோல இவ்வுலகம் அவித்தையால் மெய்யாய்த் தோன்றினாலும் பிரமஞான

முண்டானால் பொய்யாயொழியும். மேலும் கிளிஞ்சில் வெள்ளி போலவும் பொய்யாயொழியும்; சிலந்திப்பூச் சியானது தன் வாய் நூலால்வலை பின்னி விரித்து மறு படியும் தன்னுள்ளே யிழுத்தடக்கிக் கொள்வது போல பிரமமானது தன்னிடத்திலிருந்து உலக முழுதும்தோ ன்றுவித்துக் காத்து அழிக்குமாதலால் அந்தப் பிரமம் உலகத்துக்கு நிமித்தகாரணமும் உபாதாநகாரணமுமா கும். அந்தப் பிரமத்தினின்று ஆகாயமும், அதில் வா யுவும், அதில் நெருப்பும், அதில் நீரும், அதில் நிலமும், இவ்வைந்தில் பயிருண்டாகி, அந்தப் பயிரில் அமுது ண்டாகி, அவ்வமுதில் துவக்கு முதலாகிய தாதுக்களு ண்டாயின. அந்தத் தாதுக்களின் கூட்டத்தில் அன்ன மய கோசந்தோன்றும்; அதனிடத்தில் பிராணமய கோசந்தோன்றும்; அதனிடத்தில் மனோமயகோசந் தோன்றும்; அதனிடத்தில் விஞ்ஞானமய கோசந்தோ ன்றும்; அதனிடத்தில் ஆனந்தமய கோசந் தோன் றும். ஆகாயமானது தன்னிடத்துண்டான வாயுமுத லிய நான் கினுள்ளும் நிறைந்து புறத்திலும் நிறைந்தி ருத்தல் போல, பிரமமும் தன்னிடத்திலுண்டான பஞ் சகோசவுடல்கள் தோறும் நிறைந்து உள்ளும் புறம் பும் விளங்காநிற்கும். சூரியனது ஒளிகுறைந்து குடங் கள் தோறும்நின்றாற்போலப் பிரமமும் பஞ்சகோசசரீ ரங்கள் தோறும் நிற்கும். அப்படி நின்றாலும், நீருக் கேபன்றிப் பிரதிபிம்பத்துக்குச் சலநமில்லாதது போ லச் சரீரத்துக்கேபன்றிப் பிரமத்துக்குச் சலநமி ல்லை. செய்கின்றதொழில் வேறுபாட்டினால் பல பெய ர்கள் பெற்றுப் போகபோக்கியங்களால் விரியா நின்ற நனவுகனவு சுழுத்தி துரியம் என்னும் அவஸ்தைகளை யடையும். இவற்றிற்கு முறையே கரணங்கள் பதினா ன்கும் நான்கும் ஒன்றும் இவையொன்று மில்லா தொழிதலுமாம். கருவிகரணங்கள் யாவும் நானெனல் பந்தமாம். ஒன்றை யொன்று யறிகின்ற மருளினால்

மாயாகருமங்களுண்டாகும். மருள் ஒழிந்தால் அந்தக் கருமமும் ஒழியும்; ஒழிந்து தெளிவுண்டாகவே பேத பாவனைகள் யாவும் நீங்கும். நிஷ்காமியகருமம் சித்த சுத்தியையுண்டாக்கும்; அந்தச் சித்தசுத்தியால் ஞான முண்டாகும்; அந்த ஞானமுண்டாதலும் அசையாநின்ற நீரில் தோற்றுகிற சந்திரபிம்பத்துக்கு அசைவில்லாததுபோல மாயையில் தோற்றுகிறதன்னை அசையாதவனுய்க் காண்பான். கருவிகரணாதிகளினின்று நீங்கிக் காணப்பட்டதானே தானாகித்தனது அநுபூதியிற்கண்டு மற்றொன்றையுங்காணாமல், சொல்லுமற்று, ஆகாயமுதலிய ஒழியவும் தானொழியாது நிலைபெற்று நானே பிரமமென்று தெளிவதே மெய்ஞ்ஞானமாம். வேத முடிவாகியவாக்கியமே மகாவாக்கியமென்று சொல்லப்படும். அவ்வாக்கியத்தை அறிஞர் குருமுகத்தை யடுத்து அறிந்து கொள்வார்கள். அப்படியறிந்து கொள்ளாதவர்கள் அறியும்பொருட்டு பஞ்சசாதனத்தைக் கொண்டு இயமநியமாதிகளாகிய யோக முயற்சியைச் செய்வார்கள். என்றிப்படிசொன்ன வேதாந்திக்கிடையே அஞ்ஞன் புகுந்து, நீ சொன்ன சொல் நன்று நன்று! என் வல்லமையும் நானுமிருக்க நீ சொன்னது எவ்வாறு பொருந்தும்? அதையறிவோர்யார்? அறிந்தாலும் அவ்வறிவைப் போயழிப்பேன்; அழியேனாயின் என்பெருமையென்னும்முடியுமென்றான். அந்தச் சொல்லைக்கேட்ட வேதாந்தியானவன் அரசனை நோக்கி, இவனது ஆற்றலைப்பிரபோதனன்றி அழிப்பவர் வேறொருவரிலர். ஆதலால் பிரபோதனாகியமைந்தன் உதிக்கும்படி தேவரீர் திருவுளம் வைக்கவேண்டுமென்று மெல்லச் செவியிலோதினான். அதைக்கேட்ட விவேக வேந்தன் களிப்படைந்து, மைத்துனனாகிய வேதாந்தியை மார்போடணைத்துக்கொண்டு, மற்றுமுள்ள ஞானவான்களையும் அவனோடு போம்படியாக விடைகொடுத்தான்.

வேதாந்தச் சருக்கம் முற்றிற்று.

---

## 48. பிரபோதன் முடிசூடு சருக்கம்.

அந்தவேதாந்தி முதலானோர் போன பிறகு, விவேகராஜன் தன் மனைவியாகிய உபநிடதையை இதய கமலாசநத்தி லிருத்தி, பொற்றாமரை மலரின்மேல் அரசவன்னம் தன் பெடையைத் தழுவுதல்போலத் தழுவி மனங்குழைந்தான். இப்படி நாள்தோறும் உமாதேவியும் சிவபிரானும் பிரிவறக்கூடி வாழ்வதுபோலக் கூடிவாழுங்காலத்தில், பாற்கடலில் வலம்புரிச் சங்கின் கருப்பத்தில் முத்துச்சூலுண்டானதுபோல உபநிடதையின் வயிற்றில் ஒரு சூலுண்டாயிற்று. அப்பொழுது சிவபக்தி ஹரிபக்தி என்கிற யோகினிகள் அரசனையழைத்து, அந்தச்சூலைக் காப்பாற்றக் கடவாயென்று நியமிக்க, அவனும் சிவபெருமானது வீரியத்தைச் சரவணப்பொய்கையில் இந்திரன் காப்பாற்றினாற்போலக் காப்பாற்றினான். அந்தச்சூலானது நாள்தோறும்பிறைச் சந்திரன் வளர்வதுபோல வளர்ந்து வருங்காலத்தில் மாயாகாரியங்கள் யாவும் வெந்தபடம்போல வலிகுன்றிக் கெட்டொழிந்தன. பின்னும் நிதித்தியாசநனை யழைத்து, நீ அரசன் காப்பாற்றின சூலை, சச்சிதாநந்தமயமே அநிர்தசட துக்கங்களென்று சொல்லலாகாதென வகுக்கும் சீமந்த முதலிய சடங்குகள் செய்யக்கடவாயென்று கட்டளையிட்டார்கள். அந்த நிதித்தியாசநனும் அந்த யோகினிகள் கட்டளையைச் சிரசாவகித்துச் சீமந்தமுதலிய சடங்குகளைமுறையாய்ச் செய்து, கண்ணை யிமைகாப்பதுபோல அந்தச் சூலைக் காத்துவருநாளில், அஞ்ஞனென்கிற இரவு விடியவும் விவேகவேந்தனது முகத்தாமரையும் உபநிடதையின் அகத்தாமரையும் மலரவும் பிறவியாகிய பனி அதிகரியாதொழியவும் பிரபோதன் என்னுஞ் சூரியன் உதித்தான். சிங்கக்குட்டியானது பிறக்கும்போதே மதயானையைக் கொலைசெய்யுந் தன்மைபோல உதிக்கும்

போதே அஞ்ஞானது உயிரைத்தொலைத்து உதித்தான். அப்படி உதித்தமைந்தனை வாணிமகளாகிய உபநிடதை தன் மணவாளனாகிய விவேகவேந்தன் கையிற்கொடுக்க, அவனும் வாங்கி மனமகிழ்ந்து, தன்னைப்பெற்ற தந்தையாகிய மானதன் கையிற்கொடுக்க, அவனும் வாங்கி உடல் புளகித்துக் கண்களிக்கவும் தோள்கள் பூரிக்கவும் தன் மார்பிலணைத்துத்தழுவிக்கொண்டான். அந்தச்சமயத்தில் அந்தமைந்தன், நான் தேவர்மனிதர் முதலிய எழுவகைப் பிறப்புமல்லேன், அசரங்களுமல்லேன், பஞ்சபூதங்களு மல்லேன், ஞானேந்திரியங்களு மல்லேன், கன்மேந்திரியங்களு மல்லேன், பஞ்சபிராணங்களுமல்லேன், அந்தக்கரணசதுஷ்டயமுமல்லேன், இவ்வுலகத்தில் காணப்படுகிற எல்லாப்பொருள்களும் என் கண்ணுக்குச் சச்சிதாநந்த மயமாகவே காணப்படுகின்றன வென்றான். அப்போது அந்தப்பிரபோதன் என்னும் புதல்வன் நிதித்தியாசநனால் ஆயிரங்கிரணங்களோடு கூடி விளங்குகின்ற உச்சிக்காலத்துச் சூரியன் போலத் தாயார் மகிழும்படி வளர்கின்ற காலத்தில், விவேகனானவன் அந்த மைந்தனுக்கு முடி சூட்டித் தான் வனத்துக்குப் போகவேண்டுமென்றாலோசித்து, நித்த அகண்டாகார சுபாநிரதிசய சச்சிதாநந்த முத்தியென்னும் ஒப்பற்ற சாம்ராஜ்ய முழுதும் உனதேயென்று நிரூபகாதியர் உதவியைக்கொண்டு சுபமங்களதினத்தில் பிரபோதனுக்கு முடிசூட்டினான். இவ்வாறு விவேகனால் முடி சூட்டப்பெற்ற பிரபோதனென்னும் ராஜராஜேந்திரன் செங்கோல் செலுத்தி அரசாட்சி செய்துவருங் காலத்தில், விவேகன் தன் தாயாகிய நிவிர்த்தியும் தன் மூத்தமனைவியாகிய சுமதியும் இளையமனைவியாகிய உபநிடதையும் உறவினரும் தன்னைத் தொடர்ந்துவரக் காட்டிற் பிரவேசித்தான். இவன் காட்டிற் பிரவேசித்தலும் இவன் தந்தையாகிய மானதன் தனிமையாற்றாதவனாய்த் தன் தாயாகிய மாயையினிடஞ்

சேர்ந்து அவள் திருவடியை வணங்குதலும், அவளும் புத்திரனாகிய மானதனை வாரியெடுத்து மார்போடணைத்து,நீயிங்குவந்த காரியமென்னவென்றுகேட்க, மானதனும்நடந்தசெய்தியெல்லாம் ஆதியந்தமாய்ச்சொல்லி அந்த மாயையினிடத்திலே யமைந்திருந்தான். அப்போது மாயையானவள் தன்னாலேவப்பட்ட மீமாஞ்சகன் முதலானோருடைய சொற்கள் தாழ்ந்ததையும், வேதாந்தி வெற்றியடைந்ததையும், அவன் தங்கையாகிய உபநிடதையை விவேகன் சேர்ந்து பிரபோதனைப் பெற்றதையும், அவன் பிறந்தவுடனே அஞ்ஞன் உயிர் நீங்கினதையும், மானதன் தன்னிடத்தில்வந்து சேர்ந்ததையும், ஒளியை யிருளாக்கிப் பொய்யை மெய்யாக்கி யாவரையும் மயக்க வல்லளாகிய தனது இந்திரசால முழுதும் அழிந்து இவ்வாறு முடிந்ததையும் மனத்திற்கொண்டு மிகவும் வருந்தி, சலநமற்ற என்தலைவனிடத்தில் என் சலநத்தை யாரோபித்தும் கெடுதியின்றி யெவ்விடத்தும் வாழ்வோனைச் சரீரமாகிய சிறு குடிலிற் சிறைசெய்து என்மூத்த மகனாகிய மோகனைக்கொண்டும் அவன் மக்களாகிய அஞ்ஞன் முதலானோரைக்கொண்டும் தளையிட்டும் இன்னும் பலதீமைகள் செய்தும் பலிக்காமல் இவ்வாறு முடிந்ததே ஆதலால் நான் செய்தபிழையும் என் மகன் செய்த பிழையும் அவன் புதல்வர் செய்தபிழையும் ஆகிய எல்லாவற்றையும் யோசிக்கு மிடத்தில் தீமைகளே யென்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை; இந்தப் பிழைகளையெல்லாம் மன்னித்து நம்மைக் காப்பவர் நமது நாயகனேயன்றி வேறொருவருமிலர், அவன் திருவடியை யடைவதே தகுதியான காரியமென்று துணிந்து அவனையடைந்து அவன் பதத்திற் சேர்ந்தாள். விழித்தபோது கனவுபோலவும் பூமாலையிற் றோன்றிய பாம்புபோலவும் கிளிஞ்கில் வெள்ளிபோலவும் பஞ்சபூத விகாரங்கள்யாவும் ஓட,மாயையும்நீங்கினபிறகு, மிக்க ஒளியை

யுடைய பிரபோதன் காட்சி காணப்படுபொருள் காண்பவன் என்னும் விகற்பமுண்டாக மோகனுதியர் முன் செய்த பிழைகளெல்லாம் பிழையாயொழியவும் தன் தந்தை நினைத்தபடியே நிறைவேற்றவும் அழிவற்ற அகண்டபரிபூரண சிந்மயத்தைத் தழுவிப் பிரகாசித்தான். மானதன் லயிக்கவும் மாயையின் ஆரோபிதங்கள் மறையவும் முடிவில்லாத சிந்மய மூர்த்தியானவன் உபாதியாகியதடை நீங்கப்பெற்றுப் பேரிருளை யழித்து உதயஞ்செய்து விளங்குகின்ற சூரியன்போலப் பேரொளியைப்பரப்பி எவ்விடத்தும் நிறைந்து ஒன்ருகி நின்ருன். பிரபோதன் இவ்வாறு அரசுசெய்யுங் காலத்தில், இவ்வுலகில் அந்தணர் முதலானோர் பெருஞ் செல்வத்தோடு கூடியிருந்தும் புளியம்பழமும் அதன் தோடும் போல மனத்திலொரு பற்றுமில்லாமல் நித்தியாநந்த நிலையில் நின்ருர்கள். பெரும் பரப்பையுடைய இவ்வுலகத்தில் மெய்ஞ்ஞான விளக்கமென்னும் இந்தக் கதையை ஒருதரம்படிப்போரும் அறிவுண்டாகக்கேட்போரும் இம்மையில் பெரும்போகங்கள் அநுபவித்து மறுமையில் அகண்ட பரிபூரண சச்சிதாநந்த சாகரத்தில் மூழ்குவார்கள்.

இது பந்தம், இது மோக்ஷம், இது சரீரத்திலுள்ள சிவன், இதுபரம், இந்தச் சிவபரங்கள் ஒன்ருதற்குரிய முறைமையிது, என்று பிறப்பிறப்புக்க ளொழியும்படி அங்கை நெல்லிக்கனிபோலக் காட்டின ராகவாநந்தனென்னும் கருணாநிதியின் திருவடி வாழ்க.

தம்மையடுத்த தொண்டரது பெரும் பவமும் அலகையின் முலைப்பாலோ டுயிரும் கவர்ந்து, என் வினையும் பெருஞ்சகடும் மருதும் சாய்த்து, கோவியர்களுடுத்தகலையும் சிறியேனுரைத்த கலையும் கொண்டு எனக்குப் பேரின்பத்தை யருள்செய்த ராஜகோபாலரது திருவடித் தாமரைமலர்கள் வாழ்க.

தமிழ்ப் புலவர்க்கும், வடநூற் புலவர்க்கும் பொருள் விரித்துரைத்து, சீதா நாயகனாகிய ஸ்ரீராமபிரான் போல நீதிச்செங்கோல் செலுத்தித் திசையிலுள்ளவரெல்லாரையுங் காப்பாற்றி, வேதப்பனுவலாகிய மெய்ஞ்ஞான விளக்கத்தால் உலகத்தை விளங்கச் செய்கிற எமது மாதைத் திருவேங்கடநாத மறையோன் வாழ்க வாழ்க.

பிரபோதன் முடிசூடு சருக்கம் முற்றிற்று.

---

## பிரபோத சந்திரோதய வசநம்

முற்றிற்று.



